# சிவாகம சூக்தி மஞ்ஜரீ

## (சிவாகம நல்மொழிப் பூங்கொத்து)

(324 சூக்திகள் மூலமும் & தமிழில் உரைகளும்)



தொகுப்பு & உரையாசிரியர்
சிவஸ்ரீ. விஜய. சோமசேகர சிவாசார்யார், M.A.,

வெளியீடு
சிவமஹிமா டிரஸ்ட் &
சிவாகம வித்யாபீடத்தின் உத்தரபாக வித்யார்த்திகள், சென்னை-33.

உ
குருவருள் துணை

# சிவாகம ஸூக்தி மஞ்ஜரீ

## (சிவாகம நல்மொழிப் பூங்கொத்து)

### (தமிழில் மூலமும் உரையும் ✶ 324 ஸூக்திகள்)



**தொகுப்பாசிரியர் & உரையாசிரியர்**

ஆகம ப்ரவீணர், வியாகரண சிரோமணி, சைவாகமக்ஞசூடாமணி, சைவாகம வித்வான், வ்யாகரண விசாரதா, சிவாகம ஸார்வபௌம:, சிவஸம்வித் ஸபர்யா பாராவாரீணர், சிவாகம அருட்செல்வர், ஸம்கிருத சேவாரத்தினம், சிவாகம வாசஸ்பதி, வாஸ்து வித்தகர், சைவாகமஸ்ரீ:, ஆகம கல்பத்ரும:, ஆகம வித்தகர், சிவாகம வித்யாரத்னம், சாக்தயாக சாம்ராட், வைதிகசைவ ரக்ஷாமணி, சைவாகம பரீக்ஷாதிகாரீ, யாக ஸர்வஸாதக திலகம், சாஸ்தா உபாஸகர், அகோரசிவம் என்கிற

**சிவஸ்ரீ. விஜய. சோமசேகர சிவாசார்யார்**

குருமுதல்வர். சிவாகம தலைமையாசிரியர். சிவாகம வித்யாபீடம்.
மேற்குமாம்பலம், சென்னை 33.

அச்சுபரிசோதகர்

அகோரசிவாசார்யர். வ்யாகரண சிரோமணி,
பிரம்மஸ்ரீ. **Dr. S. அருணஸுந்தர குருக்கள்** M.A., M.Phil., Phd.,
துறைத்தலைவர், வ்யாகரணப் பிரிவு. சென்னை ஸம்ஸ்க்ருதக் கல்லூரி.
மயிலாப்பூர், சென்னை–4.

**வெளியிடுவோர்**

**சிவமஹிமா டிரஸ்ட்** (பதிவு) **&**

**சிவாகம வித்யாபீடத்தின் உத்தரபாக வித்யார்த்திகள்**

நெ.2/3, கோகுலம் காலனி, மேற்குமாம்பலம், சென்னை–600033.

*சிவஸ்ரீ. வி. சோமசேகர சிவாசார்யார் அவர்களின் மணிவிழாவிற்கான ஆகமகல்பத்ருமோத்ஸவத்தில் 14-07-2018 அன்று வெளியிடப்பட்டது.*

## நூல்விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின்பெயர், தலைப்பு | : | சிவாகம ஸூக்தி மஞ்ஜரீ |
| நூலின் துறை | : | சைவசமய ஆகமத் துறை |
| நூலின் வகை | : | ஆகமமரபுசார்ந்த தொகுப்புநூல் |
| நூலின் பொருள் | : | சைவாகம சுபாஷிதங்கள் (நல்மொழிகள்) |
| நூலில் மொழி | : | தமிழ் & ஸம்ஸ்கிருதம் |
| நூலில் எழுத்து | : | தமிழ்எழுத்து, (க்ரந்தம்) |
| நூல்தொகுப்பாசிரியர் & நூல் வடிவமைப்பு | : | சிவஸ்ரீ.வி.சோமசேகர சிவாசார்யார் M.A., |
| அச்சு பரிசோதகர் | : | Dr.S.அருணசுந்தர குருக்கள், M.A., M.Phil., Phd., |
| நூலின் பதிப்புரிமை | : | நூலாசிரியருக்கே உரியது. |
| கணினி அச்சுபதிப்பு | : | அ. கணேஷ், சூளைமேடு, சென்னை. |
| நூல் அளவு | : | 8.5" x 5.5" |
| அச்சிட்ட எண்ணிக்கை | : | 1000 பிரதிகள் |
| பதிப்புகாலம் ஆண்டு | : | ஜூலை 2018 |
| நூல் பதிப்பு | : | முதற்பதிப்பு |
| நூலின் பக்கங்கள் | : | 220 பக்கங்கள் |
| வெளியீடு | : | சிவமஹிமா டிரஸ்ட் (பதிவு), சென்னை–33. |
| SMT வெளியீடு வரிசைஎண். | : | எண் 1 (முதலாம் நூல்) |
| அச்சகம் | : | ஓம் டிஜி ஓர்க்ஸ், சென்னை–94. |
| நிதியளித்த நிறுவனம் | : | சிவமஹிமா டிரஸ்ட், மேற்கு மாம்பலம் |
| வெளியீட்டு விழா | : | மணிவிழாவின் ஆகமகல்பத்ருமோத்ஸவம் |
| வெளியிட்ட நாள் | : | 14.07.2018 |
| வெளியிட்டோர் | : | சிவமஹிமா டிரஸ்ட் & சிவாகம வித்யார்த்திகள் |
| புத்தகத்தின் விலை | : | தர்மப்ரசார விலை ரூ.300.00 |
| புத்தகம் கிடைக்கும் இடம் | : | சிவாகம வித்யா பீடம் (SVP) |
| நூலைபெறத் தொடர்புக்கு | : | நெ.2/3, கோகுலம் காலனி, மேற்குமாம்பலம், சென்னை–33. |
| தொலைபேசி எண்கள் | : | 9840299352 / 9940201849. 9840151409 / 044–24895115. |

உ

### துவாதச ஜ்யோதிர்லிங்க ஸ்துதி:

ஸௌராஷ்ட்ரே ஸோமநாதம்ச ஸ்ரீசைலே மல்லிகார்ஜுனம்.
உஜ்ஜயின்யாம் மஹாகாளம் ஓங்காரம் அமலேச்வரம்.
பரல்யாம் வைத்யநாதம் ச டாகின்யாம் பீமசங்கரம்.
ஸேதுபந்தே து ராமேசம் நாகேசம் தாருகாவனே.
வாராணஸ்யாம் து விச்வேசம் த்ரயம்பகம் கௌதமீதடே.
ஹிமாலயே து கேதாரம் க்ருஷ்ணேச்வரம் சிவாலயே.
ஏதானி ஜ்யோர்திர்லிங்கானி ஸாயம் ப்ராத: படேன் நர:
ஸப்தஜன்ம க்ருதம் பாபம் ஸ்மரணேந விநச்யதி.

## நூலில் உள்ளடக்கம்





உ

ஸ்ரீ குருப்யோ நம:

# ஆதிசைவ ஸம்ப்ரதாய குருவந்தனம்

நமோ ப்ரம்மபதார்த்தாய லோகானாம் ஸித்திஹேதவே.
ஸச் சிதா னந்த ரூபாய சிவாய பர மாத்மனே.

ஸதாசிவம் அனந்தம் ச ஸ்ரீகண்டம் புனர் அம்பிகாம்.
குஹம் விஷ்ணும் ச தாதாரம் குரூன் ஸப்த ஸமாச்ரயே.

குருர் பிரம்மா குருர் விஷ்ணுர் குருர் தேவோ மஹேச்வர:.
குருஸ் ஸாக்ஷாத் பரம் ப்ரம்ம தஸ்மை ஸ்ரீ குருவே நம:.

குரவே ஸர்வ லோகானாம் பிஷஜே பவ ரோகினாம்.
நிதயே ஸர்வ வித்யானாம் தக்ஷிணா மூர்த்தயே நம:.



ஸ்ரீகண்ட வம்சோததி பூர்ணசந்த்ரம்
ஸ்ரீகண்ட சாஸ்த்ரார்த்தவிதம் முநீந்த்ரம்.
ஸ்ரீகண்ட பாவாஞ்சித யக்ஞஸூத்ரம்
ஸ்ரீகண்ட மாசார்ய மஹம் பஜாமி.

தூர்வாஸ கௌசிக விரிஞ்சி ம்ருகண்டு புத்ர
தேவேந்த்ர பாண ஹரி சக்தி ததீசி ராமான்.
கண்வாத்ரி பார்கவ ப்ருஹஸ்பதி கௌதமாதீன்
புண்யான் இமான் பரம பாசுபதான் நமாமி.

சுத்த ஸ்படிக ஸங்காசான் மந்தஸ்மித முகாம்புஜான்
வ்யாக்யா புஸ்தகஸம்யுக்தான் சிவஞான ப்ரபோதகான்.
குரூன் பராபரான் ஸர்வான் குருவம்ச க்ரமாகதான்
அஸ்மத் ஆசார்ய பர்யந்தான் வந்தே தேசிக புங்கவான்.

சிவம் சக்திம் கணாதீசம் குஹம் வாகீச்வரீம் க்ரமாத்.
தூர்வாஸஸம் அஹம் வந்தே பைங்களாத்யாம்ச்ச தேசிகான்.

தூர்வாஸாப் பிங்களஸ் சைவ உக்ரஜ்யோதிஸ் ஸுபோதக:.
ஸ்ரீகண்டோ விஷ்ணுகண்டஸ் ச வித்யாகண்டஸ் ததைவ ச.
ராமகண்டோ ஞானசிவோ ஞானசங்கர ஏவச.
ஸோம சம்புர் ப்ரம்ம சம்புர் த்ரிலோசன சிவஸ் ததா.
அகோர சிவ ஏவாத ப்ராஸாத சிவ ஏவச.
ராமநாத சிவஸ் சைவ ஈசான சிவ ஏவச.
வாருணாக்ய சிவஸ்சைவா(அ)ஷ்டாதசா சார்யபுங்கவா:.
ஏதைர் திவ்யைர் சிவாசார்யைர் பத்ததிப் பரிபாஷிதா:.
தேப்யோ நித்யம் நமோ திவ்ய தேசிகேந்த்ரரேப்ய ஏவச.
ஸித்தாந்த மார்க்கதர்சிப்யோ ஆசார்யேப்யோ(அ)ஸ்து மே நதி:.

கேயூர குண்டல கிரீட விபூஷிதாங்கம்
ஹஸ்தோத்பலம் கடிகரம் த்ருத ராஜவேஷம்.
ருத்ராக்ஷ ருத்ரஜப பூதி லலாட பாஜம்
த்யாயேத் த்ரிபங்க சிவசுந்தர மூர்த்தி ரூபம்.



# இறை வணக்கம் & இஷ்டதேவதா வந்தனம்

ஓங்காரம் பிந்துஸம்யுக்தம் நித்யம் த்யாயந்தி யோகின:.
காமதம் மோக்ஷதம் சைவ ஓங்காராய நமோ நம:.



## ஸ்ரீ விக்னேச்வரர் ஸ்துதி:

விக்னேசோ வ: ஸ பாயாத் விஹ்ருதிஷு ஜலதீன்
புஷ்க ராக்ரேண பீத்வா.
யஸ்மின் உத்ருத்ய தோயம் வமதி தத் அகிலம்
த்ருச்யதே வ்யோம்னி தேவை:.
க்வாப் யம்ப: க்வாபி விஷ்ணு: க்வசந கமலபூ:
க்வாப் யநந்த: க்வச ச்ரீ:
க்வாப் யௌர்வ: க்வாபி சைலா: க்வசந மணிகணா:
க்வாபி நக்ராதி ஸத்வா:.





## ஸ்ரீ நடராஜர்துதி:

க்ருபாஸமுத்ரம் சுமுகம் த்ரிணேத்ரம்
ஜடாதரம் பார்வதி வாமபாகம்.
ஸதாசிவம் ருத்ர மனந்தமூர்த்திம்
சிதம்பரேசம் ஹ்ருதி பாவயாமி.



## ஸ்ரீ மஹாசாஸ்தா துதி.



ஆசானுரூப பலதம் சரணாரவிந்த
பாஜாமபார கருணார்ணவ பூர்ணசந்த்ரம்
நாசாய ஸர்வ விபதா மபி நௌமி நித்யம்
ஈசான கேசவபுவம் புவனைக நாதம்.



## ஸ்ரீ ராஜாராமர் துதி

ராமோ ராஜாமணிஸ் ஸதா விஜயதே ராமம் ரமேசம் பஜே
ராமேணா(அ)பி ஹதா: நிசாசர சமூ: ராமாய தஸ்மை நம:.
ராமாத் நாஸ்தி பராயணம் பரதரம் ராமஸ்ய தாஸோ(அ)ஸ்மி யஹம்
ராமே சித்த லய: ஸதா பவது மே போ! ராம! மாம் உத்தர.



லோகாபி ராமம் ரண ரங்க தீரம். ராஜீவ நேத்ரம் ரகுவம்ச நாதம்.
காருண்யரூபம் கருணாகரம் தம். ஸ்ரீராமசந்த்ரம் சரணம் ப்ரபத்யே.



## சைவாகம ஆசார்ய வந்தனம்.

ஸ்ரீமத் பஞ்சரிஷீந்த்ர கோத்ர தனுஜான் பஞ்சானனைர் தீக்ஷிதான்.
லிங்காக்னி சூர்ய கலச ஸ்வாத்மார்ச்சனா பூஷணான்.
சைவாசார்யவரான் ஸதா பசுபதிம் கால த்ரயேப் யர்ச்சகான்
ஸத் பக்தான் சிவமானஸான் ஹ்ருதி பஜே சைவாகமோத்தாரகான்.



## குருவந்தனம்

குரும் கணபதிம் ஸ்கந்தம் ஸாம்பம் ச பரமேச்வரம்.
வந்தே வாணீம் மஹாலக்ஷ்மீம் இஷ்டகாம்யார்த்த ஸித்தயே. 1

## மங்களம்

நத்வா குருபத த்வந்த்வம் சோதித்வா சாஸ்த்ர ஜாலகம்.
கத்யதே சுகபோதாய சிவாகம சுபாஷிதம். 2

ஸ்ரீ அண்ணாமலையார் துணை



ஓம் நமோபகவதே அருணாசலேச்வராய சிவாய நம:

ஏகாகார ஸமஸ்த லோக ஜனகம் ஹேமாத்ரி பாணாஸனம்
நாகாவாஸ கிரீடகுண்டலதரம் நாகேந்த்ர பூஷோஜ்வலம்.
ராகாசந்த்ர ஸமானகாந்தி வதனம் ராஜீவ நேத்ரார்ச்சிதம்
சோகாரண்ய தவானலம் சுபகரம் சோணாத்ரிநாதம் பஜே.

## அண்ணாமலையாரின் சோனாத்ரிநாத ஸ்துதி அஷ்டகம்

சிவாய ருத்ராய சிவார்ச்சிதாய மஹானுபாவாய மஹேச்வராய.
ஸோமாய ஸூக்ஷ்மாய சுரேச்வராய **சோணாத்ரிநாதாய நமச்சிவாய.** 1

திக்பால நாதாதி விபாவநாய சந்த்ரார்த்த சூடாய ஸநாதனாய.
ஸம்ஸார துக்கார்ணவ தாரணாய **சோணாத்ரிநாதாய நமச்சிவாய.** 2

ஜகன் நிவாஸாய ஜகத் ஹிதாய ஸேநாநி தானாய ஜயப்ரதாய.
பூர்ணாய புண்யாய புராதனாய **சோணாத்ரிநாதாய நமச்சிவாய.** 3

வாகீச வந்த்யாய வரப்ர தாய உமார்த தேஹாய கணேச்வராய.
சந்த்ரார்க்க வைச்வாநரலோசனாய **சோணாத்ரிநாதாய நமச்சிவாய.** 4

ரதாதிருடாய ரஸாதராயு வேதாச்வ யுக்தாய விதி ஸ்துதாய.
சந்த்ரார்க்க சக்ராய சசிப்ரபாய **சோணாத்ரிநாதாய நமச்சிவாய.** 5

விரிஞ்சி ஸாரத்ய விராஜிதாய கிரீந்த்ர சாபாய கிரீச்வராய.
பாலாக்னி நேத்ராய பணீச்வராய **சோணாத்ரிநாதாய நமச்சிவாய.** 6

கோவிந்தபாணாய குணத்ரயாய விச்வஸ்யநாதாய வ்ருஷத்வஜாய.
புரஸ்ய வித்வம்ஸந தீக்ஷிதாய **சோணாத்ரிநாதாய நமச்சிவாய.** 7

ஜராதி வர்ஜ்யாய ஜடா தராய அசிந்த்ய ரூபாய ஹரி ப்ரியாய.
பக்தஸ்ய பாபௌக விநாசநாய **சோணாத்ரிநாதாய நமச்சிவாய.** 8

ஸ்துதிம் சோணா சலேசஸ்ய படதாம் ஸர்வ ஸித்திதம்.
ஸர்வ ஸம்பத் ப்ரதம் பும்ஸாம் ஸேவந்தாம் ஸர்வதோ ஜநா:.

ஓம் நமச்சிவாய்யாம்.

## ஸதாசிவ ஸ்தவ தசகம். (ரௌரவாகமம்)

ஸுராதிபம் நமஸ் க்ருத்ய சசாங்க க்ருத சேகரம்.
கபால மாலிநம் தேவம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 1

காலேச்வரம் மஹாகாலம் காலஞ்ஜர நிவாஸிநம்.
கால க்ருத் காலதாதாரம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 2

ஸர்வக்ருத் ஸர்வவேத்தாரம் ஸர்வக்ஞம் அபராஜிதம்.
ஸர்வபூதாத்ம பூதஸ்தம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 3

யோ (அ)ஸ்ருஜத் ஸர்வபூதாநி ப்ரம்மாத்யான்ச சுராசுரான்.
தமஹம் லோககர்த்தாரம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 4

வரம் வரேண்யம் வரதம் வரிஷ்டம் வர வாஹனம்.
வனமாலா தரம் தேவம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 5

ப்ரீதிமத் ப்ரீதி தாதாரம் ஸுப்ரியம் ப்ரிய தர்சனம்.
உமாப்ரியம் ஸதா காந்தம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 6

தர்மா தர்ம மயம் தேவம் சுக துக்க பலோதயம்.
பந்த மோக்ஷ ப்ரணேதாரம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 7

மனோ புத்தி ரஹங்கார தன்மாத் ரேந்த்ரிய கோசரம்.
ப்ரதான புருஷேசானம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 8

யம் த்யாயந்தி மஹாத்மானோ முநயஸ் ஸம்சித வ்ரதா:
தம் ஓங்காரபரம் ஸூக்ஷ்மம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 9

ஸூக்ஷ்மம் ஸர்வகதம் நித்யம் ஸர்வவித்யே ச்வரேச்வரம்.
ஸர்வ தத்வாச்ரயம் தேவம் ப்ரணதோ (அ)ஸ்மி ஸதாசிவம். 10

ஓம்நமோபகவதே பரமஹம்ஸாய பரமகுரவே ஸதாசிவாய நம:

நமச் சிவாப்யாம் நவ யௌவநாப்யாம்
பரஸ்பராச்லிஷ்ட வபுர் தராப்யாம்
நகேந்த்ர கன்யா வ்ருஷ கேதநாப்யாம்
நமோ நமச் சங்கர பார்வதீப்யாம்.



ஓம் ஸ்ரீபவானீசங்கராப்யாம் நம:
சுபமஸ்து நித்யம்

ஸ்ரீபெரியாண்டவர் துணை

மிருத்யுஞ்ஜயாய ருத்ராய நீலகண்டாய சம்பவே.
அம்ருதேசாய சர்வாய மஹாதேவாய தே நம:



## ஸ்ரீமிருத்யுஞ்ஜயேச்வரர் ஸ்தோத்திரம்
(மார்க்கண்டேயர் அருளியது)

ருத்ரம் பசுபதிம் ஸ்தாணும் நீலண்டம் உமாபதிம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 1

காலகண்டம் காலமூர்த்திம் காலாக்னிம் காலநாசனம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 2

நீலகண்டம் விரூபாக்ஷம் நிர்மலம் நிருபத்ரவம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 3

வாமதேவம் மஹாதேவம் லோகநாதம் ஜகத்குரும்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 4

 

தேவதேவம் ஜகந்நாதம் தேவேசம் வ்ருஷப த்வஜம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 5

த்ரியக்ஷம் சதுர்புஜம் சாந்தம் ஜடாமகுட தாரிணம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 6

பஸ்மோத் தூளித ஸ்ர்வாங்கம் நாகாபரண பூஷிதம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 7

அனந்தம் அவ்யயம் சாந்தம் அக்ஷமாலா தரம் ஹரம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 8

ஆனந்தம் பரமம் நித்யம் கைவல்ய பத தாயினம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 9

அர்தநாரீச்வரம் தேவம் பார்வதீ ப்ராண நாயகம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 10

ப்ரளய ஸ்திதி கர்த்தாரம் ஆதி கர்த்தாரம் ஈச்வரம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 11

வ்யோமகேசம் விரூபாக்ஷம் சந்த்ரார்த்த க்ருத சேகரம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 12

கங்காதரம் சசிதரம் சங்கரம் சூல பாணிநம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 13

ஸ்வர்காபவர்க தாதாரம் ஸ்ருஷ்டி ஸ்தித் யந்த காரிணம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 14

கல்பாயுர் தேஹி மே புண்யம் யாவத் ஆயுர் அரோகதாம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 15

சிவேசானம் மஹாதேவம் வாமதேவம் ஸதாசிவம்.
நமாமி சிரஸா தேவம் கிம் நோ ம்ருத்யுக் கரிஷ்யதி. 16

மார்க்கண்டேய க்ருதம் ஸ்தோத்ரம் யப் படேத் சிவ ஸந்திதௌ.
தஸ்ய ம்ருத்யு பயம் நாஸ்தி ஸத்யம் ஸத்யம் வதாம் யஹம்.

உ
குருவருள் துணை



# தொகுப்பாசிரியர் முன்னுரை



ஸ்ரீராம ஸௌமித்ர ஜடாயு வேத
ஷடானனாதித்ய குஜார்ச்சிதாய
ஸ்ரீ நீலகண்டாய தயாமயாய
ஸ்ரீவைத்யநாதாய நமச்சிவாய.

~~~~~~~~~~~~~~~

யம் பிரம்ம வேதாந்த விதோ வதந்தி
பரம் ப்ரதானம் புருஷம் ததா (அ)ன்யே.
விச்வோத்ததே காரண மீச்வரம் வா
தஸ்மை நமோ விக்ன விநாயகாய.

~~~~~~~~~~~~~~~

ஷண்முகம் ஷட்குணம் சைவ குமாரம் குலபூஷணம்.
தேவஸேநாபதிம் வந்தே ஸர்வ கார்யார்த்த ஸித்தயே.

~~~~~~~~~~~~~~~

சிவவீர்ய ஸமுத்பூதம் ஸ்ரீநிவாஸ தநூத்பவம்.
சிகிவாஹாநுஜம் வந்தே சாஸ்தாரம் குலரக்ஷகம்.

~~~~~~~~~~~~~~~

உலகெலாம் வாழும் உயிர்களை உய்விக்கவும், உடலுடையோர் விரும்புகின்ற புருஷார்த்தமென்னும் அறம், பொருள், இன்பம், வீடுபேறு, எனும் இம்மைக்கும் மறுமைக்குமான நால்வகைப் பயன்களை உயிர்கள் பெறவும், படைப்புகாலத்தில் ஆத்மாக்கள் தனது ஞானக்ரியாரூபமான சைதன்யத்தன்மையை உணர்ந்திடவும், நல்லறச் செயல்களைப்புரிந்து பெறுகிற சிவஞானத்தால் பரமுக்தியைப்பெறவும், உயிர்களின் பரமஆப்தரான பரமேச்வரன் முதலில் தமதுஞான வெளிப்பாடான வேதங்களையும், அதன்

 

ஸாராங்களான சிவாகமங்களையும் முதல்வன் முதலில், முழு முதல்நூல்களாக அருளிச்செய்தார். ஸநாதனதர்மங்களான, பழையவைதிகசைவத்தின் சமயஅறங்களை, ஆகமநூல்கள் அனைவரும் பின்பற்றும்வகையில் எளியமுறையில் கூறுகின்றன. இவற்றில் முதல்நூலான இல்லாதவை பிறநூல்களில் இருக்காது. வெளியிடப்பட்ட ஆகமநூல்களின் கடல்அளவில் தற்போதுள்ளது கையளவேயாகும். ஆதலால் அரிதானதும் உயர்வானதுமாக உள்ள சைவாகமங்களில் பலதுறையைச் சார்ந்தசெய்திகள் ஒப்பற்றவையாக விளங்குகின்றன. இவைகளிலுள்ள பொன்மொழிகள் பலவும் ஒவ்வொரு காலகட்டங்களிலும் பலவகையான நூல்களாக உருப்பெற்று விளங்குகின்றன.

சைவாகமங்களில் காணப்படுகிற பொதுவானசெய்திகள் எல்லாம் சுபாஷிதங்களாக மனிதகுலத்தினரின் மேன்மைக்கு என்றென்றும் உதவிடும் அரியஅறிவுச்செல்வங்கள் ஆகும். இவற்றை யாவரும் இளம்பருவத்திலேயே – சைவநீதிசாஸ்த்திரமாக அறிந்தால், இவற்றால் என்றென்றும் அவர்களுக்கு தமதுகொள்கைளில் மாறாத மனஉறுதி ஏற்படும், சிவநெறியாம் நல்வழியான, மேன்மைமிக்க சைவசமயநீதிகள் உலகமெல்லாம் தழைத்துவிளங்குவதற்கு, இது உதவும் எனலாம்.

சிவாகமநூல்களை சாதாரணமாக கோயில்பூஜைத் தொடர் பானவைகளை மட்டுமே கூறுகிறதாயும், குறிப்பிட்ட ஒரு சமூகம் அல்லது ஒருசாராரின் பயன்பாட்டுக்கு மட்டுமே உரியதாயும், கருதுவது கூடாது. இக்காலத்தில் சைவாகமங்களில் அரியபல பொருள்களைப் பின்பற்றி, பலரும்ஆய்வுசெய்து, ஆகமத்துறையில் முனைவர்பட்டம் பெற்றுவருகின்றனர். இவ்விதமாக என்றுமே ஆன்மநலம்தரும் அறிவுக்களஞ்சியமாகவுள்ள ஆகமங்களில், அனைத்துசொல்லுமே அனைத்து சுலோகங்களுமே ஒருவகையில் நீதியாக போற்றத்தக்கதே ஆகும். இருப்பினும், வாழ்க்கைக்கு அவைகளுள் யாவரும் இருபாலரும் எக்காலத்திலும் பயன்படுத்தத்தக்க, அறியப்படவேண்டிய, பொதுவானநற்கூற்றுகள் சிலவற்றை அடிப்படையாக முக்கியமானதாக எனதுசிற்றறிவிற்கு தோன்றியவைகளையும், எனது குருநாதர்களிடமிருந்து கேள்வியுற்றவகைகளையும் எனதுபாடக் கைஏடுகளில் சான்றாகக்கூறி இருந்தவற்றையும், வருங்காலமாணவர்களுக்கு, சிறுசிறு இலக்கணங்களாக எளிதில் மனதில் பதிவுசெய்துக்கொள்ளும் வகையில், சிவனாரின் ஆகமசூக்திகளைத் தொகுத்து எழுதியுள்ளோம். சமஸ்கிருதமொழியிலும், கிரந்தஎழுத்திலும் உள்ளதால் அர்ச்சகத்துறை யினருக்கு மட்டுமே உதவும்வண்ணம் சமூகசங்கத்தால் சிலநூல்கள் வெளிவந்துள்ளன. ஆனால் இந்நூலானது சமஸ்கிருதஎழுத்து மற்றும்மொழியை அறியாதவர்களுக்கும், ஆகமஞானம் ஆகமநீதிகள் சென்றடைவிக்கும் நோக்கமாக, முற்றிலும் தமிழ்எழுத்திலேயே சான்றும் உரையும், பொதுவான செய்திகள் மட்டுமே சிறுதலைப்பில் பொருள்கள்யாவும் உள்ளவாறு தொகுத்து எழுதி, விளக்கப்பட்டுள்ளது. வேதத்தில் சூக்தம்என

கூறப்படுவதுபோலவே, ஆகமத்தில் நல்மொழிகளான சுபாஷிதங்கள் சூக்தி = நற்கூற்று எனப்படுகிறது. நான்படித்ததில் பிடித்தவையான இவற்றை ஒருஇழைநூலில் விருப்பமான மலர்களாகக்கொண்டு தொகுத்துக்கட்டி, பரமேஸ்வரனின் பதமலர்களில் வண்ணப்பூங்கொத்தாக சூக்திமஞ்சரீ என்றபெயரில் ஸமர்ப்பித்து சிவனை வணங்குகிறேன். ஆகமஅறிஞர்கள், இதில்காணும் பிழைகளைப்பொருத்துப்போக்கிட உதவவேண்டுகிறேன். 14.07.2018 அன்று எமது மணிவிழாவிற்காக நடத்தப்பெற்ற ஆகமகல்பத்ருமோத்ஸவத்தில் ஆகமகருத்தரங்கில், சென்னை மேற்குமாம்பலத்தில் இயங்கி வருகிற சிவமஹிமா டிரஸ்டும் அதன் சிவாகம வித்தாயபீடத்தின் சைவாகமஉத்தரபாகப்யிற்சிபெறும் எமதுமாணவர்களும் இணைந்து எமது 60ம்அகவைநிறைவைய்தியதை முன்னிட்டு அவர்களின் இக்குறிப்பேட்டுச்செய்திகளை பொதுநலங்கருதி ஒருநூலாக வெளி யிடுவதை உளமாரப்பாராட்டி அவர்களுக்கு எமது இதயங்கனிந்த நன்றியை வெளியிடுபவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூலுக்கு ஆசியுரை, வாழ்த்துரை அணிந்துரைகளைவழங்கியும், வாழ்த்தியும், எமக்கு ஊக்கமளித்த மஹநீயர்களான ஆகமஅறிஞர்பெருமக்களுக்கு பணிவான எனதுநமஸ்காரத்தையும், நெஞ்சார்ந்த நன்றியையும் தெரி வித்துக் கொள்கிறேன். இந்நூலை கணிணியில் அச்சிட்டுஉதவிய அன்பர் திரு. அ. கணேஷ் அவர்களுக்கு எனது நல்லாசிகளையும் நன்றிகளையும் தெரிவித்துக்கொள்கிறேன். இவற்றைக் கண்ணுறும், வாசகர்கள் சைவாகமநீதிகளை பின்பற்றி, ஆசாரசீலர்களாகவாழ்ந்து, ஒருதடையும் குறையுமின்றி இறையருளைப்பெற்று, என்றும் இன்புற்றுவாழ்ந்திட இந்நூல்உதவும் என்று கருதுகிறேன். சைவசமயநெறிகளை யாவரும்பயின்றும், இதில்உள்ளவாறு அவற்றை பின்பற்றியும், ஸகலநலன்களையும்பெற்று உய்வுபெற்றிட எனதுஇஷ்டதெய்வமான ஸ்ரீசாஸ்தாவின் திருவருளை சிந்தித்து பிரார்த்திக்கின்றேன்.

இப்படிக்கு,
வி. சோமசேகரசிவாசார்யர்
சென்னை.



சாஸ்தாரம் ம்ருகயாச்ராந்தம் அச்வாரூடம் கணாவ்ருதம்.
பாநீயார்த்தம் வனாத் ஏத்ய சாஸ்த்ரே தே ரைவதே நம:.

 

சிவாகமவாசஸ்பதி
**சிவஸ்ரீ. C.E.ஷண்முக சுந்தர குருக்கள்**
77B, ஏகாம்பரநாதர் சந்நதி தெரு, காஞ்சீபுரம் 631 502.

# ஆசியுரை

உமாலிங்கன ஸங்க்ராந்த குசகங்கண முத்ரிதம்.
லிங்கம் ஏமகாம்ரநாதஸ்ய ஸைகதம் ஸமுபாஸ்மஹே.

நாம் எல்லோரும் வாழும்நெறிமுறைகளும், தெளிந்து உணரக்கூடிய விஷயங்கள்யாவும் சுருதி, ஸ்ம்ருதி, சிவாகமம், புராணம் போன்றவற்றில் விரிவாக காணப்படுகின்றன. தற்கால வாழ்வியலில் எல்லாவற்றையும் தெரிந்து உணர்ந்துகொள்வது என்பது, எல்லோருக்குமே துர்லபமாக உள்ளது. தர்மசாஸ்திரம், புராணம், போன்றவற்றில் கூறப்பட்ட பல அரியவிஷயங்கள் சிவாகமங்களிலும் கூறப்பட்டுள்ளது என்பதனை **சிவாகம ஸூக்தி மஞ்ஜரி** என்ற இந்நூலில் ஆசிரியர் இலக்கணத்துடனும் விளக்கத்துடனும் கூறியிருப்பது தற்கால இளைஞர்களுக்கு ஓர் வரப்ரஸாதமாகும். சிவனால் கூறப்பட்டவையாவும் உயிர்கள் உய்யும் பொருட்டேயாகும்.

எமது ஆப்தநண்பரும், சைவாகமக்ஞசூடாமணி, வ்யாகரண சிரோமணி போன்ற பல விருதுகளை பூஷணமாக அணிந்தவரான ப்ரம்மஸ்ரீ, விஜய சோமசேகர சிவாசார்யார் அவர்கள் பொருப்பேற்று நடத்தும் செயல்கள்யாவும், விதிமுறைகளுக்கு மாறாமலும், இப்படித்தான் செய்யவேண்டும் என இளைஞர்களுக்கு போதிப்பதாகவும் அமைந்துள்ளது குறித்து யாம் வியந்தும் மகிழ்ந்தும் உள்ளோம். அன்னாரின் நிர்வாகத்தில் நடந்த நிகழ்ச்சிகளில் அடியேனும் கலந்துகொண்டு மகிழ்ந்து அனுபவித்தது இறைவனின் திருவருளேயாகும்.

சிலாஸங்கிரஹணம், ஆத்யேஷ்டிகாஸ்தாபனம், பேளாஸ்தாபனம், பதவின்யாஸம், தடாகஸ்தாபனம், க்ராமசாந்தி போன்ற பல அரிய க்ரியைகள் எல்லாவற்றையும் இவர் திறம்பட செய்துள்ளார். இவற்றிலெல்லாம் அன்னாரின் ஆய்வின் பக்குவமும், தெளிவும், அயராத உழைப்பும் மேலோங்கியுள்ளது கண்கூடாகும்.

அவர் இதுவரை சுமார் இருபதுக்கும் மேற்பட்ட நூல்களை வெளி யிட்டுள்ளதானது அனைவருக்கும் பெரும்பயனாக அமைந்தது. அவர் பாடசாலை ஆசிரியராக இருந்து பல சிறந்தமாணாக்கர்களை உருவாக்கியுள்ளார். அவர் தற்போது **சிவமஹிமா டிரஸ்ட்** மூலமாக **சிவாகம வித்யாபீடத்தில்** தலைமை ஆசிரியராக இருந்து பூர்வபாகம்,

உத்தரபாகம் என்ற இருபிரிவு மாணவர்களுக்கும் தகுந்தபோதனை அளித்து தொண்டாற்றிவருகின்றார்.

அன்னாரது ஷஷ்டிஅப்தபூர்த்தி மஹோத்ஸவத்தின் சிகரமாக **ஆகமகல்பத்ருமோத்ஸவம்** என்ற இவ்விழாவானது அவரது சிஷ்ய பரம்பரையினரால் கோலாகலமாக கொண்டாடப்படுகிறது. இவ்விழாவில் அவரால் தொகுத்து வெளியிடப்படும் நூலானது **சிவாகம சூக்தி மஞ்சரி** ஆகும். இந்நூல் முன்னூறு சுபாஷிதங்களைக்கொண்ட அறநெறிநூலாகும். சிவாசார்யகுலத்தவர்கள் அனைவரும் இவற்றை அறிந்தும், தெளிந்தும், உணர்ந்தும் கடைபிடித்தும் ஸ்ரேயஸ்ஸை அடையவேண்டும் என ப்ரார்த்திக்கின்றோம்.

ஆசிரியர் அவர்கள் நமதுகுலத்திற்கும், சைவஉலகிற்கும் மேன்மேலும் பயனுள்ளவகையில் பலநூல்களை தொடர்ந்து வெளியிடவும், சிறந்த மாணவர்களை உருவாக்கவும், எல்லாநலன்களும் பெற்று பூர்ணாபிஷேகம் கண்டருள எல்லாம்வல்ல எம்பெருமான் காமாக்ஷி இடம்கொண்ட ஸ்ரீஏகாம்பரேச்வரரை ப்ரார்த்திக்கின்றேன்.

அன்புடன் வாழ்த்தும்
**C.E. ஷண்முகசுந்தர குருக்கள்**
**காஞ்சீபுரம்.**





உ
Sri Ganapathy Thunai
SAIVA SIDHANTHA, AGMA SAGARAM, Mobile : 9445257471
SIVAGAMA SELVAR, SIVAGAMA ZANABANU,
SIVAGAMA THIRUTHONDAR, SIVAGAMA ZANA BASKARA,
SIVAGAMA RATNAGARAM, ACHARYA CHINTHAMANI, SIVAGAMA VACHASPATI
SALAVA. K.RAJAPPA GURUKKAL,
Heriditary STHANIKAM & SRI EKAMRANATHAR &
SRI KAILASANATHAR DEVASTHANAMS.
BIG KANCHIPURAM-631 502.
Residence : 45/121, Ekamranathar Sannathi Street, Big Kanchipuram.631 502.
Office : 5/11, West Raja Street, Big Kanchipuram. 631 502.

## ஆசியுரை

சிவமஹிமா டிரஸ்ட் மூலம் அனுப்பிய சிவாகம ஸூக்தி மஞ்ஜரி என்கிற ஆகமச் சான்றுகளை உள்ளடக்கிய அருமையான புத்தகம் கிடைக்கப்பெற்றது. இதில் வருங்கால சந்ததிகள் முதல் இப்போதுள்ள குலபெரியோர்களும் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் பல உள்ளன.

நாம் ஸ்நாநம் செய்யும்போது கடைபிடிக்கவேண்டிய நியமங்கள் முதல் போஜநம் செய்யும்வரை எல்லாநித்யநியமங்களும் ஆலயத்தில் கடைபிடிக்க வேண்டிய பக்திபூர்வமான பூஜைக்கே பகவான் பூரண அருள்புரிவார் என்பதும், ஆகமஸ்லோகங்கள் மூலமாகவும் தமிழ் உரையுடனும் விளக்கப்பட்டுள்ளது. ஏற்கனவே உள்ள ஆகமஞானத்துடன் பூரணஞானம் அடைய வழிமுறைகளை ப்ரகாசப்படுத்திவுள்ளது போற்றத்தகுந்ததே. பலஆகமங்களை பலவருடங்கள் படித்துத்தெரிந்துகொள்ளும் ஆகமநுணுக்கங்களுடன், சாஸ்தரஞானமும் சேர்ந்து, ஆய்ந்துஎழுதியது பேற்றத்தகுந்தது. சிவஸ்ரீ. சோமசேகர சிவாசார்யர் அவர்கள் எண்ணற்ற ஆகமநூல்களை எழுதி சைவசமூகத்திற்கு பேருபகாரம் செய்துள்ளார். அவரால் எழுதப்பட்டு அவை பலரால் கடைபிடிக்கப்பட்டு அனேகர் பலன்அடைந்துள்ளார் என்பதில் ஐயமில்லை.

ஒவ்வொரு விஷயமும் பூரணவிளக்கங்களுடன் அங்கங்கு பலஇடங்களில் உள்ள ஸ்லோகங்களை சேர்த்து, ஒரே புத்தகத்தில் ஆத்மார்த்தவிஷயம் முதல் தர்மசாஸ்த்ர விஷயங்களுடன் உள்ளதால் நாம் அனுஷ்டித்து இறைவன் பேரருளைப்பெற வழிவகுக்கிறது இந்த சிவாகம ஸூக்தி மஞ்ஜரி என்கிறநூல். இதனைவெளியிட முயற்சி செய்த சிமஹிமா டிரஸ்ட் மற்றும் உத்தரபாக வித்யார்த்திகளுக்கும், நிறுவனர் பிள்ளையார்பட்டிசீடர் சிவஸ்ரீ. எஸ். மணிகண்ட சிவம் அவர்களுக்கும், மேன்மேலும் வித்யாஞானம் செய்து, சிவபுண்யத்தினால், சகலசௌபாக்கியங்களும் அடைந்து, காமாக்ஷிநாதன் அருளால், மேன்மேலும் புகழ், செல்வம் யாவும் பெற்றுய்ய, இறைவனை ப்ரார்த்தித்து ஆசீர்வதிக்கிறேன்.

இப்படிக்கு,

**சாளவ. க. ராஜப்பா குருக்கள்,** காஞ்சீபுரம்.



உ

ஜெய் குருதேவ் சிவமயம் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி ப்ரசன்னா

சிவாகம விசாரதா – சிவாகம ப்ரவீணா – சிவாகம ஞானத்திலகம்
**சிவஸ்ரீ.அவிநாசி.எஸ்.சுந்தரமூர்த்தி சிவாச்சாரியார்**
குருத்துவம் — முதல் ஸ்தானிகம்
அருள்மிகு அவிநாசிலிங்கேசுவரர் திருக்கோயில், அவிநாசி
முதல்வர், வேத ஆகம சம்ஸ்க்ருத மஹா பாடசாலை, ஸ்ரீஸ்ரீ குருகுலம்
வேத விஞ்ஞான மஹா வித்யா பீடம்,சர்வதேச வாழும் கலை மையம், பெங்களூரு.
**A.S.Sundara Murthy Sivam,**
PRINCIPAL, VEDA AGAMA SAMSKRUTHA MAHA PATASHALA, THE ART OF LIVING INTERNATIONAL CENTRE,
SRI SRI GURUKULAM, 21ST KM, KANAKAPURA ROAD, UDAYAPURA, BENGALURU – 560 082
Contact: 080 67262851, 9008499833, E-Mail: srisrigurukulinfo@gmail.com/ assmsivam@yahoo.co.in

---

Ref. No. VASMP/SSG/PO/457 Date:17.05.2018

உ

ஸ்ரீ குருப்யோநம:

# வாழ்த்துரை

பெறுநர்,

சிவஸ்ரீ S.மணிகண்ட சிவாச்சார்யார்,
நிறுவனர் மற்றும் நிர்வாக இயக்குநர்,
சிவமஹிமா டிரஸ்ட், சிவாகம வித்யா பீடம்,
மேற்கு மாம்பலம், சென்னை–600033.

பேரன்புடையீர்,

வணக்கம் சிவாகமப்ரவீணர், சைவாகமஸ்ரீ, சிவஸ்ரீ.விஜய. சோமசேகர சிவாச்சார்யார் அவர்கள் மணிவிழாவிற்கான ஆகமகல்பத்ருமோத்ஸவம் எனும் விழாவின் ஏற்பாடுகள் பற்றிய விபரம் அறிந்து மகிழ்ச்சி. அவர்களுக்கு எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிய பிரார்த்திக்கின்றோம் இவ்விழாவில் சிவமஹிமா டிரஸ்ட் மற்றும் சிவாகம வித்யாபீடத்தின், உத்தரபாக வித்யார்த்திகள் மூலமாக, மணிவிழா நாயகர் அவர்களால் தொகுத்து, வழங்கப்படும் "சிவாகம சூக்தி மஞ்ஜரி" (சிவாகம நல்மொழிப் பூங்கொத்து) என்னும் நூலை தாங்கள் இந்த விழாவில் வெளியிடுவது குறித்து மிக்கமகிழ்ச்சி அளிக்கிறது.

அன்பர்கள் அனைவரும் நூலில் உள்ள விஷயங்களை எளிமையாக படித்து ஞானத்தை உணர்ந்து கொள்ளும் வகையில் மிகநன்றாக வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்நூல் பாடசாலை மாணவர்களுக்கும் சைவசமய பக்தர்களுக்கும் மிகுந்த பயனுள்ளதாக அமையும் என்பது சிறப்பாகும்.

ஆகமங்களில் உள்ள நடைமுறையில் செய்ய வேண்டிய சிலவிஷயங்கள் மட்டுமல்லாது

உபதேசஸ்ய ஸாமர்த்யாத் ஸ்ரீகுரோச்ச ப்ரஸாதத: !
மந்த்ர ப்ரபாவாத் பக்த்யா ச மந்த்ரஸித்திப் ப்ரஜாயதே !!

போன்ற சிவாகம சாஸ்த்ர ஞானவிஷயங்களை தொகுத்து வெளியிடுவது மிக்கமகிழ்ச்சியை அளிக்கிறது "சிவாகம சூக்தி மஞ்ஜரி" தொகுப்பாசிரியர் சிவஸ்ரீ. விஜய. சோமசேகர சிவாச்சார்யார் மற்றும் நூல் வெளிவர பெருமுயற்ச்சி எடுத்து உதவக்கூடிய டிரஸ்டின், நிர்வாகிகள் அனைவருக்கும், எனது அன்பான வாழ்த்துக்கள் உரித்தாகுக.

நன்றி–நமஸ்காரம்

இப்படிக்கு,

A. S. Sundar 18/5/2018

(A.S.சுந்தரமூர்த்தி சிவாச்சார்யார்)
பிரின்சிபால், வேத ஆகம சம்ஸ்க்ருத மஹாபாடசாலை,
ஸ்ரீ ஸ்ரீ குருகுலம், பெங்களூர் – 82

விளம்பி வருடம், வைகாசி 03ஆம் தேதி
வியாழக்கிழமை, த்விதீயை திதி
17 மே 2018



உ
ஸ்ரீ குருப்யோ நம:
கந்தன் பாதம் கனவிலும் துணை செய்யும்

சிவாகம சிரோமணி, சிவாகம கலாநிதி
சிவஸ்ரீ S.K. ராஜா பட்டர் (எ) சந்த்ரசேகர பட்டர்
ஸ்தானிகர், அருள்மிகு ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமி திருக்கோயில், திருப்பரங்குன்றம்
அர்ச்சகர், அருள்மிகு மீனாக்ஷி - ஸுந்தரேஸ்வரர் திருக்கோயில், மதுரை
முதல்வர், ஸ்ரீ ஸ்கந்தகுரு வித்யாலயம், திருப்பரங்குன்றம்.



# வாழ்த்துரை

## சிவாகம சூக்தி மஞ்ஜரீ - சைவாகமப் பொன்மொழிப் பூங்கோவை

சென்னை, சிவமஹிமா டிரஸ்டின் நிறுவனர் சிவஸ்ரீ மணிகண்ட சிவாசார்யர் அவர்களுக்கு எழுதிக்கொண்டது. தங்களது அறக்கட்டளை நடத்திவரும் சிவாகமவித்யாபீடத்தின் குருமுதல்வரும் சிவாகமப் பேரறிஞருமான போற்றுதலுக்குரிய சிவஸ்ரீ விஜய. ஸோமசேகர சிவாசார்ய ஸ்வாமிகள் அவர்களது மணிவிழாவில் 'சிவாகம சூக்தி மஞ்ஜரீ' என்ற நூல் வெளியிடவிருப்பது மிகச் சிறப்பான ஒன்றாகும்.

பல்லாண்டுகாலமாகப் பேராசிரியராக பல நிறுவனங்களில் பணியாற்றி அனுபவம் பெற்ற ஒரு சிவாகமப் பெருங்கடலாகத் திகழும் சிவாசார்ய ஸ்வாமிகள் அவர்கள் சிவாகமங்களாகிய பெருங்கடலில் மூழ்கி முத்துக்குளித்தவர் என்பதை இந்த சூக்தி மஞ்ஜரியைப் பார்ப்பவர்கள் அனைவரும் உணர்ந்துகொள்வார்கள். அந்த அளவுக்கு சிவாகமங்களாகிய பெருங்கடலின் நன்முத்துக்களாக முன்னூறு மணிகளை அழகாகக் கோர்த்து அருளியிருக்கிறார்கள் ஆசார்யரவர்கள்.

உயர்கல்விநிலையில் சிவாகமங்களைப் பயில விரும்பும் மாணவர்களுக்குப் பாலமாக விளங்கும் ஸ்ரீசிவமஹிமா டிரஸ்டானது சிவமஹிமையினால் பலப்பல அறப்பணிகளைச் செய்யும் ஓர் பெருநிறுவனமாக விளங்கவேண்டும் என்பது எங்களது பேரவா.

ஆசார்யரவர்கள் இதுபோல ஆண்டுக்கு முன்னூறாக இன்னும் ஆகமங்களில் அமுந்தியிருக்கும் நன்முத்துக்களை வெளிக்கொணரும் வண்ணம் அவர்களுக்கு ஸகல செல்வயோகமிக்க பெருவாழ்வு கிடைக்கவும், அதை பதிப்பிக்கும் பணி சிவமஹிமா டிரஸ்டிற்கு என்றும் கிடைக்கவும் மதுரையம்பதியில் வீற்றிருந்தருளும் ஆலவாயண்ணல் மீனாக்ஷி உடனமர் சொக்கநாதப் பெருமானின் திருவடி மலர்களையும், திருப்பரங்கிரிதனில் கோயில்கொண்டருளும் தெய்வானை மணாளன் முருகப்பெருமானின் திருத்தாள் மலர்களையும் போற்றிப்பணிந்து வாழ்த்துகிறோம்.

பேரன்புடன்

K. ராஜா பட்டர்

க. ராஜா பட்டர்
திருப்பரங்குன்றம்






श्रीगुरुभ्यो नमः
ओन्नमो दक्षिणामूर्तये

SIVAGAMA VACHASPATHI, SIVAGAMA KALAMANI
VYAKARANA SIROMANI, VIDHYABOOSHANAM

**Dr. C. KARTHIKEYA SIVACHARIAR** M.A., Ph.D.




Assistant Professor, Dept. of Saivagama
S.V.VEDIC UNIVERSITY, TIRUPATHI.

Managing Trustee : Sri Adi Sankara Veda Agama Vidyalaya Trust.
Secretary : Sri Gnanambika Trust.

Date: 23-05-2018

சிவாப்யாம் நம:

## அணிந்துரை

எல்லாம்வல்ல பரமேஸ்வரரின் பெருங்கருணையினாலும், குருவருளாலும் தற்போது சிவமஹிமா ட்ரஸ்ட் மூலம் சிவாகம ஸூக்தி மஞ்ஜரீ என்னும் நூல் வெளியடுவது காலத்தின் தேவையாகும்.

ஶிவாகம ஸூக்திமஞ்ஜரீ நூலாசிரியர், நடமாடும் பல்கலைக்கழமாக திகழும் ஆகம கல்பத்ரும, ஞானாசிரியர் சிவஸ்ரீ விஜய ஸோமசேகர சிவாசார்யரவர்கள் புரியும் சிவாகம ஸேவை அளப்பரியது. வேறு எவராலும் செய்யமுடியாதது.

"ஆகமம் ஆகி நின்று அன்னிப்பான் தாள் வாழ்க" என்றபடி பரமேஸ்வரரால் ஶிவாகமங்களும், வேதங்களும் உபதேசிக்கப்பட்டன. ஆகமம் என்னும் சொல் ஶிவாகமங்களையே குறிக்கும். மேலும் ஆகமம் என்ற சொல்லிற்கு ஞானம்- அறிவு என்பதாக பொருள் தரப்படும். இதனையே ஸ்ரீகண்ட பாஷ்யத்திலும் ஶிவாகமங்களே வேதங்கள் என்று விளக்குகின்றார் பாஷ்யகாரர். இவ்வாறான ஶிவாகமங்களில் இஹபர ஸுகங்களை அளிக்கும் அனைத்து விஷயங்களும் சொல்லப்பட்டுள்ளன. இவ்வுலகிலுள்ள அனைத்து ஞானங்களும் ஶிவாகம ஞானங்களேயன்றி வேறல்ல.

இவ்வாறான ஶிவாகமங்களில் சொல்லப்பட்டுள்ள பல விஷயங்களில் பொது வாழ்க்கைக்குத் தேவையானவைகளையும், ஞான தேடல்களுக்குத் தேவையானவைகளையும் மிகவும் சுருக்கமான முறையில் தொகுத்து ஸ்லோகரூபமாக வெளியிடுவதென்பது மிகவும் உபயோகமானதாகும்.

எப்போதும் நாம் விசேஷமாக தேவதா ஸ்தோத்ரங்களைச் செய்ய விரும்பும்போது த்ரிசதியைச் செய்கின்றோம். த்ரிசதியின் சக்தி அளவிடமுடியாதது. அவ்வாறாகவே த்ரிசதி ரூபமாக (300 ஸ்லோகங்கள்) வெளிவரும் சிவாகம ஸூக்தி மஞ்ஜரியின் ஞானமும் அளவிடமுடியாதது. இவ்வாறான பெரும் செயலைச் செய்யும் ஞானாசிரியரை வணங்குகின்றோம். ஞானாசிரியர் ஸ்ரீஞானாம்பிகா ஸமேத வேதாந்தீஶ்வரரின் அனுக்ரஹத்தினால் இவ்வாறான பல ஞானநூல்களை இயற்ற வேண்டுமாய் ப்ரார்த்திக்கின்றோம்.

என்றும் சிவாகம சேவையில்
சிவஸ்ரீ Dr. செ.வா. c.கார்த்திகேய சிவாசார்ய:
திருப்பதி.



Residence: 18-1-9, Ramachandra Nagar, K.T. Road, Tirupathi, Chittoor Dist., Andhra Pradesh-517 501. Ph. +919440268463, agamakarthi@gmail.com

உ
சிவமயம்

'வ்யாகரண சிரோமணி'
**Dr.S. அருணஸுந்தரம், M.A., M.Phil., B.Ed, Ph.D.,**
துறைத்தலைவர், வ்யாகரணப் பிரிவு,
சென்னை ஸம்ஸ்க்ருதக் கல்லூரி, மயிலாப்பூர், சென்னை 4.

# மகிழ்வுரை

நாம் ஆதிசைவர்கள். 'குருக்களய்யா' என்பது நமக்கான சொல்வழக்கு. ஆகமங்கள் நம்மை 'ஆசார்யர்' எனக்குறிப்பிடும். அந்த சொல்லுக்கு நேரடிப்பொருள் என்ன தெரியுமா? 'கடைபிடிப்பவர்' செய்பவர்' ஒழுகுபவர்' என்பது நேரடிப்பொருள். எதை கடைபிடிக்க வேண்டும்? எதைச்செய்ய வேண்டும்? எதை ஒழுகவேண்டும்?

சாஸ்த்ரங்கள் மூன்று விஷயங்களைக் குறிப்பிடுகின்றன. 1. ஆங்காங்கே பரவி சிதறியுள்ள சாஸ்த்ர விஷயங்களை ஒன்றுதிரட்டிக்கொண்டே இருக்கவேண்டும். இது முதல் கடமை. 2. ஒன்றுதிரட்டிய சாஸ்த்ர விஷயங்களை நடைமுறைப் படுத்தவேண்டும். 3. ஊருக்குத்தான் உபதேசம் என்று இருந்துவிடக்கூடாது! ஒன்றுதிரட்டிய சாஸ்த்ரார்த்தங்களை தானும்கூட தனது தனிப்பட்டவாழ்வில் செய்து, கடைபிடித்து ஒழுகவேண்டும்.

இவற்றுள் சாஸ்த்ரார்தங்களை ஒன்றுதிரட்டுதலாகிய முதல்கடமையைச் செய்யாதவர்களோ, செய்ய முடியாதவர்களோ பிந்தைய இரண்டினைச் செய்தல் கடினம்.

பூக்கள் எத்தனை இருந்தாலும் சரி! எத்தனை வகைகள் இருந்தாலும் சரி! சலிக்காமல் அத்தனையையும் மொய்த்து, சுவைத்து, கூட்டில் தேனை அடைகாப்பது ராஜதேனீ (भृङ्गराजः). தேனியால் அடைகாக்கத்தான் முடியும்.

ஆனால் பலவகையான பலப்பல நூல்களிலிருந்து சாஸ்த்ரார்த்த விஷயங்களைத் தான் ரஸித்து சுவைப்பதோடல்லாமல், நமக்காக அவை அத்தனையையும், ஒன்றல்ல இரண்டல்ல, பல நூல்தேன்கூட்டில் திரட்டுவதோடல்லாமல், நமக்காகத் தொடர்ந்து வெளியிட்டுக்கொண்டு, 'ஆசார்யர்' எனும் சொல் பொருளுடையதாவதற்கு ஒரே காரணமாகத் திகழ்வது எங்கள் குருநாதர் சிவஸ்ரீ. விஜய. ஸோமசேகர சிவாசார்யார் ஆவார்.

பல சிவாகமங்களில் பரவிக்கிடந்த பூஜோபயுக்த விஷய ச்லோகங்கள் "ஸகலாகம ஸார ஸங்க்ரஹ:" எனும் நூலில் ஒன்றுதிரட்டப்பட்டன. பல சிவாகமங்களில் பரவிக்கிடந்த ஸித்தாந்தவிஷய ச்லோகங்களை "சதரத்னஸங்க்ரஹ:" எனும் நூலாகத் திரட்டியவர் 14ம் நூற்றாண்டின் உமாபதி சிவாசார்யார். பல சிவாகமங்களில் பரவிக்கிடந்த நித்யபூஜா விஷயச்லோகங்கள் "நித்ய பூஜா லக்ஷண ஸங்க்ரஹ:" எனும் நூலில் சிவபுரம் சிவஸ்ரீ. ஸ்வாமினாத சிவாசார்யார், தர்மபுரம், அவர்களால் ஒன்றுதிரட்டப்பட்டன.

அவ்வரிசையில், முதற்சைவராகிய குருக்களுக்கு அன்றாடம் தேவைப்படும் அத்தனைவிஷய ச்லோகங்களும், எங்கள் குருநாதர் சிவஸ்ரீ. விஜய. ஸோமசேகர சிவாசார்யரால் அழகாக ஒன்று திரட்டப்பட்டு, பொருளும் எழுதப்பட்டு, அன்றாடக் கையேடுபோல் வெளிவருவது "சிவாகம ஸூக்தி மஞ்ஜரீ" எனும் இந்த சிவாகம நல்மொழிப் பூங்கொத்து நூல் ஆகும்.

சைவஅந்தணர் மரபுஅறிவிற் சிறந்து விளங்கவேண்டி இந்நூலினை "சிவ மஹிமா ட்ரஸ்ட்" மற்றும் "உத்தர பாக வித்யார்த்திகள்" வாயிலாக வெளியிடும் சிவஸ்ரீ. மணிகண்ட குருக்கள் உமையொரு பாகனாரின் பூரண அருள்பெற ப்ரார்த்திப்போம்.

நூலின் தொகுப்பு மற்றும் உரையாசிரியர், எங்கள் குருநாதர் சிவஸ்ரீ. விஜய. ஸோமசேகர சிவாசார்யார் அவர்களைப் பணிந்து, இன்று போல் என்றுமே அவர் ஜ்ஞானகல்பத்ருமமாகவே காட்சிதர பொன்னார் திருவடியை ப்ரார்த்திப்போமாக.

இப்படிக்கு,

**Dr.S. அருணஸுந்தரம்,** M.A., M.Phil., B.Ed, Ph.D.,

மயிலாப்பூர்.



ஸ்ரீ சண்டிகா க்ருபா
"வேத சிவாகம ஞானமணி"
வேத சிவாகம ப்ரயோக கலாரத்னம்; சிவாகம வாசஸ்பதி
**எஸ். ஷண்முக சுந்தரசிவாச்சார்யர்**
நிர்வாகி – முதல்வர்
ஸ்ரீ சிவசக்தி வேத சிவாகம ஸம்ஸ்க்ருத வித்யாலயம். முடிச்சூர், சென்னை.

---

## மகிழ்வுரை

**"அவன் அருளாலே அவன் தாள் வணங்கி"** எனும் வாசகத்திற்கேற்ப எல்லாம் வல்ல இறைவனாகப்பட்டவர் தமக்குப் பிடிக்கும் பூசனையை எவ்வாறு இணங்கி செய்யப்பட வேண்டும் என்கிற சாத்திர முறையை அம்மைக்கு விளக்கும் வகையிலே இருபத்தியெட்டு ஆகமங்களையும் உபாகமங்களையும் இப்ரபஞ்சத்தின் பஞ்ச க்ருத்யத்தில் உள்ள அனைத்து இரகசியங்களையும் உள்ளடக்கிய சைவ சித்தாந்தமாக தனதருள் வாக்காகக் சொல்லி அந்தச் சைவாகம ஸாஸ்திர முறை வழுவாது பூசனைகள் செய்ய ஏதுவாக தனது சிவ ஸ்ருஷ்டியாக ஆதிசைவர்களையும் ஸ்ருஷ்டித்து நமது ஆதிசைவ சமூகத்தை தம்பணிக்காகவே தன்னோடே சிவனார் வைத்துக் கொண்டிருப்பது நமது ஸமூகம் செய்த பெரும்பாக்யமாகும். அப்படி அவர் வைத்துக்கொண்டிருக்கும் சிவாசார்ய ஸமூஹச் சிறார்களுக்கு மேற்படி பூசனை முறையைப் பயிற்றுவிக்கும் பொருட்டும் அதன் உள்ளார்ந்த தத்வங்களையும் உணர்த்தி உணர வைக்க மிகச்சிறந்த ஆசார்யர்களை ஆங்காங்கே அமர்த்தியும் அருள் பாலிக்கின்ற வகையிலே ஆசார்யர்களுக்கெல்லாம் ஆசார்யராகவும், ஆசார்யர்களில் இரத்னமாகவும், சிவஸாக்ஷாத்காரமாகவும், வேத.சைவாகம சாஸ்திரங்களின் ப்ரத்யக்ஷ ப்ரமாண ரூபமாகவும், விளங்குகின்ற பெருமதிப்பிற்குரிய நமது சிவஸ்ரீ.வி.சோமசேகர அண்ணா அவர்கள் கடந்த நாற்பது ஆண்டுகாலமாக சைவாகமப் பேராசியராகப் பணியேற்று ஆயிரமாயிரம் மாணாக்கர்களை வித்வான்களாக உருவாக்கிடுவதோடல்லாமல் நமது ஸமூகத்தை ஞான மார்க்கத்தில் நல்வழி நடத்தியும், அறிய பெரிய ஆலயங்களை நிர்மாணம் செய்தும், ஸமூகத்திற்கும் ஏற்படும் அனைத்து ஸந்தேஹங்களுக்கும் ஆதாரத்துடன் பதிலளிக்கும் ஸந்தேஹநிவாரணராக விளங்கிவரும் சிவஸ்ரீ அண்ணா அவர்களின் அறுபது அகவை நிறைவைக் கொண்டாடும் விதமாக மாணவர் ஸமூகம் ஏற்று நடத்தும். **ஆகம கல்பத்ருமோத்ஸவ** விழாவில் வெளியிடப்படும் **சிவாகம ஸூக்தி மஞ்ஜரி** எனும் சைவாகம ரஸநூலை உள்ளங்கை நெல்லிக்கனியாகக் **கண்ணுற்றேன். மனமகிழ்ந்தேன்.** ஏனென்றால் வளர்ந்துவரும் நமது ஸமூஹச்சிறார்கள் இந்த

மஞ்சரியை வாசிக்கும்பொழுதே அநேக அரிய சைவாகம விஷயங்களை தானாகவே அறிந்துகொண்டு தான்செயல்படவும் அடுத்தவர்க்கு வழிகாட்டவும் மிக ஏதுவாக அமைந்திருப்பது இந்நூலின் சிறப்பும் நூலாசிரியரின் நுணுக்கத்திறனுமாகும். மேலும் நமது ஸ்வசாகையான யஜுர்வேதத்தில் இருந்து எடுக்கப்பட்ட மந்திரங்களில் இருந்து தினசரி நிகழ்வுகளுக்குண்டான யாஜுஷான்ஹிகம் போல் இந்நூலானது சைவான்ஹீகமாக விளங்கும் என்பதில் ஐயமில்லை. மேலும் இந்நூலில் ஆத்மார்த்தம் பரார்த்தம் என இருவகைப்பூசனை முறைகளில் ஏற்படும் அனேக ஸந்தேகங்களுக்கு ஆதாரங்களுடன் பதில்கள் சொல்லப்பட்டுள்ளன. மேலும் இந்நூல் ப்ரச்னோத்தர ரத்னமாலிகா என்பதைப்போல் ப்ரஸ்ன பூர்வ ரத்ன மாளிகையாக விளங்குகிறது. இவ்வளவு லகுவாக நூலமைத்தருளிய அண்ணா அவர்களுக்கு அநேக நமஸ்காரங்களை மனப்பூர்வமாகத் தெரிவித்துக்கொண்டும் இந்நூல் பாகம் 2 பாகம் 3 என வரிசையாகத் தொடர்ந்து தாங்கள் எழுதிட வேண்டும் எனக்கேட்டுக்கொண்டும், அறுபதாம் அகவை நிறைவில் ஆகம கல்பத்ரு மோத்ஸவத்தின் விழாநாயகராக அமர்ந்திருப்பதுபோல், சதாபிஷேக கனகாபிஷேகம் பூர்ணாபிஷேகம் ஆகிய வைபவங்களெல்லாம் தாங்கள் அடையவேண்டும். நாங்களெல்லாம் தங்களது அனைத்து வைபவங்களிலும் கலந்துகொண்டு சைவாகமத்தின் ரஸத்தைப் பருக வேண்டும் என்கிற மனப்பூர்வமான ஆசைகளோடு இவ்விழாவை ஏற்று நடத்தும் சிவஸ்ரீ. அருணசுந்தரம்அண்ணா முதலாகஉள்ள அனைத்துக் குழுவினருக்கும் அநேக நமஸ்காரங்களையும் நன்றிகளையும் தெரி வித்துக்கொண்டு எனக்கு இந்த அரிய வாய்ப்பினை நல்கிய அனைத்து நல்லுள்ளங்களுக்கும் நன்றிகூறி இந்த மகிழ்வுரையை முடித்துமகிழ்கிறேன்.

இங்ஙனம்<br>
என்றும் நல்வழியில்<br>
**எஸ். ஷண்முக சுந்தர சிவாச்சார்யர்**





உ

ஸ்ரீ வல்லப மஹாகணபதி துணை
ஸ்ரீலலிதா பரமேஸ்வரி துணை



சிவாகமரத்னம், ஸ்ரீவல்ல பகணபதி உபாசகர்
**சிவஸ்ரீ S. மணிகண்ட சிவாசார்யார்**
தலைமை அர்ச்சகர் : அருள்மிகு ஸ்ரீவல்லப மஹாகணபதி ஆலயம்
நிறுவனர் : மேனேஜிங் டிரஸ்டி சிவமஹிமா டிரஸ்ட்
நிறுவனர் – செயலாளர் : சிவாகம வித்யா பீடம். (வேதாகம தேவார, பகுதிநேர பாடசாலை)
நெ.3/2, கோகுலம் காலனி, மேற்கு மாம்பலம், சென்னை–600 003.
அலைபேசி : 98401 51409, தொலைபேசி : 044 – 2489 5115

# நூல்வெளியீட்டுரை

ஆகமமாகி நின்றண்ணிப்பான் தாள் வாழ்க.

ஸதாசிவ ஸமாரம்பாம் ஸ்ரீகண்டாசார்ய மத்யமாம்.
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குரு பரம்பராம்.

பூஜா முக்யம் குரோப் பாத:
மந்தர முக்யம் குரோர் வச:.
த்யானமுக்யம் குரோர் மூர்த்தி:
மோக்ஷமுக்யம் குரோ: கிருபா.

என்றவாக்குக்கு இணங்க குருவருளால் திருவருள் கிட்டும். மாணிக்கவாசகப் பெருந்தகைக்கு சிவபெருமானே திருப்பெருந்துறையில் குருவாகவந்து போதித்தார். அவ்வைபிராட்டிக்கு வினாயகப்பெருமானே குருவாகவந்து அருள்பாலித்தது அனைவரும் அறிந்ததே. அந்தவகையில் குருவை வணங்கி போற்றினால் எல்லாவிதமான சௌபாக்யங்களோடு சிவஞானம்கிட்டும். எங்களுடைய **சிவமஹிமா டிரஸ்ட்** நடத்தும் சிவாகம வித்யாபீடத்தின் குருமுதல்வராக இருந்து சிவஞ்ஞானத்தை போதிக்கும் எங்கள் குருநாதர் **சிவஸ்ரீ. விஜய. சோமசேகர சிவாசார்யார்** அவர்களின் மணிவிழாவிற்கான ஆகமகல்பத்ருமோத்ஸவம் எனும் விழாவில், மேற்படி அண்ணா அவர்கள் எழுதிய **சிவாகம ஸூக்தி மஞ்ஜரி** என்ற மூலாகம வசனநூலை வெளியிடுவதில் நாங்கள் பெருமகிழ்ச்சி அடைகிறோம். இந்த அபூர்வமான நூல் அனைத்து தரப்பினர்களுக்கும் ஆகமத்தின் பெருமையை உணரவைக்கும் என்பதில் ஐயமில்லை.

எங்களுடைய அறக்கட்டளை மூலமாக சைவாகாமத்தில், உத்ரபாகம் (முதுநிலை) பூர்வபாகம் (இளநிலை) தேவார வகுப்பு, பள்ளிக்குழந்தைகளுக்கு சந்த்யாவந்தனத்துடன் கூடிய வேத, ஸ்லோக வகுப்புகள் மற்றும் மாதம் ஒருமுறை சிறப்பு சமயசொற்பொழிவு நடத்தி சிவத்தொண்டுபுரிந்து வருகிறோம். எங்களுடைய டிரஸ்டு மூலமாக வெளிவரும் முதல் புத்தகம் சிவஸூக்தி மஞ்ஜரி ஆகும். இந்நூல் அனைத்துப் பாடசாலைகளிலும் படிக்கும் சைவாகம மாணவர்களுக்கு ஒரு பொக்கிஷமாக திகழும் என்பதில் ஐயமில்லை. ஆகமஆசிரியர்கள் விரும்பினால் இதனை ஆகமஇலக்கணப் பாடத்திட்டத்தில் சேர்த்துக்கொள்ளலாம். எங்கள் குருநாதர் ஸ்ரீ சோமசேகர சிவாச்சார்யார் அவர்கள் மேன்மேலும் சைவாகமம்பற்றிய நூல்களை தொடர்ந்து எழுதிக்கொடுத்து அனுக்கிரகிக்க வேண்டும். அவற்றை நாங்கள் எங்கள் டிரஸ்ட் மூலமாக வெளியிட்டு சிவத்தொண்டு புரிய எல்லாம்வல்ல வல்லபகணபதியை ப்ரார்த்திக்கிறோம்.

இப்படிக்கு,
**S. மணிகண்ட சிவாசார்யார்**
**சென்னை–33.**



சிவமயம்

# சிவாகம சூக்திமஞ்ஜரீ

## பொருளடக்கம்




ஓம் நமோ பகவதே ஸதாசிவாய சிவலிங்காய நம:

நிராகார ஜ்யோதிர்மயம் அகலம் அத்யந்தம் அமலம்
மஹாதீர்க்கம் ஸ்தூலம் நிரவயவம் அத்யந்த ருசிரம்.
மஹாநாதம் லிங்கம் சம4தன முனி 4த்யேயம் அதுலம்
மனோ தார்காதீதம் ஹரிவிதிநுதம் நௌமி ஹ்ருதயே.

**சிவமயம்**

குரும்கணபதிம் ஸ்கந்தம் ஸாம்பம் ச பரமேச்வரம்.
வந்தே வாணீம் மஹாலக்ஷ்மீம் இஷ்டகாம்யார்த்த ஸித்தயே.

நத்வா குருபதத்வந்த்வம் சோதித்வா சாஸ்த்ரஜாலகம்.
கத்யதே சுகபோதாய சிவாகம சுபாஷிதம்.

ஸௌரமண்டல மத்யஸ்தம் ஸாம்பம் ஸம்ஸாரபேஷஜம்.
நீல க்ரீவம் விரூ பாக்ஷம் நமாமி சிவம் அவ்யயம்.

சிவம் சிவகரீம் சக்திம் ஸதேசம் ச மனோன்மனீம்.
ஈச்வரம் தத்ஸகீம் கௌரீம் வந்தேவிக்னேச்வரம் சுபம்.



# சிவாகம சூக்திமஞ்ஜரீ

## ஆன்ம முக்திஸாதனம் ஆகமம். (விநாயகர் கூறியது)

1. பகவன்! தேவதேவேச! லோகநாத! ஜகத்பதே!.
அனன்ய மானஸோ பூத்வா சிவஞானம் பரம் வத.
யதவாப்ய நராஸ் ஸர்வே முக்தி மாயாந்தி கேவலாம்.
ஞான யோக க்ரியா சர்யா: புரா ப்ரோக்தாஸ் ஸவிஸ்தரா:.
பும்ஸாம் அநுக்ரஹார்த்தாய ஸம்க்ஷேபாத் வக்துமர்ஹஸி.

(சுப்ரபேதாகமம் 135)

ஸ்ரீவிக்னேச்வரர் கைலாசமலையில் உள்ள சிவனாரை வணங்கி தமக்கு ஆகமத்தை கூறிடவேண்டினார். அப்பொழுது அவர், எந்த ஆகமத்தை மக்கள் அடைந்து முக்தியை அடைகின்றனரோ அத்தகையஆகமத்தை உயிர்கள்உய்ய அருளுமாறு வேண்டினார். இதிலிருந்தே ஆகமம் முக்திஸாதனம் என்று அறியவும்.

## சைவஸித்தாந்தம் மிகமேன்மையானது.

2. சைவம் பாசுபதம் ஸோமம் லாகுளம் ச சதுர்விதம்.
தேஷு சைவம் பரம் ஸௌம்யம் ரௌத்ரம் பாசுபதாதிகம்.
சைவம் புனஸ் சதுர் பேதம் வாம தக்ஷிண மேவச.
மிச்ரம் சைவது ஸித்தாந்தம் தேஷு ஸித்தாந்த முத்தமம்.

(சுப்ரபேதாகமம்17, 28, 29)

சைவசமயமானது 1.சைவம், 2.பாசுபதசைவம், 3.ஸோமசைவம், 4.லாகுளசைவம் என்று நால்வகைப்படும். இவைகளுள் சைவம் உயர்வானது. இந்த சைவசமயம் ஸௌம்யசைவம் எனப்படும். மற்றய பாசுபதம் முதலானவை மூன்றும் ரௌத்ரசைவம் எனப்படுபவையாகும். மேலும் இந்த சைவசமயமே வாமசைவம், தக்ஷிணசைவம், மிச்ரசைவம், ஸித்தாந்தசைவம் என்று நான்கு வகைப்படும் இவைகளுக்குள்ளேயும் ஸித்தாந்தசைவமேசிறந்த சமயமாகும். இச்சமயம் 28வகை நூல்களைஉடையதாகும்.

## தந்த்ரம் எனும் சொல் விளக்கம்.

3. தநோதி விபுலான் அர்த்தான் தந்த்ர மந்த்ர ஸமாச்ரிதான்.
த்ராணம் ச குருதே பும்ஸாம் தேந தந்த்ரம் இதி ஸ்ம்ருதம்.

(சுப்ரபேதம்2ல்2)

ஆகமநூல்களுக்கு தந்த்ரம் என்று பெயர். இப்பெயர் வரக்காரணம் யாதெனில் அறிவு ஆற்றல் வடிவான மந்திரம் செயல்முறைகளுடன் கூடின மிக விரிவான அரியபொருள்களை (செய்திகளை) பரப்புவதாலும், உயிர்களை வாழ்கைத்துயரக் கடலிலிருந்து காப்பாற்றுவதாலும், இந்தநூல் ஆகமம் (ஆன்ம இறைஅறிவியல்) நூல்கள் தந்த்ரம் என்றபெயரில் அழைக்கப்படுகின்றன.

## ஸித்தாந்தசைவ 28 மூலாகமநூல்கள்.



4. காமிகம் யோகஜம் சிந்த்யம் காரணம் ச அஜிதம் ததா.
தீப்தம் ஸூக்ஷ்மம் ஸஹஸ்ரம் ச அம்சுமான் ஸுப்ரபேதகம்.
விஜயம் சைவ நிச்வாஸம் ஸ்வாயம்புவம் அதா அனலம்
வீரம் ச ரௌரவம் சைவ மகுடம் விமலம் ததா.
சந்த்ரஞானம் ச பிம்பம் ச ப்ரோத்கீதம் லளிதம் ததா
ஸித்தம் ஸந்தாந ஸர்வோக்தம் பாரமேச்வர மேவச
கிரணம் வாதுளம் சைவ அஷ்டாவிம்சதி ஸம்ஹிதா:.

(சுப்ரபேதாகமம்படலம்2)

ஸித்தாந்த ஸெளம்யசைவ மூலாகம சிவசாஸ்திர நூல்கள் இருபத்தி எட்டு ஆகும். அவைகளின் பெயர் முறையே 1. காமிகம் 2. யோகஜம் 3. சிந்த்யம் 4. காரணம் 5. அஜிதம் 6. தீப்தம் 7. ஸூக்ஷ்மம் 8. ஸஹஸ்ரம் 9. அம்சுமான் 10. சுப்ரபேதம் 11. விஜயம் 12. நிச்வாஸம் 13. ஸ்வாயம்புவம் 14. அனலம் 15. வீரம் 16. ரௌரவம் 17. மகுடம் 18. விமலம் 19. சந்திரஞானம் 20. பிம்பம் 21. ப்ரோத்கீதம் 22. லளிதம் 23. ஸித்தம் 24. ஸந்தானம் 25. ஸர்வோக்தம் 26. பாரமேச்வரம் 27. கிரணம் 28. வாதுளம் என்பவைகள். இவைகள் சிவசாஸ்த்ரம், ஸித்தாந்தம், சிவாகமம், சிவதந்த்ரம், சிவஸம்ஹிதைகள் எனப்படும்.

## சைவாகமஞானம்பெறத்தகுதி (சிவனார் கூற்று)

5. சுத்தசைவம் இதம் தந்த்ரம் ந தேயம் ச ப்ரகாசிதம். 25
தீக்ஷிதஸ்ய ஸுதீரஸ்ய சிவபக்தி பரஸ்ய ச.
ச்ரவணீயம் ந சா(அ)ன்யத்ர கதனம் ஹி ப்ரசஸ்யதே. 26

(சுப்ரபேதம் 1ல்)

சுத்தசைவதந்த்ரங்களான 28நூலையும் அனைவருக்கும் இந்த ஆகம அறிவை கொடுக்கக்கூடாது, வெளிப்படுத்தக்கூடாது. சிவதீக்ஷையைப்பெற்றவருக்கும், நல்லமனஉறுதிஉள்ளவருக்கும், சிவனிடத்தில் உண்மையான பக்தியில் ஈடுபட்டிருப்பவனுக்குமே இதனைக் கேட்கும்படிச் செய்திடவேண்டும், மற்றவர்க்கும் சிவபக்தியில்லாதாருக்கும் கூறுவது ஒருபோதும் ஏற்றதல்ல கூடாது. என்றறிக.

## போகமோக்ஷமளிப்பது சிவாகமம் (சிவனாரின் கூற்று.)

6. சதுஷ்பாதயுதம் தந்த்ரம் புக்திமுக்த்யர்த்த காரணம்.
ஸாராத் ஸாரம் இதம் தந்த்ரம் சுப்ரபேதம் விநாயக. (சுப்ரபேதம்)

சுத்தசைவம் எனப்படுகிற ஸித்தாந்தநூல்கள் 28ம், சரியை கிரியை யோகம் ஞானம் ஆகியநான்கு பாதப்பகுதிகளை உடையவைகள், சுருக்கிய சூத்ரமாகஉள்ளவை. போகம் மோக்ஷம் இவைக்கு மூலகாரணமானவை. வேதோபநிஷதங்கள் அனைத்திலிருந்தும், ஸாரமாக விளங்குபவை. என்று விநாயகருக்கு சிவன் கூறியதால் இதன் சிறப்புப்பயனை அறியலாம்.



## ஒரே ஆகமத்தைஏற்று செயல்படுதல்

7. **யேந தந்த்ரேண ச ஆரப்தம் கர்ஷணாதி அர்ச்சநாந்தகம்.
தஸ்மின் தந்த்ரே ப்ரகர்த்தவ்யம் அன்யதந்த்ரம் ந காரயேத்.
காரயேத் அன்யதந்த்ரேண நோக்தம் தஸ்மின் விசேஷத:.**

ஆலயஅமைப்பும் அங்குபிரதிஷ்டை பூஜை உத்ஸவம், பிராயச்சித்தம், ஜீர்ணோத்தாரம் முதலிய செயல்களையும் 28 நூல்களில் ஏதேனும் ஒன்றை மட்டுமே பின்பற்றி செய்திடவேண்டும், மற்ற ஆகமநூல்களைக் கலந்து செய்யக் கூடாது. ஒருசெய்தி அதில் கூறப்படாததாக இருந்தால் அதனை மட்டும் சிறப்பாக மற்றஆகமகூற்றை ஏற்று செயல்படுத்துமாறு கூறுகின்றன.

## மந்திரம் என்ற சொல்விளக்கம்.

8. **மனநம் ஸர்வவேதித்வம் த்ராணம் ஸம்ஸாரஸாகராத்.
மனன த்ராண தர்மித்வாத் மந்த்ர இத் யபிதீயதே.** (சுப்ரபேதம் 32)

மனனம் என்பது அனைத்தையுமே அறிவித்தலையும், த்ராணம் என்பது உலகவாழ்க்கைத் துயரக்கடலிலிருந்து உயிர்களை காப்பதையும், உணர்த்துவதாக, எண்ணுதல் காத்தல் என்ற இருகுணங்களை உடையதால் இது மந்திரம் என்று கூறப்படுகிறது. மந் + த்ர = மந்தரம்.

## ஆகமத்தில் ஐவகைக்குளியல்

9. **ஸ்நானம் வாருணம் ஆக்னேயம் திவ்யம் வாயவ்ய மானஸௌ.
வாருணம் வாரிணா ஸ்நாநம் ஆக்னேயம் பஸ்மனா பவேத்.
த்ருஷ்ட்வா ஸாதபயா திவ்யம் வாயவ்யம் ரஜஸா கவாம்.
மந்த்ரைர் மானஸம் இத்யுக்தம் பஞ்ச ஸ்நாநா: ப்ரகீர்த்திதா:.**
(சுப்ரபேதம்)

சுத்தம்செய்து பாவத்தைப்போக்கிடும் நீரில் முழுக்காடுதல் (நீராடுதல்) என்பது ஐந்துவகை. அவை 1. நீரால் குளித்தல் =வாருணஸ்நானம் 2. திருநீறுஅணிவதால் செய்வது =ஆக்னேயஸ்நானம் 3. வெய்யிலுடன்கூடிய மழையில் நனைவதால் செய்வது = திவ்யஸ்நானம் 4. பசுக்களின் காலடிப் புழுதிதூசுகள் நம்மீதுபடிவதாலமைவது = வாயவ்யஸ்நானம் 5. மனதில் குருகூறியபடி மூலமந்திரத்தை ஒரு முறைக்கூறி பயிற்சிசெய்வது = மானஸஸ்நானம். இவ்வாறு வேதாகமஸ்மிருதிகளின் படியும் ஐந்து வகை சுத்தக்குளியல் அறியத்தக்கது.

## அந்தனர்கையில் ஐந்துதீர்த்தங்கள்.

10. **தீர்த்தானி பஞ்ச வை ஸந்தி த்விஜாநாம் உபயே கரே.
பிரம்மா (அ)க்னி பித்ரு தேவாஸ்ச ரிஷி தீர்த்தாநி பஞ்சதா.
அங்குஷ்டமூலகே ப்ராம்மம் அக்னிம் அங்குலமத்யமே.
தர்ஜன்யங்குஷ்டயோர் மத்யே பைத்ருகம் தீர்த்தம் உச்யதே.
அங்குலீநாம் து மூலேது தைவிகம் தீர்த்தம் உச்யதே
அங்குள்யக்ரே ரிஷீதீர்த்தம் பஞ்ச தேவாம்ச் ச விந்யஸேத்.**

அந்தணர்களின் கைகளில் ஐவகையான தீர்த்தங்கள் வெளிப் படுபவையாக எப்பொழுதும் உள்ளன. அவை பெருவிரல் அடியில் **பிரம்மதீர்த்தம்**, விரல்களில் நடுப்பகுதிகளில் **அக்னிதீர்த்தம்,** சுட்டுவிரல் பெருவிரல்களின் நடுவே **பித்ருதீர்த்தம்**, விரல்களின் அடியில் **தைவிகதீர்த்தம்** விரல்களின் முனைகளில் **ரிஷி தீர்த்தம்** என்று அறிந்து பிரம்மதீர்த்ததால் நீரைக் குடித்தலையும், அக்னிதீர்தத்தால் தெளித்தலையும், மற்றவையால் தர்பணங்களையும் செய்து, பயன்படுத்தவேண்டும்.

## அந்தனர் கைவிரல்களில் ஐந்துதெய்வம்.

11. **அக்னிர் வாயுர் ப்ரஜாத்யக்ஷ: தீக்ஷ்ணரச்மிப் புரந்தர:.
அங்குஷ்டாதௌ ந்யஸேத் வித்வான் க்ரமேணைவ வ்யவஸ்திதான்.**

அந்தணர்கைவிரல்களில் முறையே பெருவிரலில் **அக்னிதேவரும்,** சுட்டு விரலில் வாயுதேவரும், நடுவிரலில் ப்ரஜாபதியும், அணிவிரலில் சூரியனும் சிறுவிரலில் **இந்திரனும்** எப்பொழுதும் இடம்பெற்று உள்ளனர் என்றறிக. எனவே வேதியஅந்தனர் இப்பூவுலகில் வாழும் தேவர்களாய் போற்றத்தக்கவர்கள், "பிராம்மணோ வை ஸர்வாதேவதா:" என்று யஜுர்வேதமும் கூறுகிறது.

## நீர்நிலைக்குளியலின்பயன்கள். சிவனார் கூறியது.

12. **நத்யாம் வாப்யாம் தடாகே வா கூபே வா(அ)பி சதுர்விதம்.
கூபஸ்நாநம் ந கர்த்தவ்யம் வாப்யாதிஷு ச ஸம்பவே.
தடாகேஷ்வபி ந ஸ்நாநம் ஸரித் ஸத்யாம் கஜாநந!.
கூபாத் தசகுணம் வாப்யாம் வாப்யாத் தசகுணம் ஸரித்.
தஸ்மாத் தசகுணம் நத்யஸ் ஸமுத்ரகாமிகா: பரா: (சுப்ரபேதாகமம்)**

**நதிகள், ஓடைகள், குளங்கள், கிணறுகள்** என்று நீராடுமிடங்கள் நான்கு வகைப்படும். இவற்றில் நீரோடை உள்ளபோது கிணற்றிலும், நதியுள்ளபோது அங்கு (அவ்விடத்தில்) குளத்திலும்

குளிக்கக்கூடாது என்றுஅறிக. கிணற்றைக்காட்டிலும் வாபியும், அதைவிட ஸரித்துக்களும், அதைவிட நதிகளும் (கடலில் கலக்கும்சங்கமகடைமுக நதிகளும் பத்துமடங்கு கூடுதலானபயனை அளிப்பதாகும். எனவே எங்கும் உயர்ந்ததைப் பயன்படுத்துவதே விதிமுறை.



## கோயில்குளத்து குளியல்சிறப்பு.

13. **தோயம் சுத்தம் அசுத்தம் வா சிவலாய ஸமீபத:.**
**சிவகங்கேதி தாம் வித்யாத் சிவதாமாம்பு ஸேவநாத்.**
**தேஷாம் தீர்த்தம் ஸமாகம்ய ஸ்நானம் குர்யாத் விசேஷத:.**

(சுப்ரபேதாகமம்)

சிவாலயத்தினுடைய அருகில் உள்ள குளத்து நீரானது, தூய்மையுடனோ தூய்மையின்றியோ இருந்தாலும்கூட, அந்த நீரானது, சிவாலயத்தின் நிர்மால்ய தீர்த்தம் கலப்பதால் அதனை சிவகங்கை என்றே கருதவேண்டும். அத்தகைய க்ஷேத்ராலயதடாக தீர்த்தங்களில் விசேஷபயனைப் பெறக்கருதி நீராடவேண்டும் என்றுஅறியவும்.



## குளிக்குமிடமும் திசைப்பயனும்.

14. **ததச் சதகுணம் புண்யம் ஸ்நானம் ப்ராங்முக முச்யதே.**
**தத்ராபி தக்ஷிணம் தீரம் அனந்தம் பலமாவஹேத்.**

குளிப்பதற்காக கிழக்கு அல்லது வடக்குநோக்கி நீர்நிலையைச் சென்றடைந்து, அங்கு கிழக்குநோக்கியவராக நீரில்முழுகுதல் நூறுமடங்குஅதிக பயனைத்தருவதாகும். அங்கும் தெற்குதிசைக் கரையில் (வடக்கு/கிழக்கு) கிழக்கு நோக்கியவராக முழுக்காடுதல் எல்லையற்ற உயர்ந்தபயனைத்தரும்.



## நதிக்குளியலை இரவில்தவிர்க்கக் காரணம்.

15. **அப்ரசஸ்தம் நிசி ஸ்நாநம் ரவே ரன்யத்ர தர்சனாத்.**
**வ்ருத்ரஸ்ய ருதிரம் நித்யம் ஸ்ரவந்தி நிசி நிம்நகாம்.**
**தஸ்மாத் ஸ்நாநம் ச பானம் ச ந குர்வீத கதாசன.**

(சுப்ரபேதாகமம்)

எப்பொழுதும் இரவில் நதியில் நீராடுதல் கூடாது. காரணம் சூரியன் வேரிடத்தில் காணப்படுவதால் என்று அறிக. மேலும் தினமும் இந்திரனிடம் அடிபட்டவ்ருத்ராசுரன் தனது குருதியை

இரவில் நதிநீரில் ஒழுகுமாறு செய்கிறான். இதன் காரணமாக குருதிக்குசமமானதாக நீர்கருதப்படுவதால் அதனை குளிக்கவும் குடிக்கவும் பயன்படுத்தக் கூடாது. தெய்வத்திற்கும் தமக்கும் அவசியத்தேவையாயின் தங்கவிளக்குடன் வெளிச்சத்தில் குடத்தில் பூசித்து பிறகுஎடுக்கவும்.

## ஆலயபூசையின் பிரியா உறுப்புகள் (லயாங்கபோகாங்கங்கள்)

16. **விக்ஞாப்ய லயபோகாங்கம் தேவதேவம் க்ஷமாபயேத்.**
**ஜபம் ஸ்துத்யம் நமஸ்காரம் த்யானம் ச்ரத்தாவத் இத்யபி.**
**ந்ருத்தம் கீதம் ச வாத்யம் ச மஹாகண்டா ஸ்வநாதிகம்.**
**லயாங்கம் உக்தம் பூஜாயா: தேவதேவஸ்ய நித்யச:**
**போகாங்காநிச சேஷானி லயைர் போகைஸ் ச பூஜயேத்.**

(சுப்ரபேதாகமம்)

ஆலயத்தில்சிவனை லயாங்கம், போபாங்கம் என்ற இவற்றுடன் பூசித்து பொருத்தருள வேண்டுதல் முறை. ஜபம்செய்தல், துதிசெய்தல், நமஸ்காரம் செய்தல், எண்ணித்திளைத்து தியானித்தல், பக்தியால் மகிழ்வித்தல், நாட்யம், வாய்பாட்டு, இசைக்கருவி மீட்டுதல், பெரியமணியோசையை எழுப்புதல் இவைகள் தினமும் பூசையில் கூறப்பட்ட செய்யப்படவேண்டிய லயாங்கம் (உள்உறுப்புக் கிரியைகள்) என்றும் மற்றவை போகாங்கள் புறஉறுப்புச்செயல்கள் என்று அறியவும்.

## ஆலய பெரியமணியோசையின்பயன்.

17. **மஹாகண்டா நிநாதேந ராக்ஷஸாஸ்ச அசுராஸ் ததா.**
**ப்ரம்மராக்ஷஸ பைசாச பூத யக்ஷோ (உ)ரகேச்வரா:**
**தூரம் கச்சந்தி நாதேந யாந்தி தேவாஸ் ஸுஸந்நிதிம். (சுப்ரபேதம்)**

கோயில்களில் பெரியமணியில் தோன்றிடும் பெரும் ஒசையால் ராக்ஷஸர்கள், அசுரர்கள், பிரம்மராக்ஷஸர்கள், பிசாசுகள், பூதங்கள் யக்ஷர்கள், பெரும்பாம்பினங்கள். இவையாவும் விலகித் தொலைவுக்கு (வெகுதூரம்) செல்கின்றன என்றும், தேவர்கள் அந்த ஆலயத்தில் தோன்றுவார்கள் வந்துஇருந்து பூசையை ஏற்று அருளுவார்கள் என்கிறது ஆகமம்.



## சிவன் பொருத்திடவேண்டும்மந்த்ரம்

18. ப்ரதக்ஷிணத் ரயம் க்ருத்வா மந்த்ரம் ஜப்த்வா க்ஷமாபயேத்.
காலத்ரய குணா (அ)தீத: காலாத்மா சிவ சாச்வத:
உதய ஸ்திதி ஸம்ஹார கண்வ புண்யைக காரண.
அனேக தப க்ருத்யாநி நய ஸர்வாணி ஸர்வதா.
பல ப்ரதானி அமோகானி ஸம்பூர்ணானி ப்ரஸீத மே.
ஏதன் மந்த்ரம் ஜபித்வேசம் க்ஷமஸ்வேதி வதேத் குரு:.
(வலம்வந்து வேண்டுவது) (சுப்ரபேதாமம்)

சிவன்கோயிலை மூன்றுமுறை வலமாகச்சுற்றிவந்தபின்பு, இந்த துதிமந்திரத்தைக்கூறி இறைவனிடம் குறையை பொருத்தருள வேண்டிட வேண்டும். முக்காலங்களையும் முக்குணங்களையும் கடந்து இருக்கிறவராயும் காலமானவராயும் அழிவற்றவராயும், சிவமாயும், தோன்றுதல் இருத்தல் ஒடுங்குதல் இவைகளைச் செய்பவராயும், புண்யக்காரணராயும் உள்ள இறைவனே, நீர் எப்பொழுதும் பலதவச்செயல்கள் அனைத்தையும் எனக்கு செய்திட அருள்வீராக, எனது செயல்கள்யாவும் பயன்தருவனவாயும், குற்றமற்றவையாயும், நிறைவடைவனவாயும் அருள்புரிவீராகுக என்று காதலோடு கசிந்து உருகி, உள்ளம்உள்கி, உகந்து ப்ரார்த்திக்கவேண்டும்.

## ஆலயலிங்க நிவேதனவிஸர்ஜனம் (சிவான்னநிர்மால்யவிதி)

19. ஸதாசிவஸ்ய நிர்மால்யம் மனுஷ்யாணாம் ந போஜனம்.
பசூனாம் ச கஜாதீநாம் ஜலே வா (அ)த விநிக்ஷிபேத்.
அதவா வன்ஹிநா தாஹ்யம் பூமௌ வா கனயேத் புத:
(சுப்ரபேதம்)

ஆலய சிவலிங்கத்திற்கு சதாசிவருக்கு நிவேதனம் செய்த அன்னத்தை (ஹவிஸான) நிர்மால்யமானதை மனிதர்களுக்கு இதனை உணவாகக் கொள்ளக்கூடாது. பசுக்களுக்கோ, யானைகளுக்கோ அளிக்கவேண்டும், அல்லது நீரில்போடவும். அல்லது நெருப்பிலிட்டு பொசுக்கவும். அல்லது தரையில் குழியைத்தோண்டி அதிலிட்டு மறைத்தலையே அறிவாளியாக செய்வது விதிமுறை.



## ஜீவனும்புத்தியும் சிவசக்திகள். (ப்ராணாக்னிஹோத்ரம்)

**20. ஆத்மா ஹி யஜமாநோ (அ)ஸௌ புத்திஸ் தத்பத்னிகா ஸ்ம்ருதா.
ஹ்ருத்புண்டரீக வேத்யாம்ச அந்தஸ்தா (அ)க்னௌ ஸுபூஜயேத்.**

உடலேகோயிலாகவும் உயிரே இறைவனாகவும் புத்திதத்வமே அவரது மனைவியாகவும் கருதத்தக்கதாகும், மனிதஉடலில் இதயத்தில் உள்ளத்தாமரை மலராகிய மேடையில் நம்உடலில் வயிற்றிலுள்ள ஜாடராக்னியில் (நாபிஅக்னியை சிவனாகக்கருதி பூசித்து பிறகு உணவை அளித்து, பிறகு நாம் உண்ணவேண்டும். இதுவே ப்ராணாக்னி ஹோமம் ஆகும். இறைஉருவமான உணவை, உண்ணும்முன் சிவனுக்கு அதனை அர்பணித்து, சிந்தித்தபின்பு உண்பதே விதிமுறை.

## ஆசான் உருவில் அருளும் ஆண்டவன்.

**21. ஆசார்ய மூர்த்தி மாஸ்தாய பாசௌகான் க்ருந்ததீ (ஈ)ச்வர:
பூஜாம்க்ருஹ்ணாதி லிங்கஸ்தோ வன்ஹிஸ்தோ ஹவிராஹுதிம்**

முக்கண்ணரான பரமேச்வரன் மூன்று உருவங்களில் தங்கி இருந்து அருள்கிறார் என்கின்றன ஆகமங்கள். அவை ஆசார்யரின் திருவுருவில் உறைந்து இருந்தவாறு ஈச்வரன் உயிர்களில் பாசங்களை துண்டித்து நீக்குகிறார். லிங்கத்தில் மறைந்து இருப்பவராக பூஜையை தருள்பொருள்களை ஏற்கிறார். நாம் காணும் நெருப்பில் இருப்பவராக அன்ன ஆகுதியை ஏற்கிறார். இதனால் பூசையானது ஹோமத்துடனும், சுத்தஅன்னபோஜனத்துடனும் முடிவடைகிறது என்பதை ஆகமங்கள் கூறும்.

## தேவபூஜைக்கான மக்கள்வசிப்பிடம். (கோயிலுடனான கிராமாதிகள்)

**22. தேவானாம் பூஜனார்த்தம் து க்ராமாதீ விந்யஸேத் க்ரமாத்.
க்ராமம் ச நகரம் சைவ பத்தனம் கர்வடம் புரம்.
கேடகம் குடிகம் சைவ சிபிரம் ராஜதானிகம்.
ஸேநாமுகம் தசை தாநி கீர்த்திதானி க்ரமேண வை.(சுப்ரபேதாகமம்)**

தெய்வங்களுடைய பூஜைக்காகவே மக்கள் கிராமம் முதலானவற்றை அமைத்திடவேண்டும், தெய்வத்தை முன்நிறுத்தியே மக்கள் ஒரூரில் குடியேரி வாழ்வாங்குவாழ்ந்திடவேண்டும். அதற்குறிய வசிப்பிடங்கள் பத்துவகை. 1. கிராமம், 2. நகரம் 3. பத்தனம் 4. கர்வபடம் 5. புரம் 6. கேடகம் 7. குடிகம் 8. சிபிரம் 9. ராஜதானிகம் 10. ஸேனாமுகம் ஆகிய பத்துவகையாம். இவைகளின் அமைப்பிலக்கணத்தை ஆகமப்படி அறிந்து உரிய இடத்தில் தினமும் வழிபாடாற்றி வாழ்வதுமுறை.

## ஆலயபூசையின்அவசியம்.

23. **சிவஸ்யா (ஆ)ராதனம் நித்யம் புக்தி முக்தி ப்ரதாயகம்.
அன்யேஷாம் பூஜனம் நித்யம் க்ராம வ்ருத்திகரம் பவேத்.
தேவஸ்தானம் விநா யத்ர ஏககாலம் ந வாஸயேத்.
நித்யபூஜா விஹீநே து க்ருத்தப் பீடாம் கரோதி ஹி.**

(சுப்ரபேதேகிராமாதிலக்ஷணே)

கிராமாதிகளில் அமையும் கோயில்களில் தினம் பூசைசெய்வது அவசியமாகும். சிவனுக்கு செய்வது மக்களுக்கு போகம் மோக்ஷம் எனப்படுகிற இம்மைபயன் மறுமைப்பயன் இரண்டும் ஏற்படும். மற்றதெய்வங்களுக்கு தினசரி பூசை செய்வதால் கிராமத்திற்கு மேம்பாடும் வளர்ச்சியும் ஏற்படும். தேவாலயமில்லாத இடத்தில் மக்கள் ஒருபொழுதுகூட வசிக்கக்கூடாது. நித்யபூசை செய்யப்படாவிடில் தேவர்கள் ராக்ஷஸர்கள் முதலானோர் கோபித்தவர்களாய் தொல்லையளிப்பார்கள் என்கிறது ஆகமம். ஊரில் ஆலயபூசை அவசியமாம்.

## சைவாகமத் தனிப்பெருமை.

24. **ஸர்வசாஸ்த்ரா (ஆ)ச்ரிதம் சாஸ்த்ரம் ஸர்வஞானேஷு துர்லபம்.
ஸர்வபூஜா க்ரியா யுக்தம் தந்த்ரம் ஸர்வார்த்தஸாதனம்.
இதம் சாஸ்த்ரம் பரம் திவ்யம் தமஸாம் இவ பாஸ்கர:.
தஸ்மாத் சைவம் இதம் ச்ரேஷ்டம் ரத்னானாம் இவ பாஸ்கர:.**

(சுப்ரபேதாகமம்படலம்24)

அனைத்து சாஸ்திரங்களையும்தழுவித் தன்னுள்கொண்டுள்ள சாஸ்திரமாயும், எல்லாநூலறிவுகளைக் காட்டிலும் மேம்பட்ட ஞானநூலாயும், கிடைப்பதற்கு மிகஅறியதாயும், எல்லாவிதமான பூசைக்கிரியைகளோடு கூடியதாயும், ஸகலவிதமான விருப்பங்களையும் நாம் பெற்றிட உதவுகிற அறிவுசாதனமாயும், தெய்வீகமானதாயும் மேலானதாயுமுள்ள இந்த சிவாகம சாஸ்திரமானது அறியாமை மாறும் இருளுக்கு சூரியனைப் போலவும், சாஸ்திரகலா ரத்தினங்களுக்கு பேரொளிமிக்க சூரியனைப்போலவும் ஒப்பற்றதாய் விளங்குவதால் இந்த 28 சித்தாந்த சைவதந்த்ரங்கள் உயிரினகளுக்கு நலம்தருகிற உயர்ந்தவையாகும் என்று அறியத்தக்கது.



## சுபச்செயலில் க்ரஹநிலைப் பயன்.

25. அஷ்டமஸ்தா: க்ருஹாஸ் ஸர்வே கர்த்துக் குர்வந்தி துஸ்திதிம்.
ஏகாதச கதாஸ் ஸர்வே க்ஷேமாரோக்ய ஸம்ருத்திதா:.
பய க்ருத் பார்கவப் புரோக்தோ ஷட் ஸப்த தசம ஸ்தித:.
நவ த்வி ஸப்த பஞ்ச ஸ்தோ குருஸ் சோபன க்ருத் ததா.
ஸோமோதி ஸெளக்யக்ருத் ப்ரோக்தோ த்விதீயே பஞ்சமே பிச.

(சுப்ரபேதம்25ல்)

இறைவழிபாடு முதலான எல்லா சுபநிகழ்ச்சிகளுக்குமான முகூர்த்த நேரத்தில் அக்காலத்துக்ரஹ நிலைக்கேற்ப அதன் பயன் கைகூடும் இவ்விஷயத்தில் எல்லா கிரஹங்களும் லக்னத்திற்கு எட்டாமிடத்தில் உள்ள பொழுதில் அவலநிலையை அளித்திடுவர். எல்லாகிரஹமும் 11ம் இடத்தில் இருப்பவர்களாய் சுகபோக வாழ்வையும் ஆரோக்யத்தையும் அளித்திடுவர். ஆறு ஏழு பத்தாம் இடங்களில் உள்ள பொழுதில் சுக்கிரன் அச்சத்தையளிப்பார். 9,2,7,5ம் இடங்களில் உள்ளபொழுதில் வியாழன் (குருபகவான்) நன்மையைச் செய்வார். இரண்டாமிடத்திலும் ஐந்திலுமுள்ள சந்திரன் மிகவும் செளக்யத்தை அளிப்பார் என்று ஆகமப்படி பயன்அறிய வேண்டும்.

## கோயில்கட்ட ஏற்ற இடங்கள்.

26. பர்வதேஷு ச ரம்யேஷு க்ராமே ச நகரே (அ)த வா.
இந்த்ரே ஈசானே த்வதேசானே ஸோமேசானே (அ)த வா புன:.
யஸ்மின் தேசே மனோக்ஞே து தத்ர ப்ராஸாத மாரபேத்.

(சுப்ரபேதம்25ல்)

மலைகளிலும், கண்கவரும் அழகியவளமான பகுதிகளிலும், கிராமங்களிலும் நகரங்களிலும் மற்ற பட்டனம் புரம் முதலியவற்றிலும், கிழக்கிற்கும் வடகிழக்கிற்கும் நடுவிலோ, வடகிழக்கு மூலையிலோ, வடகிழக்கிற்கும் வடக்கிற்க்கும் இடைப்பட்ட பகுதிகளிலோ, எந்தஇடம் மனதைக்கவருமோ மனோலய மேற்படுமோ அங்கு கோயிலை கட்டத்து வங்கவேண்டும், மக்கள் தனது அன்பால் இறைவனிடம் ஒன்றி, கூடிலயிக்கும் இடமே கோயிலாதலால், நிலத்தைத் தேர்வு செய்துஅமைத்திட வேண்டும் என்கிறது ஆகமம், கழிப்பிடகளைத் தவிர்க்க வேண்டும்.



## புதுக்கோயிலில்கர்பநியாஸத்தேவை.

**27. யத் ப்ராஸாதம் ஸகர்பம் து ஸர்வஸம்பத்கரம் ந்ருணாம்.**
**அகர்பம் யத் விமானம் து அபிசாராய தத் பவேத்.**
**தஸ்மாத் ஆதௌ ப்ரகர்த்தவ்யம் கர்பந்யாஸம் ஸம்ருத்திதம்.**

(சுப்ரபேதம்)

புதிதாககட்டப்படுகிற எந்தக் கோயிலாயினும் அது ரத்தினம்முதலிய அரிய உரியபொருள்களடங்கிய உலோகப்பெட்டியை உள்ளேவைத்துக் கட்டுவதான கர்பநியாஸத்துடன் கூடியதாக கட்டப்படுவதனால், மக்களுக்கு எல்லாவகையான செல்வங்களையும் தருவதாகும். இந்த கர்பநியாஸம் செய்யப்படாமல் அமைக்கப்படும்கோயில் தீமையைத்தருகிற அபிசாரசெயலாகிவிடும். ஆகையால் முதலில் சுபத்தை மேன்மையை தருகிற கர்பநியாஸத்தை தவறாமல் செய்யவேண்டும் என்று சைவாகமங்கள் வலியுறுத்திக் கூறுகின்றன.

## லிங்கம் என்ற சொல்லின்பொருள் (சிவலிங்கதத்துவார்த்தம்)

**28. லயம் கச்சந்தி பூதானி ஸம்ஹாரே நிகிலம் யத:.**
**ஸ்ருஷ்டிகாலே ததா ஸ்ருஷ்டி: தஸ்மாத் லிங்கம் உதாஹ்ருதம்.**

(சுப்ரபேதம் 33ல்)

ஸர்வஸம்ஹாரகாலத்தில் அனைத்துபூதங்களும் எதில் ஒடுக்கத்தை அடைகின்றனவோ, பின்பு சிருஷ்டிகாலத்தில் எதிலிருந்து அவ்வாறே வெளிப்படுகின்றனவோ, அதுவே, அந்தசம்ஹாரசிருஷ்டி செயல்களின் உருவமே, (சிவலிங்கமாக) லிங்கம் என்றபெயரில் கூறப்பட்டது என்று சைவாகமங்கள் பெயர்க்காரணத்தைக் கூறுகின்றன.

## அருவப்பரம்பொருள் உருவத்தை ஏற்றது (உருவத்துள்இறைநிற்கும்)

**29. திக் தேச கால ரஹிதோ வாங் மனோ(அ)தீத கோசர:.**
**ஸ ஏவ தேவதேவேசோ ஸ்வேச்சயா க்ருண்ஹதே தனும்.**
**பரம் பா[4]வம் ஸமாலம்ப்ய ஸர்வக்ஞதா திபிர் குணை:.**
**யோகினாம் லக்ஷணார்த்தம் து சாஸ்த்ராணாம் உத்பவாய ச.**
**ப்ராணிநாம் உபகாராய க்ருண்ஹீதே விக்ரஹம் சிவ:.**

(சுப்ரபேதம் 33ல்)

திசைதேசம்காலம் இவை இல்லாததும், வாக்கிற்கும் மனதிற்கும் அப்பாற்பட்டதும் கண்ணுக்குப் புலனாகாததுமான அப்பரம்பொருளானது, தானேவிரும்பி உடலை ஏற்கிறது.

ஐந்தொழிலாற்றி அருளும் மேலான பாவனையைப் பற்றியதாய் ஸர்வக்ஞத்வம் முதலான எட்டுகுணத்தோடு கூடியதாய், ஞானியர் யோகியர்களுக்கு இலக்காகத் தெரிவதற்காகவும், வேதாகமசாஸ்திரங்களைத் தோற்றுவிப்பதற்காகவும், உயிர்களுக்கு உடல்பொருள்உலகம் இவற்றைத்தந்து உதவுவதற்காகவும் சிவனார் திருமேனியைஏற்று அதனுள்ளே இருந்து, உருவமாய் தோற்றமளித்து உயிர்களுக்கு அருள்கிறார் என்கின்றன ஆகமங்கள்.

## இறைவனின் அருவஉருவநிலைகள்.

**30.** **நிஷ்களம் ஹி கலாஹீநம் ஸகலம் து கலான்விதம்.**
**ஸகளம் நிஷ்களோபேதம் தஸ்மாத் ஸகலநிஷ்களம்.**
**முனி தேவ மனுஷ் யைஸ்ச பூஜிதம் லிங்க மாதராத்.**
**நிஷ்களம் லிங்கம் இத் யாஹு: ஸகளம் பாவ்ய ரூபகம்.**
**த்விதா பாவகதோ யோ(அ)ந்யோ பிந்துநாதோத்பவம் தத:.**
**ஸகளம் நிஷ்களம் தஸ்மான் முகலிங்கம் த்விரூபத:.**
**ஸகளம் நிஷ்களே லிங்கே பூஜயேத் து ஸதா சிவம்.**

(சுப்ரபேதாகமம்)

தெய்வமாம்சமானது மூன்றுநிலைகளில் இடம்பெறும். கலாஎன்பதற்கு பாகம், பங்கு, அம்சம், பகுப்பு, உறுப்பு, உருவம் சக்தி, என்றுபொருள். நிஷ்களம் என்பது இவையில்லாத உருவமற்றநிலை. ஸகளம் என்பது உருவமுள்ள நிலை. உருவமற்றபாகத்துடன்கூடிய உருவம் உடையநிலை ஸகளநிஷ்களநிலை என்று மூவகை. முனிவர் தேவர், மனிதர் முதலானோரால் பக்தியோடுபூசிக்கப்பட்டதே **சிவலிங்கம்.** இது நாதம் பிந்து, என்கிற ஓசை ஒளி என்ற இருபகுதிகளையுடையதாகும். ஸகளம், நிஷ்களம் என்ற இருநிலைகருத்துமுடையது முகலிங்க உருவமாகும். இந்த நிஷ்கள வடிவமேயான லிங்கம், ஸகளமாக எண்ணத்தக்க உருவமுடையதுமாகும். நிஷ்களவடிவமான சிவலிங்கத்தில், உருவமாய் ஸகளநிலையில் சதாசிவரை பூசிக்கவேண்டும், என்று சைவாகமங்கள் மூன்றுவகையில் சிவலிங்கங்களை விளக்குகின்றன.



## வழிபடத்தக்கவள் தேவீ.

31. பூஜநீயா ஜனைர் தேவீ ஸ்தானே ஸ்தானே புரே புரே.
க்ருஹே க்ருஹே சக்திபரைர் க்ராமே க்ராமே வனே வனே.

– (ஹேமாத்ரௌ)

இடங்கள்தோறும், வாழும்ஊரான புரங்கள்தோரும், வீடுகள் தோரும், கிராமங்கள்தோரும், வனங்கள்தோரும், என்றும் சக்தியை எண்ணித் துதிப்பவர்களாக ஜனங்களால் தேவியானவள் வழிபடத்தக்கவள். தரணியில் மூவுலகத்தாயை வழிபாடு செய்தல் அவசியம்.

## வழிபாட்டின் பயன்கள்.

32. பூஜயா விபுலம் ராஜ்யம் அக்னிகார்யேண ஸம்பதம்.
ஜபேந பாப ஸம்சுத்திம் ஞானம் தியானேன ச அச்நுதே.

– (சைவாகமம்)

உலகில் சைவாகம வழியில் சிவனாருக்கு பூசைசெய்வதால் அரசபதவியையும், ஹோமம்செய்வதால் செல்வத்தையும், ஜபத்தினால் பாவத்திலிருந்து விடுதலையையும், தியானத்தினால் ஞானத்தையும் பெற்று பக்தன் தான் விருப்பும் அனைத்தையும் அடைகிறான் என்கின்றன சிவாகமங்கள்.

## பூசையால் ஜீவன் முக்தி.

33. கிந்து ஆதேஹா வஸாநம் து யப் பூஜயதி பக்திதः.
ஸ சிவஸ் ஸர்வகிருத் யஜ்வா ஜீவன்முக்தஸ் ஸ உச்யதே.

(சைவாகமம்)

மனிதஉடலோடுபிறந்த ஒவ்வொருவரும், அந்த உடலில் உயிர் உள்ளவரையில் (இறுதி வரையில்) பக்தியினால் ஒருமித்த மனமுடையவர்களாக, யாரொருவர் சிவபெருமானை பூசிக்கின்றாறோ, அவர் செய்ய வேண்டியதைச் செய்தவராயும், பல யாகங்களைச் செய்தவராயும், ஆவதோடு உடலுடன் முக்தி பெற்றவராகக் கூறப்படுகிறார்.



## ஆசார்யனே ஆண்டவன்.

**34. ஆசார்ய மனஸஸ் துஷ்டி: தேவ ஸந்தோஷ காரணம்.
ஆசார்ய கோபாத் தேவோ(அ)பி குப்யதே நா(அ)த்ர ஸம்சய:.**

– (காரணாகமம்)

ஒருவருக்கு மந்திரத்தை உபதேசம் செய்தவரே ஆசார்யர் எனப்படுவர். அவருக்கும் அவர் வழிபடும் தெய்வத்திற்கும் வேறுபாடுஇல்லை. ஆகையால் அந்த ஆசார்யரை மகிழ்விப்பது தேவனை மகிழ்வித்தாயும் அவரின் கோபமே தேவகோபம் என்று ஐயமின்றி அறியவேண்டும்.

## குருவே எதற்கும் முக்யமானவர்.

**35. பூஜாமுக்யம் குரோ: பாத: மந்த்ரமுக்யம் குரோரர் வச:.
தியானமுக்யம் குரோர் மூர்த்தி: மோக்ஷமுக்யம் குரோ: க்ருபா.**

சமயநெறியில் முதலில் பூசைக்கு மிகவும் முக்கியம் தனது குருவின் பாதபூசையேயாகும். மந்திரத்திற்கு மிக முக்யமானது குருகூறிய வார்த்தைகள், தியானம் செய்வதற்கு மிகவும்முக்கியமானது குருவின் திருவுருவம், மோக்ஷத்திற்கு மிகவும்முக்கியம் குருவின் கருணை. என்பதை யாவரும் அறிந்து தத்தமது குருவைப்போற்றிப் பணிந்து வழிபட்டு, அந்த குருவருளலேயே இறைவனின் திருவருளை யாவரும் பெறஇயலும் என்பது நீதியாக அறியதக்கது.

## மந்திரஜபத்தின் பயன்கள்.



**36. ஜபேந பாபம் க்ஷபயேத் அசேஷம்
யத்னாத் பரம் ஜன்ம பரம்பராசு.
ஜபேந ரோகம் ஜயதே (அ)த மிருத்யும்,
ஜபேந ஸித்திம் லபதே ச முக்திம்.**

ஒருவர் தேவதையின் மந்திரத்தை பலமுறை ஜபம்செய்வதனாலேயே, அவர் பலபிறவிகளில் செயலாற்றி சேமித்துவைத்துள்ள பாவம் அனைத்தும் அழிந்துபோகும். நோயிலிருந்து விடுபட்டு சுகம் பெறலாம், துர்மரணங்களிலிருந்து விடுபட்டு வெற்றி பெற்று வெகுநாள் வாழலாம். காரியசித்தியையும், பரமுக்தியையும் அடையமுடியும் என்கின்றன சைவாகமங்கள்.

## பஞ்சபர்வ சிறப்புகாலங்கள்.

**37. சதுர்தசீ அஷ்டமீ பக்ஷ த்வயே தர்சச் ச பூர்ணிமா.**
**ஸங்கிராந்திஸ் சேதி பர்வாணி பஞ்ச ப்ராஹுர் மஹர்ஷய:.**

– (காலாதர்சம்)

மகரிஷிகள் பலரும் காலத்தைப்பற்றிக்கூறுகையில் 14வதான சதுர்தசீ, எட்டாவதான அஷ்டமீ, 15வதான அமாவாசை, மற்றும் பௌர்ணமீ ஆகிய திதிகள், மாஸப்பிறப்பு காலம் ஆகிய ஐந்துகாலங்களையும், இருபக்ஷங்களிலும் வருகிற இவற்றை பஞ்சபருவம் என்று, போற்றிக் கூறுகின்றனர். (இவை ஐந்துநாட்களும் தெய்வ வழிபாட்டிற்கு சிறந்தகாலங்கள்.)

## லிங்கத்தில் ஸதாசிவநிலை.

**38. காஷ்டமத்யே யதா வன்ஹி: ததிமத்யே யதா கிருதம்.**
**புஷ்பமத்யே யதா கந்தம் லிங்கமத்யே ஸதாசிவ:.**

சைவாகமநூல்கள் பரம்பொருள் இறைவனான ஸதா சிவப்பெருமான் லிங்கத்திற்குள் விறகிற்கு இடையில் இருந்து வெளிப்படும்வகையில் வெப்பமாகப்பரவியுள்ள நெருப்பைப் போலவும், தயிரில் அதைக் கடைந்தால் தயிருக்குநடுவே மறைந்தும் நிறைந்துமுள்ள நெய் வெளிப்படுவதைப் போலவும், மலருக்குள்ளே காணப்படாத நிலையிலுள்ள நறுமணத்தைப்போலவும், சிவலிங்கத்தினுள் வெளிப்பட்டவராக ஸதாசிவன் நிலைத்து இருக்கிறார், அருள்கிறார் என்கின்றன சிவாகமங்கள்.

## நீராடலில் ஹரநாம ஜபபயன்கள்

**39. அஷ்டவாரம் ஹர இதி ஜலே மக்னோ ஜபேத் நர:.**
**அகமர்ஷணம் ஏவைதத் ஸர்வ பாபைப் பிரமுச்யதே.** – (சிவாகமம்)

நீர்நிலைகளிலோ நதிகளிலோ நீருக்குள் ஒருவன் மூழ்கிய நிலையில் நீராடும்போது எட்டுமுறை ஹரஹர என்று ஹரன்பெயரைக் கூறுவதனாலேயே, அவன் அனைத்துவிதமான பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான், இதுவே நீருக்குள்ஜபிக்கும் வேதத்தின் அகமர்ஷணசூக்தத்திற்குநிகர் ஆகும் என்று சைவாகமம் கூறுகிறது.



## ஆறுஅங்க தெய்வப்பண்புகள்.



40. ஸர்வக்ஞதா திருப்தி ரநாதிபோத:
ஸ்வதந்த்ரதா நித்யம் அலுப்தசக்தி:.
அனந்தசக்திஸ் ச விபோர் விதிஞா:
ஷடாஹு: அங்காநி மஹேச்வரஸ்ய. – (சைவாகமம்)

வேதாகமசாஸ்திரங்களை நன்கு அறிந்தபண்டிதர்கள் இறைவனுக்கு 1. எல்லாம் அறியும் தன்மை, 2. மாறாத நித்யதிருப்தியுடனிருத்தல், 3. அநாதியாய் தாமேஅறிதல் 4. ஸர்வ ஸ்வதந்திரமாய்இருத்தல், 5. நித்யமான (என்றுமேகுறையாதவல்லமை) ஆற்றலுடைமை, 6. எல்லையற்ற எக்காலத்திலும் மிகுந்துள்ள வல்லமை, ஆகியவை உள்ளன. இந்த ஆறு குணப் பண்புகளும் ஆறுஉறுப்புகளாக மஹேச்வரனுக்கு விளங்குவதாகவும், இவையே ஷாட்குண்யம் என்றும் ஷடங்கம் என்றும் கூறுகின்றனர்.

## சிவனின் பத்துபண்புகள்.

41. ஞானம் விராக தைச்வர்யம் தபஸ் ஸத்யம் க்ஷமா த்ருதி:.
ஸ்ரஷ்ட்ருத்வம் ஆத்மஸம்போதோ ஹி அதிஷ்டாத்ருத்வ மேவச.
அவ்யயானி தச ஏதாநி நித்யம் திஷ்டந்தி சாங்கரே. –(வாயுசம்ஹிதை)

சங்கரனாகிய இறைவனிடத்தில், 1. ஞானம் 2. விராகதா (விருப்புவெறுப்பு இன்மை) 3. ஐச்வர்யம், 4. தவம், 5. ஸத்யம் 6. க்ஷமா 7. த்ருதி:, 8. ஸ்ரஷ்ட்ருத்வம் (படைக்கும்ஆற்றல்) 9. ஆத்மஸம்போதம் (ஜீவர்களை உணர்தல்), 10. அதிஷ்டாத்ருத்வம் குரு முதலானவற்றில் ஆட்கொண்டு அதில் அமர்ந்து அருள்வது ஆகியஇவைபத்து குணங்களும் நித்யமாக அழிவற்றதாக என்றும் உள்ளன என்று வாயுஸம்ஹிதை கூறுகிறது.

## ஞானத்துடன் சீலம்தேவை.

42. ஞாநேந ஹ்ருதயஸ்தேன கலோ ந ஸ்யாத் சுசீலவான்.
மதுநா கோடரஸ்தேந நிம்பக் கிம் மதுராயதே.
ஞானம் அப்யாஸதோ வேத்தி சீலஸ் சுவாபாவிகோ குண:
– (சைவாகமம்)

தீயவனான ஒருவன் உள்ளத்தில் இறைவனைப்பற்றிய ஞானம் (பொது இறைஅறிவு) இருப்பதனாலேயே அவன் நல்லொழுக்கமுள்ளவனாக (சுசீலனாக) ஆகமாட்டான். எவ்வாறெனில், ஒருவேப்பமரமானது தனது பொந்தில் உள்ள தேன்கூட்டினால் (தேனாலேயே) மரமே

இனிப்புடையதாக ஆகாதோ அவ்வாறு என்று அறிக. ஆதலால் ஞானம் இருந்தால்மட்டுமே போதாது. அதன்படி செயலும் இறைவழிபாடு பூசைசெய்வதும் அவசியம் என்று அறியவும்.

## சிவனை மாசுடன் தீண்டலாகாது.

43. **கோபி மலிந தாரீ து சிவம் ஸ்ப்ருசதி யோ த்விஜ:.**
**ஸ ஏகவிம்சதி குலம் ஸோ அக்ஷய்யம் நரகம் வ்ரஜேத்**

-(காரணாகமம்)

எவரொருவர் வேதமறிந்த பிராம்மணராக இருந்தபோதிலும் மாசடைந்தவாராக (தீட்டுடன், மலமுள்ளவராக, தீக்ஷைபெறாதவராக) சிவபெருமானை சிவலிங்கத்தைத் தொடுவாரேயானால் அவர் இருபத்திஓர்தலைமுறைக்கு தமதுகுலத்தினரையும் அழிவற்றதான அக்ஷய்யம் என்ற நரகத்தை அடைகிறார் என்று ஆகமம் கூறுகிறது. எனவே மாசற்ற பரஞ்ஜோதியைத்தீண்டுவதற்கு மாசற்று இருத்தல் அவசியமாகும்.

## நடராஜர் செய்யும் ஐந்தொழில்.

44. **டமரோஸ் ஸ்ருஷ்டிர் ஜாயேத அபயாத் ஸ்திதி ருச்யதே.**
**அக்னேஸ் து புரோக்தம் ஸம்ஹார: திரோதானம் து குஞ்சிதாத்**
**அநுக்ரஹோ ஊர்த்துவ பாத: கிருத்யம் பஞ்ச சபாபதே:**

சைவசமயப்பரம்பொருளான சிவம் திருநடராஜர் திருவுருவத் திலிருந்து ஐந்தொழிலாற்றுகிறது. அதன்படி நடேசரின் வலதுபின்கையில் உள்ள உடுக்கை (நாதம்) படைத்தலையும், வலது முன்கையில் உள்ள அபயமுத்திரை காத்தலையும், இடது பின்கையிலுள்ள சிவாக்னிச்சுடரானது ஒடுக்குதலையும், ஊன்றிய வளைத்த வலது பாதத்தால் மறைத்து உதவுதலையும், தூக்கிய இடதுபதகமலத்தால் அருள்தருவதையும், ஆக இவ்விதம் பரமாகாச சித்சபையில் நடேச்வரர் பஞ்சகிருத்யத்தையும் (ஐந்தொழில்களையும் உயிர்கள் உய்யச்செய்கிறார் என்று அறியவும்.)

## சிவஆசானைக்கருதும் முறை.

45. **ஆசார்யஸ் சிவ ஏவ ஸ்யாத் அனயோர் அந்தரம் ந ஹி.**
**ய: பச்யேத் அனயோர் பேதம் ஸோ (அ)தோகதிம் அவாப்நுயாத்.**

சிவனைபூசிக்கும் ஆசார்யர் சிவனே ஆகிறார். ஆசாரியருக்கும் சிவனுக்கும் (வேறுபாடு) இடைவெளி என்பது இல்லை.

எவனொருவன் சிவனுக்கும் தனது ஆசார்யனுக்கும் வேறுபாட்டைக் காண்பானோ, அவன் இழிவான கீழ்நிலையை அடைவான், என்று சிவாகமங்கள் கூறுகின்றன.

## ஆகமம் சொல்லின்பொருள்.

46. **ஆகதம் சிவ வக்த்ரேப்ய: கதம் ச கிரிஜா முகே.**
**மதம் ச சிவ பக்தாநாம் ஆகமம் சேதி கீர்த்யதே.**

உலகைப் படைக்கும்போது பரமகுருவான ஸதாசிவனாருடைய ஐந்தமுகங்களிலிருந்து, அவரதுஞானமாக, வெளிவந்தமையாலும், அதனை செவிமடுத்துக்கேட்டவளான, பார்வதீ தேவியினடத்தை சென்றடைந்தமையாலும், இந்தவழிமுறையே சிவனடியார்களுக்கு நமக்கு ஏற்ற உகந்தகருத்தாக விளங்குவதாலும், இந்தசிவனது தர்மநூலானது ஆகமம் என்று அழைக்கப்படுகிறது. (ஆகமம் = வந்தடைந்தது) இறையிடமிருந்துமேலிருந்து மண் உலகை அடைந்த அரியஞானநூல் என்றறிக.

## ஆகமதோற்றம்

47. **குரு சிஷ்ய பதே ஸ்தித்வா ஸ்வயம் தேவஸ் ஸதாசிவ:.**
**பிரச் நோத்தர பதைர் வாக்யைர் தந்த்ரம் ஸம வதாரயத்.**

தேவனான ஸதாசிவனானவர் தாமே பலசிவர்களைப் படைத்து தாம் குருவாயும், அவர்களே கேட்கும் சீடர்களாயும் இருந்தபடி, குரு சிஷ்யன் என்ற இருநிலைகளிலும் சிவனாய் இருந்து, சீடரின்கேள்விகளுக்கு உரிய பதிலைக்கூறிடுமாறு அரியதோர் ஸாரமான, தந்த்ரம் என்ற பெயருடைய ஆகமங்களை தோற்றுவித்தார் என்றறிக.

## வித்தைகளின் தலைவன் சிவன்.

48. **அஷ்டாதசாநாம் ஏதாஸாம் வித்யாநாம் பின்ன வர்த்மநாம்.**
**ஆதிகர்த்தா கவிஸ் ஸாக்ஷாத் சூலபாணி ரிதி ச்ருதி:**

உலகில் காணப்படுகிற அனைத்து வித்தைகளையும் தனக்குள்ளே கொண்டுள்ள பதினெட்டுவகையான வித்தைகளுக்கும், (பலப்பல நெறிமுறைகளாக விளங்குபவைகளான எல்லாத்துறைநூல்களுக்கும்) ஆதிகர்த்தாவாகவும் காணப்படுகிற மஹாகவியாகவும் விளங்குபவர் பகவானான சூலபாணியே. என்பதை வேதங்களும், ஆகமங்களும் - **ஈசானஸ் ஸர்வவித்யானாம்** என்று சூலமேந்தியுள்ள சிவனாரே ஈச்வரனைக் கூறுகின்றன.

## சிராத்தபோஜனநியமம்.

49. புனர்போஜந மத்வானம் பாரா(அ) த்யயன மைதுநம்.
தானம் பிரதிக்ரஹம் ஹோமம் சிராத்தம் புக்த்வா அஷ்ட வர்ஜயேத்.

– (காமிகாகமே)

ஒருவர் சிரார்த்தத்தில் நியமிக்கப்பட்டு, அதில் சிறப்பு உணவை சாப்பிட்ட அந்தனர் அதனை சாப்பிட்டபின்பு 24 மணிநேரத்திற்கு அந்தஒருநாளில் எட்டுசெயல்களைத் தவிர்த்திடவேண்டும்என்கிறது சைவாகமம். அவை முறையே 1. அன்று மீண்டும் சாப்பிடுவது 2. நெடுந்தூரம் வழிநடந்து செல்லுதல் 3. சுமைகளைசுமப்பது 4. வேதம்பயில்வது, ஓதுவது 5. பெண்ணுடன் உடலுறவுகொள்வது 6. தானம்கொடுப்பது 7. தானத்தைப்பெறுவது 8. தான்ஹோமம் ஆலய பூசை செய்வது ஆகியன. இவற்றை ஒருபோதும் அன்று செய்யக்கூடாது என்றறிக.

## மந்திரஸித்திகாரணம்.

50. உபதேசஸ்ய ஸாமர்த்யாத் ஸ்ரீகுரோச்ச ப்ரஸாததஃ.
மந்த்ர ப்ரபாவாத் பக்தியா ச மந்திர ஸித்திப் பிரஜாயதே.

ஒருவருக்கு தாம்விரும்பியதெய்வத்தின் ஜபிக்கும் மந்திரமானது, பயனளிக்கத் துவங்குவதற்கு அடிப்படையாக நான்குகாரணங்கள் உள்ளன. அவைமந்திரத்தைக்கூறியவரின் உபதேசவிளக்கசெய்முறை யினாலும், ஸ்ரீகுருவினுடைய அருளாலும், அந்த மந்திரத்தின் சிறப்புப்பெருமையாலும், சீடனுடைய உண்மையான பக்தியாலுமே மந்திரங்களுக்குஉரிய பயன்கைகூடுவது என்கிற ஸித்தி ஏற்படும்.

## பொருளை இறைக்குதந்து ஏற்றல்.

51. பத்ரம் புஷ்பம் பலம் தோயம் அன்ன பாநாத்யம் ஔஷதம்.
அநிவேத்ய ந புஞ்ஜீத பகவந்தம் ஸதாசிவம்

–(காமிகாகமம்)

ஒருவர் தான்பயன்படுத்துவதற்கு உள்ளபொருளை முதலில் இறைவனுக்கு ஸமர்ப்பித்துப், பிறகு அதை தான்பயன்படுத்திட வேண்டும். அவைகள், பத்ரம் (பூசைக்குரிய இலைவகைகள்) புஷ்பம் (உரியமலர்வகைகள்). பழவகைகள், தண்ணீர், உணவு, குடிக்கும் பானங்கள், மருந்துகள் ஆகிய இந்த ஏழுபொருட்களையும் பகவானான சதாசிவருக்கு நிவேதனமாகத் தெரிவித்தபின்பு அனுபவிக்க வேண்டும்.

## ப்ரபஞ்சம் பஞ்சகலாமயம்.



52. **பூமௌ நிவிருத்தி ருதிதா பயஸி பிரதிஷ்டா**
**வித்யா அநலே மாருதி சாந்தி ரதீதசாந்தி:**
**வியோம்நீ தி யா: கில கலா: கலயந்தி விச்வம்**
**தாஸாம் ஹி தூரதரம் அம்ப பதம் த்வதீயம்.**
**- (சைவாகமாபியுக்தி)**

தேவிபராசக்தியின் கிரியைவடிவான குண்டலினீ, பிந்து, என்பதிலிருந்து, முதலில் ஐந்துகலைகள் தோன்றி, அனைத்தையும், (பிற ஐந்து வகைஅத்துவாக்களையும்) தம்முள் ஒடுக்கிவைத்துள்ள ஐந்துகலைகள், பஞ்சபூதங்களின் உருவங்களாகி அவை உலகமாய் விளங்குகின்றன. அவற்றுள் **நிவிருத்திகலா** நிலமாயும், **பிரதிஷ்டாகலா** தண்ணீராயும், **வித்யாகலா** நெருப்பாகவும், **சாந்திகலா**காற்றாகவும், **சாந்தியதீதகலா** விண்ணாகவும் இருந்து பிரபஞ்சமாயுள்ளதையும் கடந்து இருப்பளே தேவீ, என்றறிக. உலகமனைத்தும் சக்திமயம், கலாமயம் ஆகும்.

## உயர்வாக கருதவேண்டியவை.

53. **குரௌ மானுஷபுத்திம் ச மந்த்ரே சா(அ)க்ஷர பாவநாம்.**
**பிரதிமாயாம் சிலாஜ்ஞானம் குர்வாணோ நரகம் வ்ரஜேத்.**

உலகில் குருவினிடத்தில் (தெய்வசிந்தனையை ஏற்கலாம்) அவரும் பிறரைப்போலவே என்ற, மானிடராகவே கருதும் புத்தியை உடையவனும், தெய்வங்களின் மூலமந்திரங்களில் அவற்றின் சிறப்புப் பெருமைகளை எண்ணாமல் அவைகள் வித்தியாசமான வெறும்எழுத்துக்களே என்று கருதுபவனும், வழிபாட்டுச்சிலைகளில் அவை தெய்வமே என்ற மனபாவனை இன்றி அதுவும் ஒருவித கற்சிலையே என்று கருதுபவனும், ஆகிய இந்த பாவியர் மூவரும் நரகத்தை அடைவார்கள். நம்பிக்கை அவசியம் ஆகும்.

## கடமைதவறினால் தீமை.

54. **நியூநக் கிரியாகரஸ் சில்பீ மந்த்ரா (அ)பாவகரோ குரு:.**
**அதிசூக்ஷ்ம திரவ்யதாதா பவேரன் நரகம் த்ரய:.**

தெய்வத்திருவுருவச் சிலையில் உரிய செயல்முறைகளைக் குறைத்து இலக்கணக் குறையுடையதாகச் செய்துகொடுக்கிற சிற்பியும், உரியமந்திரஞானம், மந்திரப்ரயோக வழிமுறைகளை

அறியாமல் ஏமாற்றி செயல்படுகிறகுருவும், பூசை முதலிய வழிபாட்டுச்செயல்களுக்கு கருமியாக மிகமிகக் குறைவாக பொருளைத்தந்திடுகிற (பூஜாதிரவிய)விநியோகஸ்தரும், (திரவ்யஸாதகரும்), ஆகிய இந்த மூவரும் நரகத்தை அடைவார்கள்.

## உலகம் தலைவனை உடையது.

**55. ஸ்திரீ பும் நபும் ஸ காதித்வாத் ஜகதக் காரிய தர்சனாத்.**
**அஸ்தி கர்தாஸ ஹ்ருத்வா ஏதத் ஸ்ருஜதி அஸ்மாத் பிரபுர் ஹர:.**

– (ரௌரவாகம சூத்ரம்)

ஆண், பெண், பேடி, அலி என்ற முப்பாலர்களும் வாழ்கின்ற இந்த உலகமானது, தோற்றமும் மறைவும் மாற்றமும் கொண்டுள்ளதால், ஓர்காரணத்தில் ஒடுக்கிப் பின்பு படைத்திடுவதற்கு என்று இதற்கு ஒரு தலைவன் இருக்கிறான். எவர் சம்ஹாரம் செய்து ஒடுக்குகிறாரோ, அவரே படைப்பவராவார். எனவே ஹரன்எனப்படுகிறவரே பதி ஆவார் என்கிறது சைவாகமம்.

## சிவபக்தியின் அவசியம்.

**56. திருசோர் தர்சயிதா சாத்மா தஸ்ய தர்சயிதா சிவ:.**
**தஸ்மாத் தஸ்மின் பராம் பக்திம் குர்யாத் ஆத்மோபகாரகே.**

– (சிவஞானபோதம் சூத்ரம்)

ஒருபொருளை கண்ணுக்குக் காட்டுபவன் ஜீவன். அந்தஜீவனுக்கு உள்ளிருந்தவாறு தூண்டி காண்பிப்பவன், இறைவனான சிவன். ஆகையினால், நமக்கு அதாவது உண்மையிலேயே உயிருக்கு உதவிகளைச் செய்கின்ற ஆத்மோபகாரியாகஉள்ள சிவனிடத்தில் நாம் மேலான பக்தியை செய்யவேண்டும் என்று அறியவும். யாவரும உடலுக்கே உதவக்கூடியவர்கள். இறைவனே உயிருக்கு உதவுவர்.

## மனக்கட்டுப்பாடுதேவை.

**57. சித்தே சலதி ஸம்ஸாரோ நிச்சலே மோக்ஷ ஏவது.**
**தஸ்மாத் சித்தம் ஸ்திரம் குர்யாத் ப்ரக்ஞயா பரயா புத:.**

– (தேவீகாலோத்தரம்)

ஒருமனிதனின் சித்தம் (மனம்) ஒருநிலைப்படாமல் அசைகின்றபோது, ஒருஇலக்கில் ஒன்றிஇறாதபொழுதில் ஸம்ஸாரியாகி போகியாகிறான். அவனது மனம் தெய்வத்திடமே மாறாமல் அசையாமல் நிலைத்து

இருக்குமேயானால் மோக்ஷத்தை அடைகிறான். ஆகையால் அறிவாளி தனது சித்தத்தை மேலானமேதையால் தெய்வத்திடம் நிலைபெருமாறு செய்திடவேண்டும் என்கிறது ஆகமம்.

## உயிருக்குதலைவன் தேவை.

**58. அக்ஞோ ஜந்து: அநீசோ (அ)யம் ஆத்மநஸ் சுகதுக்கயோ:.**
**ஸோபி ஸாபேக்ஷ ஏவ ஸ்யாத் ஸ்வப்ரவிருத்தௌ கடாதிவத்.**
**இஷ்யதே ஸ கதம் கர்த்தா கர்த்தா தஸ்மாத் மஹேச்வர:.**

**- (மிருகேந்திராகமம்)**

ஆத்மாவனது தெய்வத்தை அறியமுடியாத ஞானமற்றவனாயும், தனது சுகதுக்கங்களை தீர்மாணிப்பதில் சுதந்திரமில்லாதவனாயும், ஆத்மதத்துவங்களிலேயே திரிவதாயும் உள்ளவனாதலால், அவனுக்கு செயல்படுவதற்கு ஒருவரின்தேவை உள்ளது. எவ்வாறெனில், குடம், தேர் முதலானவற்றிற்கு அது பயனளிக்க அறிவுடையஒருவன் துணைசெய்வது போலாகும். அவ்விதம் உயிர்களுக்கு உதவிடுபவரே கர்த்தா. அவரே மஹேச்வரரர் என்ற பெயருள்ள அனைத்து உயிர்களின் தலைவன் என்கிறது மிருகேந்திராகமம்.

## ஆகமமுப்பொருள்.

**59. சைவாகமேஷு முக்யம் பதி பசு பாசா: இதி கிரமாத் திரிதயம்.**
**தத்ர பதி: சிவ: உக்த: பசவோ ஹி அணவோ அர்த்தபஞ்சகம் பாசா:.**

**- (தத்வபிரகாசம்)**

சைவாகமங்களில் முக்கியமான அழியாப்பொருட்கள். பதி, பசு, பாசம் என்று கூறப்படுகிற இறைவன், உயிர்கள், தளைகள் (மாசுகள்) என்பன முறையே மூன்றேயாகும். அதில் பதி என்பவர் சிவன். பசுக்கள் எனப்பட்டவை உயிர்கள். பாசங்கள் என்பவை ஆணவம், கன்மம், மாயை, வைந்தவம், திரோதாயிகம் இவை ஐந்தும் தத்வப்ரகாசம் என்ற நூல், இவற்றை விரித்து ஆகமம் கூறும்.



## சிவனருளும் ஐந்துஇடம்.

60. பேரே லிங்கே விமானே ச பூதபீடே சிவாலயே.
சிவஸ் ஸந்நிஹிதோ நித்யம் நமஸ்யேத் தத்ர தம் ஸதா.

பரம்பொருளான சிவம் எனப்படுகிற இறைவன், 1. சிவாலயத்திலும், அங்குள்ள 2. சிவலிங்கத்திலும், 3. நடேசர் முதலான உருவச்சிலைகளிலும், (தெய்வப் பதுமைகளிலும்), 4. விமானகட்டிட உருவத்திலும், 5.பூதபீடமாகிய பலிபீடத்திலும், சிவனார் எப்பொழுதும் நிலைபெற்று விளங்கி அருள்கிறார். எனவே இவற்றில் அவரை வணங்கு என்கின்றன சிவாகமங்கள்.

## கோபுரதரிசனபயன்

61. தூரத: சிகரம் த்ருஷ்ட்வா நமஸ் குர்யாத் து யோ நர:.
முச்யதே ஸர்வ பாபேப்யோ நிர்மோகாத் இவ பந்நகா:
– (சுப்ரபேதாகமம்)

எவனொருவன் தொலைவிலிருந்தபடியே கோயில்விமானம் அல்லது கோபுர சிகரத்தைக்கண்டு வணங்குகிறானோ, அவன் அப்பொழுதே எல்லா பவங்களிலிருந்தும் அக்கணமே கருடசிந்தனையால். பாம்பின்விஷம் அகலுவதைப்போல விலகுவதால், விடுதலையாகிறான். கோயிலினுடைய கோபுரதரிசனப் பயன்கூறப்படுகிறது.

## சிவனைக்காணும் ஜீவன்

62. சிவார்க்க: சக்தி தீதித்யா ஸமர்த்தீ க்ருத சித் திருசா.
சிவம் சக்தியாதிபிஸ் ஸார்தம் பச்யதி யாத்மா கதாவ்ருதி:.



சிவனாகிறசூரியன் தனது சக்தியாகிய ஒளிக்கதிர்களால், உயிர்களின் மாசுகளை நீக்கி ஞானத்தைத் தந்திடும் சக்தி யுடையவராவார். இவரது அருள்ஞானக் கண்ணால் உற்றுநோக்கப் பட்டவனாகிய ஜீவனானவன், சக்தியுடன்கூடிய பலசக்திகளால் சூழ்ந்துள்ளவராயுள்ள சிவபெருமானை, தனது ஆணவாதி ஐவகைப் பாசத்திரை நீங்கப் பெற்றவனாய், காண்கிறான் என்கிறது சிவாகமம்.

## சிவஞானத்தின் பயன்.

**63. அதாத்ம மல மாயாக்ய கர்ம பந்த விமுக்தயே.**
**வியக்தயே ச சிவத்வஸ்ய சிவாத் ஞானம் ப்ரவர்த்ததே**

– (சுவாயம்புவாகமம்)

இறைவனது பெருங்கருணையால் ஒவ்வொரு ஜீவாத் மாக்களிடமும் சிவனாரின் அருட்பார்வையாலே, தீக்ஷையாலே, ஆத்மாக்களுக்குள்ள மலம், மாயை, கர்மம் என்ற மூன்று விதமாசுக்கட்டுகளிலிருந்து ஆத்மாக்களை விடுவிக்கவும், அவைகளுக்கு சிவனின் தன்மையை வெளிப்படுத்தவும் சிவனிடமிருந்து ஞானமானது வெளிபட்டு செயல்படுகிறது என்று சைவாகமம் கூறுகிறது எனவே மோக்ஷஸாதனமாகிய ஞானத்தை பெறமுயலவேண்டும்.

## அக்ஞானத்தை நீக்கும்முறை.

**64. யோகாப்யாஸம் தத: க்ருத்வா ஞானம் தத்ர ததாப்யஸேத்**
**ததா (அ)ஞாநாந்தகாரம் ச ஞானதீபேந நாசயேத். – (சுப்ரபேதம்)**

உயிர்கள் இறைவனைக் காண்பதற்கு முதலில் யோகப்பயிற்சிசெய்து, யோகாங்கமானதியானம் தாரணை, சமாதிகளில்நின்று, அதில் ஞானத்தைப்பயிலவேண்டும். அப்பொழுது அறியாமையாகிற இருட்டை ஞானமாகிற தீபத்தின்ஒளியைக்கொண்டு விலக்கி, அழிக்கவேண்டும் என்கிறது. ஞானம் சூரிய ஒளிபோன்றது அக்ஞானம் இருள்போன்றது.

## ஒரேஆகமத்தை பின்பற்றுக.

**65. யச் சாஸ்திரேண யத் ஆரப்தம் தத் சாஸ்த்ரேணைவ தத் குரு.**
**கிருதஞ் சேத் அன்ய சாஸ்திரேண தந்த்ர தோஷாய கல்பயேத்.**

– (காமிகாதி சைவாகமங்கள்)

சமயநெறி, இறை வழிபாடு, கோயில்கட்டுவது முதலானவைகள் எந்த ஒரு ஆகமசாஸ்திரநூலின்படி துவங்கப்பட்டதோ, அதனை அந்த சாஸ்திரத்தினாலேயே மாற்றாதுசெய்க, என்றும், மற்றசாஸ்திரத்தால் செய்யப்படுமேயானால் அது சாஸ்திரக்கலப்பு குற்றமுள்ளதாகும் என்று அறியவும். எனவே பலசமய பலவகை நூல்கலப்பு தவிர்க்கத்தக்கது.



## பசுவாஸத்தால் இடத்தூய்மை.

66. **உர்வீ சார்த்ராக்ருதா யாவத் தாவத் காஸ் ஸந்நிவாஸயேத்.**
**கோபிர் நிவாஸிதா பூமி: ஸர்வதோஷாணி நாசயேத். (காமிகம்)**

வழிபாடு யாகபூசைகள் போன்றவைக்காக தேர்வுசெய்யப்பட்ட இடமானது, எதுவரையில் பசுக்களால் முழுவதும் நனைக்கப்படுமோ, அதுவரையில் அவ்வளவுகாலம் பல நாட்களுக்கு அவ்விடத்திலேயே பசுக்களை வசிக்கச்செய்யவேண்டும். இவ்வாறாக பசுக்களால் வாசம்செய்யப்பட்டபூமியானது, அனைத்து விதமானதோஷங்களையும் போக்கி அவ்விடத்தை (வாஸ்துவை புனிதப்பட்டதாகிறது என்றறிக.)

## மந்திரஸாதன மார்கங்கள்

67. **ஜபோ ரக்ஷா பரிஞானம் நிச்சய: ஸத்வ மேவ ச.**
**வ்ரதானி ச இத்யயம் மார்க: விதே: ஷோடா வ்யவஸ்தித:.**
– (மதங்கபாரமேச்வரம்15)

தெய்வமந்திரங்களைப் பயனளிக்கச்செய்திட ஆறுவழிகளை ஆகமம் கூறியுள்ளது. அவை, 1. ஜபம், 2. ரக்ஷை (தாயத்தில் அணிதல்) 3. பரிஞானம் 4. நிச்சயம் 5. ஸத்வம் 6. வ்ரதங்கள், இவை ஆறும் மந்திரஸாதனவிஷயத்தில் ஸாதகர்களுக்கான வழிகள் என்று நிச்சயிக்கப்பட்டுள்ளது.

## கிராமதேவதைகள் ஐந்து.

68. **விக்னராஜோ குஹோ விஷ்ணுர் துர்கா சாஸ்தா இதி பஞ்சகம்.**
**பஞ்ச கோசர மூர்த்யாதி சிவவத் கிராமதேவதம். (ரௌரவாகமம்)**



கிராமத்தில் மக்களால் முக்கியமாக கோயில் கட்டிவழிபடத்தக்க, கிராமத்து தேவதைகள் ஐந்தாகும். அவை 1.விக்னராஜா, (கணபதி) 2.குஹர், (முருகன்) 3.விஷ்ணு, (நாராயணப்பெருமாள்) 4. துர்கா (சண்டிதேவி), 5.சாஸ்தா, (ஹரிஹரபுத்திர ஐயனார்). ஆகியவைகள். இந்த ஐவருமே ஐந்து வம்சங்களுக்கான, குலதெய்வங்களாகக்கருதி சிவனைப்போலவே பூசிக்கத்தக்க கிராம தேவதைகள் என்று சைவஆகமங்கள் பலவும் கூறியுள்ளன.

## சிவாசார்யாரை கருதும்முறை.

**69. ஆசார்யா: சிவசாஸ்த்ரக்ஞா: மோக்ஷஞா: சிவவத் புவி.**
**சிவவத் சிந்தயேத் ஸர்வே இதி சாஸ்த்ரஸ்ய நிச்சய:**

– (சுப்ரபேதாகமசைவோத்பத்திவிதி)

சிவாலய பூசையைச் செய்திடும் சிவாசார்யார்களை, மக்கள் அவர்கள் எல்லோருக்குமான ஆசார்யபுருஷர்கள், என்றும் சிவசாஸ்திரம் அறிந்தவர்கள், என்றும், மக்களுக்கு தீக்ஷையால் மோக்ஷமளிப்பதை அறிந்தவர்கள், என்றும் பூமியில் தினமும் சிவனைப்போல் இருப்பவர்கள், என்றும் கருதி அவர்களை சிவனைப்போலவே மதிப்பளித்து அசையும் ஜங்கமலிங்கத் திருமேனிகளாக கருதிடவேண்டும். இதுவே யாவருக்கும் நிச்சயமான, சைவாகமக்கட்டளை என்கிறது சைவாகமம்.

## ஸந்தியா வந்தனஅவசியம்.



**70. விப்ரோ வ்ருக்ஷஸ் தஸ்ய மூலம்ஹி ஸந்தியா**
**வேதா: சாகா: தர்மகர்மாணி பர்ணம்.**
**தஸ்மாத் மூலம் யத்னதோ ரக்ஷிதவ்யம்**
**மூலே சின்னே நைவ சாகா ந வ்ருக்ஷ:.**

அந்தணர் ஓர் மரம் எனில் அதன் வேர் ஸந்தியா வந்தனம் கிளைகள் வேதங்கள் அதனை இலைகளோ அறச்செயல்கள். ஆகையால் அடிப்படையான வேராகிய ஸந்தியாவந்தனம் அவசியம் செய்து காப்பாற்றப்படவேண்டும். வேர் அறுத்துவிட்டபொழுதில் கிளைகளுமில்லை மரமுமில்லை. எனவே அந்தணருக்கு ஸந்தியா அவசியம் ஆகும்.



## உலகேஉடல் உயிரேசிவன்.

**71. சிவோ ஜீவ இதி ஞேய: தஸ்மாத் ஜீவ இதி ஸ்மிருதம்.**
**சிவாதி அவனி பர்யந்தம் தேஹத்வாத் தேஹீ ச உச்யதே.**

–(வாதுளசூத்தாக்யே)

உலகிலுள்ள எல்லாவற்றிலும் உள்ள ஜீவன் சிவனே என்பது அறியத்தக்கது. அதனாலேயே நம் உடலிலும் உள்ளதால் ஜீவன் என்று (இருப்பவன்) அறியப்படுகிறான். சிவதத்துவம் முதல்பிருதிவீதத்துவம் வரையிலுமே 36 முழுவதுமான உலகம் இறைவனுடைய தேஹம் என உள்ளபடியால், அதனைப்பெற்றுள்ளதால் சிவனே தேஹீ என்றும் கூறப்படுகிறார் என்று அறிக.

## பிரதோஷகாலத்து விலக்குகள்.

**72. போஜனம் சயனம் யானம் அப்யங்கம் ஹரிதர்சனம்.**
**ஜபஸ் தபஸ் ச ஸ்வாத்யாய: பிரதோஷே (அ)ஷ்ட விவர்ஜயேத்.**

மாதந்தோரும் இருமுறை மாலையில்வருகிற திரயோதசி எனும் திதியில்வருகிறபுண்ணியகாலமாகியபிராதோஷவழிபாட்டுகாலத்தில் 1. உண்பது, 2. படுத்திருப்பது, 3. பயணம்செய்வது, 4. எண்ணெய்தேய்த்துமுழுகுவது, 5.விஷ்ணுவைசென்றுகாண்பது, 6.பிறமந்திர ஜபம், 7.பிராணாயாமதவம், 8.வேதமோதிக்கற்பது ஆகிய எட்டும் கைவிடத்தக்க கூடாதசெயல்களாக கூறப்படுகிறது.

## பிரதோஷத்தில் நீக்கவேண்டியவை.

**73. பிரஸ்தானம் போஜனா ப்யங்கம் ஜப ஸ்வாத்யாய மைதுனம்.**
**தபஸ் ச ஹரிஸேவா ச பிரதோஷே அஷ்ட வர்ஜயேத்**

– (காரணாகமம்)

பயணம்மேற்கொள்வது, உணவுசாப்பிடுவது, எண்ணைகுளியல், பிறமந்திரஜபம், வேதமறிதல், புணர்ச்சி, தவம், ஹரிசேவை ஆகிய எட்டுசெயல்களும், சூரியஅஸ்தமனத்திற்கு முன்னால் மூன்றே முக்கால்நாழிகையில், அதாவது ஒன்றரை மணிகாலத்திற்கு பிரதோஷபுண்யகாலத்தில் (பிற்பகல் மணி 4.30 முதல் 6 மணிவரை) தவிர்த்திடவேண்டும் என்பது ஆகமவிதி.

## பிரதோஷத்தில் செய்ய வேண்டியவை.

**74. சிவார்ச்சனம் ஜபோ தியானம் ஸ்தோத்ரம் கீதம் ப்ரதக்ஷிணம்.**
**கீர்த்தனம் ச நமஸ்காரம் பிதோஷே (அ)ஷ்டௌ ஸமாசரேத்.**

– (சைவாகமங்கள்)

1.சிவனைப்பூஜிப்பது (நாமார்சனைசெய்வது) 2.சிவநாமமந்திரத்தை ஜபம் செய்வது, 3.சிவரூபத்தை தியானம்செய்வது, 4.சிவனைத் துதிப்பது, 5.சிவனின் புகழைப்பாடுவது, 6.சிவமூர்த்தியைச்சுற்றி வலம்வருவது, 7.ஸங்கீதபஜனைசெய்வது, 8.தரையில்விழுந்து வணங்குவது, ஆகியஎட்டு செயல்களையும் பிரதோஷகாலத்தில் செய்யவேண்டும்என்கிறது ஆகமம்.



## சிவபஞ்சாக்ஷரம்ஜபித்திடும்.

**75. சித்ருசா ஆத்மநி த்ருஷ்ட்வேசம் த்யக்த்வா வ்ருத்தி மரீசிகாம்.**
**லப்த்வா சிவபதச் சாயாம் த்யாயேத் பஞ்சாக்ஷரீம் சுதீ:**

**–(சிவஞானபோதசூத்ரம்)**

சைவசமயநெறியில் வாழும் யாவரும், பொய்யான இந்த உலகவாழ்கை சுகம் என்ற கானல்நீரைக் கைவிட்டு, (ஆசையைவிட்டு) தன்புருவநடுவில் ஞானக்கண்ணால் சிவனை தன்னகத்தேகண்டு, உள்ளத்தில் உள்ள சிவனாரின் திருவடிநிழலில் இருந்தபடி, பஞ் சாக்ஷரமந்திரத்தை ஜபிக்கவேண்டும், என்று ரௌரவாகமம் கூறுகிறது.

## சிவபூசைக்குரிய ஆறுஇடம்.

**76. திவாகரே சாத்மநி ச லிங்கே வன்ஹௌ குரௌ ததா.**
**புஸ்தகே ச ஸமாக்யாதம் ஷட் ஸ்தாநேஷு சிவார்ச்சனம்.**

சூரியனிடத்திலும், தனதுயிரிலும், சிவலிங்கத்திலும், நெருப்பிலும், குருவினிடத்திலும், ஆகமபுத்தகத்திலும், ஆகிய ஆறுஇடங்களில் தினமும் சிவனை வழிபடுமாறு கூறப்பட்டது. இதுவே ஷடாதாரார்ச்சனம் எனப்படுவது. இவற்றில் ஏதேனும் ஒன்றையாவது பூசிக்கவேண்டும்.

## இருவகை பூசைகள்.

**77. ஆத்மார்த்தம் ச பரார்த்தம் ச பூஜா த்விவிதிமுச்யதே.**
**ஆத்மார்தபூஜா ஹீநஸ் து ந குர்யாத்து பரார்த்தகம்.**

தனது குடும்பத்துக்கு மட்டும் பயன் பெற்றிடதான் செய்வது ஆத்மார்த்த பூசை. (இதுவே அகப்பூசை / வீட்டுபூசை.) மற்றொன்று, பிறர்நலம் வேண்டிச் செய்யும், ஆலயத்தின் பூசை. இதுவே பரார்த்தபூசை, இவ்விதம் பூசையானது இருவகையாகும். இவற்றில் தீக்ஷைபெற்று ஆத்மார்த்த பூசையைச் செய்யாதவர் ஆலயத்தினுடைய பரார்த்தபூஜையை செய்யக்கூடாது, என்பது சைவாகமத்தின் கட்டாயக்கட்டளை.



## சிவனுக்குமுன் சூரியனைபூசித்திடு.

78. திவாகரஸ் து ஸகள: சிவோ நிஷ்கள ஏவ ச.
ஸகளம் பூர்வம் ஆராத்ய பச்சாந் நிஷ்களம் அர்ச்சயேத்.

சூரியனோ உருவத்துடன்இருப்பவர். சிவனோ அருவமாயுள்ளவர். ஆகையால் யாவரும் முதலில் உருவக்கடவுளான சூரியனை பூசித்துப் பிறகு அருவப்பரம் பொருளை அதாவது சிவனை பூஜிக்கவேண்டும். தினமும் அனைவருமே தவறாமல் சூரியனை முதலில் வணங்கவேண்டும்.

## த்ரிஸந்தியா தேவிஸ்தானம்.

79. மூலாதாரே து காயத்ரீ ஸாவித்ரீ மணிபூரகே.
அநாஹதே ஸரஸ்வதீஸ்யாத் சந்தா நாடீத்ரயம் ததா.

மூலாதாரத்தில் காயத்ரீ தேவியும், நாபியானமணிபூரகத்தில் ஸாவித்ரீ தேவியும், இதயமான அநாகதத்தில் ஸரஸ்வதீதேவியும், சந்தஸ்சக்திகள் இடை, பிங்களை, சுழுமுனை என்கிற மூன்று முக்ய மைய நாடிகளில் விளங்குகின்றனர் என்று அறிக.

## ஆலயப்ரவேச விதிமுறை.

80. சுமநாஸ் ச சுசாந்தஸ் ச பூத்வா தியாயன் ஸதாசிவம்.
பாத ப்ரக்ஷாளனம் க்ருத்வா ஆலயம் து ப்ரவேசயேத்.

சேவார்த்திகள் யாவரும் தனது கைகளையும் கால்களையும் முதலில் சுத்தம்செய்துகொண்டு அமைதியான தூயமனது உடையவர்களாகவும், சாந்தகுணம் உள்ளவர்களாகவும், தம்கையில் மலர்களை எடுத்துக்கொண்டு மனதில் சிவனை தியானித்தவாறு தேவாலயத்தினுள் பிரவேசிக்கவேண்டும் என்பது சிவாகம விதிமுறை.

## ஆத்மார்த்த பூஜாலிங்கவகை.

81. சைலஜம் ரத்னஜம் சைவ லோஹஜம் தாருஜம் ததா.
மிருண்மயம் க்ஷணிகம் சைவ ஷட்விதம் லிங்கம் உச்யதே.

வீட்டில் ஆத்மார்த்த பூசைக்கான சிவலிங்கமானது, 1.கல்லாலானது, 2.ரத்தினத்திலானது, 3.உலோகத்தாலானது, 4.மரத்தாலானது, 5.மண்ணாலமைந்தது, 6.க்ஷணிகலிங்கம் (தற்காலிகமாக அமைக்கபடுவது) என்று, ஆறுவிதமாக சைவாகமக்கூற்றுகளால் அறியப்படவேண்டியது. ஏதேனும் ஒன்றைத் தேர்வு செய்வது முறை.

## பூசைக்கேற்ற தற்காலிக லிங்கங்கள்.

82. ஸிகதம் தண்டுலம் சான்னம் நதீம்ருத் கோமயம் ததா.
நவநீதம் ச ருத்ராக்ஷம் பஸ்ம சந்தன கூர்ச்சகம்.
புஷ்பமாலா குளம் சைவ க்ஷணிகம் துவாதசம் பவேத்.

(காரணாகமம்)

மணல், பச்ச அரிசி, சமைத்தஅரிசிசாதத்திலும், (அன்னம்) ஆற்று மணல், பசுஞ்சாணம், பசுவெண்ணை, ருத்ராக்ஷம், (திருநீறு) விபூதி, சந்தனம், தர்பைமுடிச்சுகூர்ச்சம், மலர்மாலை, வெல்லக்கட்டி, ஆகிய 12வகையிலான தூயப்பொருள்களில், தற்காலிகமாக, சிவலிங்கம் (அடையாளத்திருமேனியாக) எனக்கருதி, சிவனைப்பூசிக்கலாம். ஆனால் ஒரு தீக்ஷிதர் தம் ஆயுள்முழுவதற்கும் ஏதேனும் ஒருவகையையே ஏற்றுபூசிக்கவேண்டும்.

## கோயிலில் சிவலிங்கவகை.

83. ஸ்வயம்பூர் தைவிகம் சைவ திவ்யம் மானுஷம் ஆர்ஷகம்
ராக்ஷஸம் பாணலிங்கம் ச ஸப்த ஏதே லிங்கம் உச்யதே

– (காரணாகமம்)

ஆலயத்திலுள்ள லிங்கங்கள் ஏழுவகையாகும். அவை, 1. தானேதோன்றியது (சுயம்பு). 2. தேவிவழிபட்டது (தைவிகம்). 3. தேவர்கள்பூசித்தது (திவ்யம்). 4. அரசர்வைத்தது (மானுஷம்). 5. ரிஷிகள்வைத்தது (ஆர்ஷகம்). 6. ராக்ஷஸர்பூசித்தது (ராக்ஷஸம்). 7. நர்மதைநீரில்கிடைப்பது (பாணம்) ஆகியவை ஆலய பிரதிஷ்டைக்கேற்றவை.

## ஆகம சிவசாஸ்திரத்தின் தனிப்பெருமை.

84. சித்தம் சிவாத்மகம் க்ருத்வா சிவம் ஆராதயேத் ஸதா.
சிவதர்மாத் பரோ தர்மோ ந பூதோ ந பவிஷ்யதி.
அன்யேஷு பசுதர்மேஷு ஸ்வர்க ஏவ பலம் ஹி தத்.
ஏதத் ஹி சிவசாஸ்த்ரேஷு புக்தி முக்தி ப்ரதாயகம்.
ஸர்வசாஸ்த்ரம் ஸமுத்ஸ்ருஜ்ய சிவசாஸ்த்ரேஷு யோஜயேத்.

(சுப்ரபேதம்)

சித்தத்தை சிவனிடத்தில் வைத்துஎப்பொழுதும் சிவனை பூசிக்கவும் சிவதர்மத்தைக் காட்டிலிலும் வேறான மேலானதொருதருமம் மூவுலகில் இருந்ததுமில்லை, இனி இருக்கப்போவதும் இல்லை. காரணம் மற்றய நூல்களில்

கூறப்படுகின்றவை பசுதர்மங்களே. அதனால் அவைகள் சுவர்கத்தை மட்டுமே பயனாகத் தரக்கூடியவை. இந்த சித்தாந்தவகை சிவசாஸ்திரங்களில் கூறியவையே புக்தி, முக்தி என்கிற இருவகையானப் பயனையும் கொடுப்பதாகும். ஆதலால், மற்றய ஸகலசாஸ்திர செய்முறைகளையும் பின்பற்றாமல் (தவிர்த்துவிட்டு) சிவசாஸ்த்திரங்களில் யாவரும் தன்னை இணைத்துக் கொள்ளவேண்டும். சிவாகமத்தைத்தழுவி வாழ்க.

## சிவாலய நிர்மாணப்பயன்.

**85. இஷ்டகா சைல லேஹைர் வா யக் குர்யாத் பவனம் நர:**
**காஞ்சநேந விமானேந சிவலோகே மஹீயதே. (சுப்ரபேதம்20ல்17)**

சிவபெருமானுக்கு சுட்டசெங்கற்களாலோ, கருங்கல்லினாலோ, உலோகத்தினாலோ, யார் கோயிலைக் கட்டிவைக்கிறாரோ, அவர் முடிவில் தங்கவிமானத்திலேறி சிவலோகம் சென்று அங்கேயே என்றும் நித்யபரமானந்தத்துடன் வாழ்வார் என்கிறது சுப்ரபேதாகமம்.

## சிவாலய ஸ்தாபனப்பயன்.

**86. ஸம்ஸித்தே து விமானே து ஸ்தாபனம் விதிமார்கத:.**
**சிவலோக மவாப்நோதி பூஜ்யமாநஸ் ஸதா (அ)மரை:.**

- (சுப்ரபேதாகமம்20ல்18)

உலகில் எவரொருவர் சிவனுக்கு முறைப்படிகட்டியஆலயத்தில் ஆகமவிதியின் வழிமுறையால் ஆலய சிவலிங்கத்தை (சிவனை) ஸ்தாபனம் செய்கிறாரோ அவர் எப்பொழுதும் தேவர்களால் பூசிக்கப்படுவராக சிவலோகத்தை அடைகிறார். இவ்வுலகில் சுகமாகவாழ்ந்து, முடிவில் பேரானந்தமடைவார் என்று கோயில் கும்பாபிஷேகப் பயனை சுப்ரபேதாகமம் கூறுகிறது.

## ஆறுவடிவில்சிவபூசை விதி.

**87. சூர்யோபஸ்தான மாத்மேஜ்யா லிங்கா அக்னி குரு புஸ்தகம்.**
**இதி நித்யம் ஸமாக்யாதம் ஷடாதார சிவார்ச்சனம்.**

தினமும் ஆறுநிலைகளில் (உருவங்களில்) முறையே சூரியன், ஜீவன், லிங்கம், அக்னி, குரு, புஸ்தகம் என்ற ஆறுஇடங்களில் சிவனைப் பூசிக்கவேண்டும் என்று ஆகமப்படி, சோமசம்புசிவாசார்யார் கூறுகிறார்.

## விரும்பும் முறைகளில் சிவபூசை.

**88.** **ஸமாதினா தபோ தியான தாரணா பாவனா ஜபை:.**
**நிஜமூர்த்தெள குரோர் மூர்த்தெள புஸ்தகே ஸலிலே (அ)னலே.**
**சித்ராதெள ஸ்தண்டிலே வாபி லிங்கேப் யத்யந்த முத்தமம்.**
**யஜனம் பஹு-தா சம்போ: யதேஷ்டே ஆசரேத் ஸதா.**

**- (சோமசம்புபத்ததிநூல்)**

யோகாங்கமான ஸமாதி, என்கிற உருவமற்றநிலையில் பரஞ்ஜோதியாகவிளங்குவதில் தன்னை ஒருமுகப்படுத்தி இருத்தலே **சமாதிநிலை.** மனதைக்கட்டுவது **தாரணம், ஜபம்** என்பது கருதவேண்டியவரைதன்னைநோக்கிவந்திடஅவரது மந்திரத்தைக்கூறுவது. ஜபம் பிராணாயாமமே தவம், தியானம், தாரணா, சிவபாவனா, ஜபம், இவற்றாலும் தனதுஉருவத்திலும், குருவின்உருவத்திலும், புஸ்தகத்திலும், தூயகும்பதண்ணீரிலும், நெருப்பிலும், சிலையிலும் சுவர்ஓவியங்களிலும், தானியப்பரப்பாகிய ஸ்தண்டிலத்திலும், மிகமிகச்சிறந்ததான சிவலிங்கத்திலும், இவ்விதமாக சிவபெருமானுக்கு செய்யத்தக்க பூசையானது பலவகையில்கூறப்பட்டுஉள்ளதால், அவரவர்கள்தனக்குவிருப்பமான ஒன்றில், தினமும் சிவபூஜையைச் செய்யவேண்டும்.

## உணவுசாப்பிடும் முறை.

**89.** **க்ராஸை: பரிமிதைர் பாகம் பாகம் தோயேந பூரயேத்.**
**ப்ராண ஸஞ்சாரணா யாம்சம் உதரஸ்ய ந பூரயேத்.**
**மூர்தாவிதான மௌனத்கட்யம் குத்ஸநம் ஜ்ரும்பனம் த்யஜேத்.**
**நான்னஸ் யோர்த்தம் பிபேத் வாரி ந ப்ரக்ஷாளித பாணிநா.**
**ந. விஸ்தாரித வக்த்ரேண ந சாதெள நான்ய சேதஸா.**

**- (சோம்பசம்புபத்ததி**

உணவை உண்ணும்போது, பின்பற்றப்பட வேண்டியவைகள், ஒருமுறை விழுங்கக்கூடிய உணவின் அளவு **கிராஸம்** எனப்படும். அளவிதனால் குறிப்பிட்ட எண்ணிக்கையில் உணவை விழுங்கவும். வயிற்றில் கால்பகுதியை உணவாலும், கால்பகுதியை தண்ணீராலும், பிராணவாயுக் காற்று திரிந்து பணியாற்றிடக் கால்பகுதியை விட்டும், கால்பகுதியை நிறப்பாமலும் உணவை சாப்பிடவேண்டும். வயிற்றை முற்றிலுமாக நிறப்பிச்சாப்பிடுவது உடலுக்கு ஆகாதது. தலையை மூடியபடிசாப்பிடுதல் கூடாது. கழுத்து அடைக்கும்படியும், திணரும்படியும், உண்ணலாகாது. தும்பல், இருமல், பொறைஏறுதல்,

கொட்டாவி விடுதல் இவற்றை உண்ணும்போது கைவிடவேண்டும். சாப்பிட்டு முடித்தபிறகு உணவுக்குமேலே தண்ணீரைக் குடிக்கக் கூடாது. கைகழுவிய பிண்ணும், திரந்தவாயாலும், முன்னும் மற்றதில் மனம் உள்ளவாறும் உண்ணும்போது நீர்பருகக்கூடாது.

## உணவில் நீக்கும் பரிஹாரம்.

**90. மக்ஷிகா நக கேசாதி துஷ்டம் த்யக்த்வா அல்ப மோதனம்.**
**சேஷம் க்ஷாளித ஹஸ்தேந புஞ்ஜீத ஸ்ப்ருஷ்ட பஸ்மநா.**

உணவை உண்ணும்போது, அந்தஉணவில் ஈ, எரும்பு, நகம், முடி,இவை காணப்பட்டு அதுஆகாததாக ஆனபோது, அதிலிருந்து அவற்றை, சிறிதளவு உணவுடன்சேர்த்துஎடுத்து, வெளியிலே போட்டுவிட்டு, கைஅலம்பியபின்பு, உணவில் விபூதியைப்போட்டு விட்டுப் பிறகு அதன் மீதியைச் சாப்பிடலாம். அத்தகைய உணவைக் கைவிடலாம். அல்லது நீக்கிவிட்டு திருநீறுபோட்டுப் புனிதப்படுத்திய பின்பு சாப்பிடலாம் என்றுஅறிக.

## பித்ருக்களுக்கு பிரியமானவை.

**91. அகஸ்த்யம் ப்ருங்கராஜம் ச துளசீ சதபத்ரிகா.**
**மாலதீ திலபுஷ்பம் ச பித்ருணாம் வல்லபானி ஷட்.**

அகத்திஇலை (கீரை, பிருங்கராஜபத்ரம் கருசலாங்கன்னி, துளசீபத்ரம், சதபத்ரிகா சதகுப்பைஇலை, மாலதீ ஜாதி மல்லிகைபூ, திலபுஷ்பம் எள்ளுப்பூ ஆகிய ஆறுபொருளும் சிராத்தம் அமாவாசை முதலிய காலங்களில் பித்ருக்களுக்கு மிகவும்ஏற்ற பிடித்தமானவை என்பதை அறிக.

## ருத்ராக்ஷமாலையில் ஜபபயன்.

**92. அக்ஷசூத்ரம் விநா வத்ஸ ஜபம் ஸர்வஞ்ச வர்ஜயேத்.**
**தஸ்மாத் ஸர்வப்ரயத்நேந ருத்ராக்ஷைர் ஜபம் ஆரபேத்.**
**ருத்ராக்ஷமாலயா ஜப்தோ மந்த்ரோ(அ)நந்த பலப்ரதः.**
**அருத்ராக்ஷ ஜபः பும்ஸாம் தாவன்மாத்ர பலப்ரதः – (ஸ்காந்தே)**

ருத்ராக்ஷமாலை அல்லாது மற்றதில் ஜபித்தலை விலக்கவேண்டும். ருத்ராக்ஷமாலையிலேயே ஜபம் செய்தல் மிகச்சிறந்த பயனைத்தரும். ருத்ராக்ஷமாலையில் ஜபிக்கப்படுகிற மந்திரமே எல்லையற்ற பயனைத்தரும். ருத்ராக்ஷமில்லாதவைகளில் செய்வது மனிதர்களுக்கு குறைந்த பயனையே தருபவை.

## உரியகாலதேசத்தேவை.

**93. ஸ்வதேச காலயோரேவ யக்ஞா: இஷ்டபலப்ரதா:.
அன்யதேசே (அ)ன்யகாலே ச தே ஏவா(அ)நிஷ்டப்ரதா: மதா:.**

பூஜை எனும் யாகத்திற்கு அதற்கு உரிய(தேசம்)இடம், காலம், இவை. இரண்டுமே உரிய விரும்பும்பயனைத் தருபவையாகும். மற்ற தேசத்திலும் (கூறப்படாத பிறஇடத்திலும்) உரியகாலம் அல்லது ஏற்றபுண்யகாலநேரம் இல்லாதபோதும் செய்யப்படுவது விரும்பாத தீமையையே தரக்கூடியதாகும். எனவே பூசையை உரியகாலத்தில் உரியபுனித இடத்திலேயே செய்து பயனைடதல் வேண்டும் என்று அறிக.

## ப்ரதக்ஷிணத்தின் பயன்.

**94. தீர்த்தஞ்ச தானம் புண்யம் ச தபோ யக்ஞே ததைவ ச.
ப்ரதக்ஷிண ஸமம் நாஸ்தி ப்ரத்யக்ஷ பல ஸித்திதம்.**

புனிததீர்தங்களில் முழுகுதல், தானம்செய்தல், புண்ணியசெயல்கள், பிராணாயாம தவம்செய்தல், வேள்விசெய்தல் இவையாவும், நமக்கு கண் எதிரே பயனைத்தருகின்ற பிரதக்ஷிணத்திற்கு இணையாக ஆகாதவை. ஆதலால் ஆலயதெய்வப்ரதக்ஷிணம் மிகவும் சிறந்த செயலாகும் என்றறிக.

## பன்னிருமாத நக்ஷத்திரம்.

**95. சித்ரா விசாகா மூலம் ச உத்தராஷாட மேவ ச.
ச்ரவிஷ்டா ப்ரோஷ்டபா (அ)ச்வின்ய: க்ருத்திகா (ஆ)ர்த்ரா புனர்வசூ.
மகா சோஉத்தர நக்ஷத்ரம் மேஷாதி த்வாதசஸ் வபி.
மாஸ நக்ஷத்ரம் இத்யுக்தம் ஸர்வ தேவார்ச்சநே ஹிதம்.**

– (சந்த்ரஞானாகமம்)

1.சித்திரை 2. விசாகம் 3. மூலம் 4. உத்தராடம் 5. அவிட்டம் 6.பூரட்டாதி 7. அசுவிநீ 8. கிருத்திகை 9. ஆதிரை 10. மகம் 11. உத்தரம் ஆகிய 12 நக்ஷத்திரங்களும், ஆலயத்திலும், வீட்டிலும் சிறப்புவழிபாட்டிற்கு உரிய 12 மாதங்களுக்குமான திருநக்ஷத்திரங்கள் என்பது அறியத்தக்கது ஸர்வதேவதை பூசைக்கு ஏற்றவை.



## லிங்கபேரதிசை நோக்குப்பயன்

96. ச்ரேஷ்டம் பச்சாந்முகம் லிங்கம் தக்ஷாஸ்யம் பேர முச்யதே.
அவ்யக்தம் மோக்ஷதம் லிங்கம் வ்யக்தம் பூதி ப்ரதாயகம்.
புக்தி முக்தி ப்ரதம் மிச்ரம் ஏவம் ஞாத்வா ஸமாசரேத்.
– (உத்தரகாமிகாகமம்2ல்)

மேற்குநோக்கியமுகமாயுள்ள சிவலிங்கமும், தெற்குமுகமாயுள்ள பிம்பமும், (உருவச்சிலையும்,) சிறப்பானவை. அருவநிலையில் உள்ளது முக்தியளிக்கும், அருவுருவநிலையில் உள்ளது போகம் முக்தி இரண்டையும் தரும், வெளிப்பட்ட முழுஉருவநிலையில் உள்ள பிரதிமை செல்வத்தை அளிக்கும் என்று ஆகமங்களால் அறியத்தக்கது.

## பத்துவகைதானப்பொருள்.

97. கோ பூ தில ஹிரண் யாஜ்ய வாஸோ தான்ய குடானி ச.
ரௌப்யம் லவன மித் யாஹு: தச தானா: ப்ரகீர்த்திதா:.

பசு, மாடு, பூமி, எள்ளு, தங்கம், நெய், துணி, தானியம், வெல்லம், வெள்ளி, உப்பு, இவை பத்தும், நமக்கு உயர்ந்த விருப்பப்பயன்களைத் தரக்கூடிய பத்துவகையான தானத்திற்கு உரியபொருட்கள்.

## ஆதிசைவனின் ஐந்து சின்னம்.

98. உபவீதம்ச ருத்ராக்ஷம் உஷ்ணீஷம் ச உத்தரீயகம்.
பஸ்ம சைவ ஆதிசைவாநாம் பஞ்சமுத்ரா: ப்ரகீர்த்திதா:
– (குமாரதந்த்ரம்)

பூணூல், ருத்ராக்ஷம், தலைப்பாகை, உத்தரீயம், விபூதி இவை ஐந்தும் ஆதிசைவர்களுக்கு அடையாளமாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றுடனிருத்தல் அவசியம்.

## ஆலயஅமைப்புவகைப்பயன்.

99. மிருத் தாரு இஷ்டகா சைலைர் வா ய: குர்யாத் பவனம் நர:
த்ரி ஸப்த குல ஸம் யுக்த: சிவலோகே மஹீயதே.
ம்ருண்மயாத் கோடி குணிதம் புண்யம் ஸ்யாத் தாருபிக் க்ருதே.
கோடி கோடி குணம் புண்யம் மிருத் காஷ்டாத் இஷ்டகாமயே.
மிருத் சைலயோஸ் ஸமம் ஜ்ஞேயம் பலம் ஆட்ய தரித்ரயோ:.
– (சிவதர்மத்தில்)

மண், மரம், செங்கல், கருங்கல், இவறிலொன்றால் கோயில் கட்டியவன் தனது 21 குல மூதாதையருடன் சிவலோகத்தில் பேரானந்த வாழ்வு பெறுவான். மண்முதலானவைகளில் செய்யப்படும் கோயில் முறையே முன்னதைவிடபிந்தியவகை பலகோடிமடங்கு உயர்ந்த பயனைத்தரும் என ஆலய அமைப்புப்பயனை சிவதர்மம் கூறியுள்ளது.

## லிங்கபேரபழுதுநீக்கப்பயன்.

**100.** **ஜீர்ணாதி தோஷ ஸம்யுக்தம் பூஜாயுக்தம் ச சுஸ்திதம்.**
**ஜீர்ணோத்தாரே க்ருதே கர்துர் மௌளிகம் பல மிஷ்யதே.**
**ஜீர்ணாத்யம் பூஜிதம் ஹந்தி நிஹந்தி ததபூஜிதம்.**
**தஸ்மாத் ஸமுத்தரேத் ஜீர்ணம் யதாசாஸ்த்ரம் சுகாய ச.**

– (காமிகாகமம்)

பூசையிலிருப்பதும், அசையாதிருப்பதுமான லிங்கம், தெய்வச்சிலை இவை பழுதுடன் கூடியதாக உள்ளபோது, அதை முறையே சரிசெய்து மேம்படுத்துதலை செய்பவருக்கு சிறப்பானபயன் கிடைக்கும். பழுதடைந்தது பூசிப்பவனைஅழிக்கும், அது பூசிக்காதபோதும் அழிக்கும். அதனால் சாஸ்திரப்படி நம்சுகத்தின்பொருட்டு அதனை மேம்படுத்தவேண்டும். ஆலயம், சிவலிங்கம், தெய்வச்சிலை இவைகள் பழுதடைவதை உடனே நீக்கவேண்டும் என்பது சிவாகமங்களின் கட்டளையாம்.

## சிவபூசையில் ஐவகைவில்வம்.

**101.** **குந்தாக்யம் சுகபில்வம் ச நிர்ஜீவித கபித்தகம். (நிர்குண்டீ)**
**ஏதாநி கூல பத்ராணி பஞ்ச பில்வம் இதி ஸ்மிருதம்.**

முல்லைக்கொடியின் மூவிதழ் இலை, கிளுவை மரஇலை, பில்வஇலை, நொச்சிஇலை, விளாமரத்து இலை, இவை ஐந்துமே வில்வத்திற்கு ஸமமான பஞ்சபில்வங்கள் என்பதை அறிந்து இவற்றைசிவ பூசையில் பயன்படுத்த வேண்டும்.



## பஞ்சோபசாரபூஜை.

102. கந்தம் புஷ்பம் ச தூபம் ச தீபம் நைவேத்ய மேவச.
பஞ்சோபசாரா ஏதேஸ்யு: தீபாந்தம் வாபி ஸம்மதம். -(காமிகம்-4ல்)

1.அரைத்தசந்தனம் பூசுதல், 2.மலர்கள் தூவுதல், 3.புகையைநுகரச் செய்தல், 4.விளக்கேற்றிக்காண்பித்தல் 5.உணவை நிவேதனமாய் அளித்தல், ஆகிய இவை ஐந்துசெயல்களும் பூசையில் ஐந்துவகை உபசரிப்புகள் என்று கூறப்படுகின்றன. தீபாராதனை முடிவிலும் ஏற்றதே ஆகும்.

## சிவனின் பஞ்சாஸ்த்ரங்கள்.

103. சிவாஸ்த்ரம் க்ஷுரிகாஸ்த்ரம் ச ததா பாசுபதாஸ்த்ரகம்.
வ்யோமாஸ்த்ரம் சைவ கோராஸ்த்ரம் அஸ்த்ரம் பஞ்சவிதம் பவேத்.
- (வாதுளாகமம்)

சிவாஸ்த்ரம், க்ஷுரிகாஸ்த்ரம், பாசுபதாஸ்த்ரம், வ்யோமாஸ்த்ரம், அகோராஸ்த்ரம், ஆகிய ஐந்தும் சிவனாரின் பஞ்சாயுத வடிவான பஞ்சாஸ்த்ரங்களாக வாதுளாகமம் கூறுகிறது.

## உஷ்ணீஷஉத்தரீயகாலம்.

104. ஸ்தாபனே ப்ரோக்ஷணே யாகே வன்ஹிகார்யே ஜபே ததா.
உஷ்ணீஷம் உத்தரீயம் ச தாரயேத் து சிவத்விஜ:. - (தீப்தாகமம்)

சிலையை நிறுவிவைத்தல், புனிதநீராட்டல், யாகம், ஹோமம், ஜபம் இவைகளில் தலைப்பாகை தோளில் மேலாடை இவைகளை அணிய வேண்டும்.

## காலையில் செய்யவேண்டியவை.

105. பிராம்ஹே முகூர்த்தே உத்தாய ஸம்யக் த்யாத்வா ஸதாசிவம்.
சௌசஞ்ச தந்த சுத்திம் ச ஸ்நாநம் ச பூதி தாரணம்.
ஸந்தியாம் ஜபந்து காயத்ரியா: குர்யாத் சூர்யோதயாத்புரா.
- (சைவாகமம்)

விடியற்காலையில் 4 மணிக்கே எழுந்திருந்து முதலில் ஸதாசிவரை நன்றாக எண்ணிதியானம் செய்து பல் தேய்த்தலையும் நீராடுதலையும் திருநீறுஅணிதலையும் சந்தியாவந்தன அனுஷ்டானத்தையும், காயத்ரி மந்திரத்தை ஜபித்தலையும் சூரிய உதயத்திற்கு முன் செய்யவேண்டும்.

## ஆத்மார்த்தபூஜா அதிகாரிகள்.

**106. அபத்னீகோ க்ருஹஸ்தோ வா ப்ரம்மசாரீ ச நைஷ்டிக:.
பௌதிகோ வா வனஸ்தஸ்ச சாதுர்வர்ணாஸ் ததோ நர:.
ஆத்மார்த்தம் பூஜயேத் நித்யம் யதா சாஸ்த்ரம் அதந்த்ரித:.**

**– (காரணாகமம்)**

மனைவியை இழந்தவன் இல்லறத்தவன், திருமணம் ஆகாத பிரம்மசாரி, இறுதிவரையிலும் திருமணம் செய்யாது தவவாழ்க்கையிலுள்ள நைஷ்டிகன், பௌதிகன், காட்டில் வாழ்பவர் நால்வகை ஜாதியினர், மனிதர்கள் யாவரும் ஆகமநெறி முறைப்படி வீட்டில் ஆத்மார்த்த பூஜையை தினமும் செய்யவேண்டும்.

## இல்லறத்தார் அறங்கள்.

**107. க்ருஹிணீஸங்க்ரஹம் க்ருத்வா விவாஹம் விதிநா ததா.
அப்யாகத அதிதீன் சைவ யதாசக்தி ஸுபூஜனம்.
தேவாக்னி குருபூஜா ச க்ருஹே தர்மம் ச நித்யச:.
சிவாகமோக்த ஷட்கர்ம ச்ரத்தா பக்தியா து வர்த்தயேத். –(சுப்ரபேதம்)**

விதிமுறைப்படி மனைவியைத் தேர்ந்தெடுத்து திருமணம்செய்து, அவளுடன் கூடி முடிந்தவரை விருந்தினரை மகிழ்வித்து கௌரவிக்க வேண்டும். தினமும் தெய்வம், அக்னி, குரு, இவர்களைப் பூசிப்பதும், சிவாகமத்தில் கூறிய ஆறுவகைசெயல்களையும் பக்தியால் வளர்ப்பதும். இல்லறத்தினருக்கான க்ருஹஸ்தர் தினசரிக் கடமைகள் என்று ஆகமங்கள் கூறுகின்றன. யஜனம் = பூசித்தல், யாஜனம் = பூசைசெய்வித்தல், அத்யயனம் = வேதம் பயிலுதல் அத்யாபனம் = வேதாகமத்தை கற்பித்தல், தானம் = கொடுத்தல், ப்ரதிக்ரஹம் = தானமேற்றல், இவைஷட்கர்மாக்கள் ஆகும்.

## பிரம்மசாரியின்கடமைகள்.

**108. ஸ்வாத்யாயம் குருசுச்ருஷா ஸம்யமஸ் ஸத்ய வாசகம்.
ப்ராஜாபாத்ய வ்ரதம் சைவ ப்ரம்மசாரீ ஸதா சரேத்.
ப்ரம்மசர்யாதி பிக்ஷாந்தம் ப்ராஜாபத்யாதிகம் த்விஹ.**

**– (சுப்ரபேதம்)**

வேதம்கற்றல், குருவுக்குப் பணிவிடைசெய்தல், புலனடக்கத்துடன் இருத்தல், உண்மையைப்பேசுதல், ப்ராஜாபத்யவ்ரதத்தில் இருத்தல் இவைகளை பிரம்மசாரி எப்பொழுதும் பின்பற்றவேண்டும். பிரம்மசர்யதர்ம பிக்ஷைஎடுப்பது முதலானவை ப்ராஜாபத்யவ்ரதம் என்று அறியவேண்டும்.

## யாகத்திற்கானமரவகை.

**109.** **அச்வத்தோ உதும்பர ப்லக்ஷா: ஆஷாட கதிரஸ் ததா.**
**ந்யக்ரோதஸ் ச சமீ பில்வ: சூத: வைகங்கதாஸ் ததா.**
**அஸனஸ் ச சிரீஷஸ் ச யக்ஞவ்ருக்ஷா: ப்ரகீர்த்திதா:.**

அரசு, அத்தி, இத்தில், ஆஷாட, கருங்காலீ, ஆல், வன்னி, வில்வம், மாமரம், வைகங்கதம், அஸனம், சிரீஷம், இவைகள் வேள்விக்கான மரவகைகள் என்று அறிக. இவைகளின் விறகுகள், பரிதி குச்சிகள், சமித்துகள், இலைகள் சரகுகள் முதலியனவற்றை பக்தர்கள் தினமும் கோயிலுக்கு எடுத்துச்சென்று கொடுப்பது புண்யச்செயல் நல்லது. (பொரசு, சந்தனம், மூங்கில், பாதிரி, மருதம், பலா, நெல்லி, முதலியனவுமாகும்). ஹோமபூசைக்குஉதவக்கூடியவை.

## தெய்வங்களைவலம்வரும்முறை.

**110.** **ஏகம் விநாயகஸ் யார்த்தே த்வே சூர்யே த்ரீணி சாங்கரே.**
**சத்வாரி தேவ்யா: விஷ்ணோஸ் ச ஸப்தா ச்வத்த ப்ரதக்ஷிணம்.**

தேவாலயத்தில் வினாயகருக்கு ஒருமுறையும், சூரியனுக்கு இரண்டுமுறையும், சங்கரருக்கு (சிவனுக்கு) மூன்றுமுறையும், தேவிபார்வதிக்கும் விஷ்ணுவுக்கும் நான்குமுறையும், அரசமரத்திற்கு ஏழுமுறையும், பிரக்ஷிணத்தை செய்யவேண்டும், என்பது விதி.

## பூசையில்நைவேத்தியபயன்.

**111.** **யாவந்தஸ் தண்டுலாஸ் ஸந்தி சிவார்ப்பித நிவேத்யகே.**
**தாவத் வர்ஷ ஸஹஸ்ராணி சிவலோகே மஹீயதே. - (காமிகாகமம்)**

சிவனாருக்கு, நிவேதனம்செய்கிற, உணவில் எத்தனை அரிசிகள் உள்ளனவோ அத்தனை ஆண்டுகள் வெகுகாலம் அந்தபக்தன் சிவலோகத்தில் மகிழ்ந்திருப்பான் என்று சிவாகமம் கூறுகிறது. எனவே (நாம் உண்ணும்அன்னத்தைப் புனிதமாகத்தயாரித்து) அதிகஅளவில் இறைவனுக்கு அமுதுபடைத்தலும், பின்பு அதை உண்பதும் முறையாகும்.

## மானஸபூஜையின்பயன்.

**112.** **மனஸா கல்பிதைர் த்ரவ்யைர் மனக் க்லுப்தே து மந்திரே.**
**மனஸா பாவயந் நித்யம் பூஜயேத் பரமேச்வரம்.**
**தியாயந் கருடதாம் யத்வத் குரூர் நிர்விஷதா பலம்.**
**ப்ராப்நோதி தத்வத் அத்ராபி பலம் இஷ்டம் அவாப்நுயாத்.**

யாவரும் தினமும் தம்மனதில் கற்பனையால் கோயிலை அமைத்து, அதில்மனதால் கற்பித்தபொருள்களால், மனதால் பூசைசெயல்களைக் கருதியபடி பரமேச்வரரை பூஜைசெய்யவேண்டும். இதனால் எவ்வாறு, குருவானவர் கருடனைமந்திரத்தால் நினைப்பதால், விஷம் இல்லாதநிலையைப் பயனாக எவ்வாறு அடைகிறாரோ, அவ்வாறே நாம் மனதால் செய்யும் (கற்பனையால்) தூயஉள்ளத்துப்பூசையால் நாம் விரும்பியதை அடையலாம், என்கின்றன சைவாகமங்கள்.

## கிழமைகளின் பூசைமலர்.

**113. அப்ஜம் சைவ து புன்னாகம் ரக்தாப்ஜம் சைவ பாடலீ.**
**சம்பகம் ஜாதி புஷ்பம் ச நீலோத்பலம் யதா க்ரமம்.**
**ஸௌராதி சனி வாராந்தம் அர்ச்சயித்வா விசேஷத:. (காரணாகமம்)**

சிவபெருமானுக்கு வாரபூஜைக்கு கிழமைக்கு ஒருசிறப்புமலர் உள்ளது. அவை, பூஜைக்கு ஞாயிறுஅன்று **வெண்தாமரைப்பூ**, திங்களன்று **புன்னாகப்பூ**, செவ்வாயன்று **செந்தாமரைப்பூ**, புதனன்று பாதிரிப்பூ, வியாழனன்று சம்பகப்பூ, வெள்ளிக்கிழமைக்கு ஜாதிமல்லிகைப்பூ, சனிக்கிழமைக்கு நீலோத்பலப்பூ (கருங்குவளை கருநெய்தல்பூ) ஏற்றதாகஅறியவும். இவைஏழும் வாரபுஷ்பங்கள் எனப்படும்.

## கிழமைகளின் பூசைஇலை.

**114. தூர்வா: ச பில்வபத்ரம் ச தாதகீ துளசீ ததா.**
**தாந்தம் ச தாடீமீ பத்ரம் விஷ்ணுக்ராந்திம் ததைவ ச.**
**ஏதைஸ் ஸௌராதிநா ப்யர்ச்ய ரக்தசந்தன மேவச. (காரணாகமம்)**

ஏழுகிழமையிலும் சிவபூசைக்குரிய சிறப்பு இலைகள் முறையே, ஞாயிறன்று அருகம்புல் முனை, (ஐந் துஇதழ் நுணிப்புல்) திங்களன்று வில்வஇலை (மூன்று இதழ்களுள்ளது) செவ்வாயன்று தாதகீ = ஆத்திஇலை, புதனன்று துளசி, வியாழனன்று மருவு, வெள்ளியன்று மாதுளைஇலை, சனியன்று விஷ்ணுக்ராந்தி இலை இவற்றை சேகரித்துப் பூசிப்பது சிறப்புப்பயனைத் தருவதாகும் எனசிவாகமங்கள் கூறுகின்றன.



## சம்ஹிதாஹோமப்பொருட்கள்.

**115. காஷ்டா (ஆ)ஜ்ய ஸமித (அ)ன்னாதி லாஜ ஸக்து திலாநி ச.**
**யவ ஸித்தார்த்த முத்காநி மது நைகா தசாநி ச.**

ஹோமத்திற்குரிய பதினோருவகைப்பொருட்களையும் பதினோரு மந்திரத்தால் சேர்க்கவேண்டும். அவை முறையே உரியமரவகை யிலான 1.கட்டை(விறகு), 2.பசுநெய், 3.சமித்து, 4.அன்னம், 5.நெல்பொரி, 6.சத்துமாவு, 7.எள்ளு, 8.யவம், 9.வெண்கடுகு, 10.பாசிப்பயறுதான்யம், 11.தேன், இவைகள் பஞ்சபிரம்மஷடங்கமான 11 மந்திரத்தால் ஆகுதி செய்யத்தக்கவை.

## கிரஹணங்களில் புண்யகாலம்.

**116. சூர்யோபராக காலே து ஆதௌ புண்ய ப்ரசம்ஸனம்.**
**சந்திரோபராக ஸமயே அந்தே ஸர்வஹிதம் பவேத்.**

– (காரணாகமம்)

உபராகபுண்யகாலம் எனப்படுகிற கிரஹண காலத்தில் சிறப்புப் பயன்தருகிற புண்ணியகாலம் எனும் நேரமானது, சூரியகிரஹணத்தின்போது பிடித்தது முதல் முடியும் வரையில் புண்யகாலமாகும், சந்திரகிரஹணத்தின்போது, நடுவில் கிரஹணம் விடத்துவங்குவதிலிருந்து (பிற்பாதிகாலம்) முடிவில்புண்யகாலம் என்பதை அறிந்து அச்சமயத்தில் ஸ்நானாதிகளைச்செய்தல் வேண்டும் என்றுஅறிக.

## கிரஹண நேரச்செயல்கள்.

**117. தானம் ப்ரதக்ஷிணம் ஹோமம் தீர்த்தம் அத்யயனாதிகம்.**
**யஜனம் சைவ தத்காலே காரயேத் ஸர்வ ஸம்பதம்.**

சூரிய அல்லது சந்திர கிரஹணம் பிடித்துள்ள நேரத்தில் அனைவரும் அக்கதிரொளி நம்மீதுபடும் தோஷம் தீங்கு நீங்கிட தலைமுழுக்காடிக் குளித்தல் தானம் செய்தல், விருப்ப தெய்வ வேள்விசெய்தல், வேதம் கற்றல், பூசை செய்தல், கோயில் தீர்தவாரியில் குளித்தல் இவற்றை செய்வது நன்மைதருபவை.



## கிரஹணத்தில் செய்யத்தக்கவை.

**118. ஸ்நானம் தானம் ஜபம் ஹோமம் சம்போர் யஜன முத்தமம்.**
**ஔஷதம் உபதேசம் ச வித்யாப்யாஸம் ப்ரசஸ்யதே. (காரணாகமம்)**

கிரஹணபுண்யகால சமயத்தில் செய்யத்தக்க செயல்கள் தலைமுழுகி குளித்தல், பொருளை வேதியருக்கு தானம்தருதல், விருப்பமந்திரத்தை அதிகஅளவில் ஜபித்து உருவேற்றுதல், ஹோமம் செய்தல், சிவனை பூசித்தல், மூலிகைக்கலவை தயாரித்தல், மூலிகையை அறிதல், மந்திரத்தை முதலாவதாக உபதேசம்பெறுதல், புதியகல்வியை கற்பது, புனிதநீரில், தெய்வத்தீர்த்தவாரியில் முக்திமுழுக்காடுதல், பெற்றோர், தெய்வங்களை அதிகஅளவில் முறையே வலம்வருதல் முதலியவை சிறந்த செயல்களாக சிவாகமங்கள் தெரிவிக்கின்றன.

## திரையிட்டபோது கூடாதவை

**119. ப்ரச்சன்னபட காலே து ந கர்த்தவ்யம் லிங்க தர்சனம்.**
**ப்ரமாதாத் தர்சனம் க்ருத்வா அக்ஷய்ய நரகம் வ்ரஜேத்.**
**ப்ரச்சன்னபட காலேது ந குர்யாத் லிங்கதர்சனம்.**
**தத்காலே தர்சனம் மோஹாத் பார்யா புத்ரஸ்ய ஸங்கடம்.(சைவாகமம்)**

கோயிலில் தெய்வங்களை அதன்வாயிலில் திரையிட்டு மறைத்துள்ள போது, விலக்கியோ உட்புகுந்தோ, தெய்வத்தைக் காணுதல் (தரிசித்தல்) கூடாது. அறியாமையாலோ ஆசையாலோ அவ்வாறு செய்தால் மீளமுடியாததான அக்ஷய்யம் என்றபெயருள்ள அழிவில்லாதலாநரகத்தை அடைவான். காண்பவனின் மனைவி மக்களுக்கு சங்கடம் ஏற்படும், என்று ஆகமங்கள் கூறுவதால் தரி சிப்பதைத்தவிர்க்கவும்.

## இருவகைசிவலிங்கம்

**120. ஸ்தாவரம் ஜங்கமம் சைவ த்விவிதம் லிங்க முச்யதே**
**ஸ்தாவரம் ஸ்தாபிதம் லிங்கம் ஜங்மம் தீக்ஷிதம் விது: - (காரணாகமம்)**

ஸ்தாவரம், ஜங்கமம், என்று சிவலிங்கமானது இரண்டு வகைப்படும். இதில் கோயில்களில் நிலையாகவைக்கப்பட்டது **ஸ்தாவரம்** எனப்படுவது, உற்சவமூர்த்திகள் தீக்ஷைபெற்றபூஜகர் **ஜங்கமம்** எனும் அசையும் லிங்கத்திருமேனியாகும். ஆலயலிங்கத்திற்கு அர்ச்சகரும் நிகராவார் மாகேச்வரபேரங்கள் வியக்த ஜங்கமலிங்கமாம்.

## பரமபதிசிவஇலக்கணம்.

121. **ஆதிமத்யாந்த நிர்முக்த: ஸ்வபாவ விமலப் பிரபு:.**
**ஸர்வக்ஞப் பரிபூர்ணஸ்ச சிவோ ஞேயஸ் சிவாகமே.**
– (வாதுளசுத்தம் 9ல் – பௌஷ்கராகமம்)

முதல் நடு கடை என்ற மூன்று நிலைகளிலிருந்தும் விடுபட்டவராக, இயல்பாகவே மாசற்றவராய் விமலராயிருப்பவரும், தலைவரானவரும், எல்லாமறிந்தவரும் நிறைவானவருமாக பரமசிவனார், சிவாகமத்தில் அறியத்தக்கவர். இறைவனின் பண்புகளை எண்ணிவழிபடுதல் வேண்டும்.



## சிவபூசைசெய்துஉண்டுவாழ்தல்.

122. **வரம் ப்ராண பரித்யாக: சேதனம் சிரஸோ (அ)பி வா.**
**ந து அனப்யர்ச்ய பஞ்ஜீயாத் பகவந்தம் த்ரிலோசனம்.**
**இதி ஞாத்வா ப்ரயத்னேந பூஜநீயஸ் ஸதா சிவ:.** – (காமிகாகமம் 4.13)

ஒருவன் உண்ணாமல் உயிரைவிடுவதும், தலையைதுண்டிப்பதும் சிவபூசையைச் செய்யாமல் உண்பதைவிட மேலானது. ஆதலால் பகவானான முக்கண்ணரைப் பூசிக்காமல் ஒருபோதும் சாப்பிடக்கூடாது, என்பதை அறிந்து, மக்களால் எப்பொழுதும் பெரிதும் முயற்சிசெய்து சிவபெருமான் பூசிக்கப்படவேண்டியவர். நமக்கு இந்த உலகம், உடல், பொருள்களைத் தந்து ஜீவர்கள் உய்யஉதவிடும் பரமஆப்தருக்கு தினமும், நன்றிதெரிவித்து எந்தப் பயனையும் எதிர்பாராமலேயே வணங்குவது தலையாய கடமையாகும்.



## சிவன் எனும்சொல்லின்பொருள்.

123. **அதவா (அ)சேஷ கல்யாண குணைக தன ஈச்வர:.**
**சிவ இத் யுச்யதே ஸத்பி: சிவ தத்வார்த்த வேதிபி:.**
**அனாதி மல ஸம்ச்லேஷ ப்ராகபாவாத் ஸ்வபாவத:.**
**அத்யந்த பரிசுத்தாத்மா இத்யதோ (அ)யம் சிவோச்யதே.**
– (வாயுஸம்ஹிதை.1.61)

அனைத்து நற்குணங்களை உடையவரே ஈச்வரன்.இவரே சிவம் என்று உச்சரிக்கப்படுகிறது சைவ அறிஞர்களால் அனாதியாகவே மலமில்லாமல் இயல்பாகவே சுத்தமாக இருப்பதனாலேயே அந்த மிகவும் பரிசுத்தமான பரமாத்மாமே சிவம் என்று கூறப்படுகிறது.

## பசுவுக்குள்ளபதியின்தேவை.

**124. அசேதனம் ஜகத் விப்ரா: சேதன ப்ரேரகம் விநா.
ப்ரவ்ருத்தெள வா நிவ்ருத்தெள வா ந ஸ்வதந்த்ரம் ரதாதிவத்.
யஸ்து ப்ரவர்த்தக: சக்த: ஸ பதிப் பரிபட்யதே. (பௌஷ்கராகமம்)**

உலகமானது உயிரற்றஅசையாப்பொருள். எனவே இத ஒருவனின் தூண்டுதலின்றி செயல்பட முடியாது, இதனால் உலகம் அறிவுடையவனால் இயக்கப்படும் தேரைப்போல என்று அறிக. எவர் தூண்டி இவ் உலகை இயக்குகிறாறோ அவரே பதி என்று கூறப்படுகிறார் என்று சிவாகம் விளக்குகிறது.

## ஆத்மஞானவிளக்கம்.



**125. ஸர்வே தர்மாத்மனஸ் ஸந்தி யதேவ பரிகல்பயேத்.
தத் தத் பவத் யஸந்தேஹாத் ஸதா தத்பாவ பாவத:.
இத் யேவம் ஆத்ம விக்ஞானம் கதிதம் து ஸமாஸத:
– (ஸர்வஞானோத்தராகமம்)**

அனைவருமே புத்திகுணங்களாகிய தர்மம் முதலானவற்றை உடையவர்களாக உள்ளனர். மனிதனிடம் எந்த குண தர்மம்உள்ளதோ அவன் அதன்படியே ஆகிறான். எனவே ஐயமற்று எப்பொழுதும் தர்மத்தைக் கருதுவதே ஆன்மஞானமாக கூறப்பட்டது ஆகமங்களில் என்று அறிக.

## புருஷன் என்ற சொல்பொருள்.

**126. அவ்யக்தம் மன இத்யாஹு: சரீரம் புரம் உச்யதே.
அவ்யக்தாக்யே புரே சேதே புருஷஸ் தேந சோச்யதே – (காலோத்தராகமம்)**



வெளியில் தெரியாததான அவ்யக்தமாக உள்ளதே மனம் எனப்படுகிறது. உடல் என்பதே புரம் என்று கூறப்படுகிறது. இவ்வாறு அவ்யக்தம் என்கிற மனத்துடன் உடலான புரத்தில் உறைந்துள்ள காரணத்தால் ஆன்மா, ஜீவன் எனப்படுகிற உயிரானது புருஷன் என கூறப்படுகிறது.

## பரம்பொருளின்பண்புகள்.

**127. பரமம் சாஸ்வதம் ஸத்யம் ஞானானந்த சுகாத்மகம்.**
**வாச்ய வாசக ராஹித்யம் வாங் மனோதீத கோசரம்.**

– (அசிந்த்ய விச்வசாதாக்யம்)

இறை என்பது மேலானது, என்றுமுள்ளது, உண்மையானது, அறிவு, ஆனந்தம், சுகங்களின் வடிவானது, சொல்லும்பொருளுமின்றி உள்ளது, வாக்குக்கும் மனத்திற்கும் அப்பாற்பட்டது இறைவன்என்கிற பரம்பொருள் என்று அறிக.

## பரசிவத்தின் இலக்கணம்.

**128. சிவம் பராத்பரம் சூக்ஷ்மம் நித்யம் ஸர்வகதா(அ)வ்யயம்.**
**அசிந்திதம் அனௌபம்யம் அப்ரமேயம் அநாமயம்.**

– (வாதுளாகமம்)

சைவசமயத்தில் பரிசுத்தமானது, மேலானதற்கும்மேலானது, அருவமாய் அதிநுட்பமானது, ஆதியந்தமின்றி நித்யமானது, எங்கும் பரவிஉள்ளது, அழிவற்றது, எவ்வகையிலும் எண்ணிப்பார்க்க முடியாதது. எதனோடும் ஒப்பிடமுடியாதது, அளவிடமுடியாதது, மாறுபாடற்றது (பரிணமிக்காதது) எதுவோ அந்த அருவப்பரம்பொருளே சிவம் என்று ஆகமங்கள் உறுதியாய் கூறுகின்றன.

## மனிதன்முக்திபெறும்வழி.

**129. நிராச்ரயம் ஸதாசித்தம் ஸர்வாலம்பன வர்ஜிதம்.**
**மனோவஸ்தா விநிர்முக்தம் விக்ஞேயம் முக்திலக்ஷணம்.**
**விஷயே லோலுபம் சித்தம் மர்கடாதபி சஞ்சலம்.**
**ஸர்வ சூன்யபதே ஸ்தித்வா ததோ நிர்வாண மேஷ்யதி.**

– (தேவீகாலோத்தம்)

ஜீவனானது எப்பொழுதும் பற்றற்றதாக ஏதையுமே தொடர்புகொள்ளமல் இருப்பதும், எப்போதும் மனநிலைகளிலிருந்து விடுபட்டதாகவும் இருப்பதே, முக்திக்கு இலக்கணம். விருப்பப் பொருளில் எப்பவும் அலையும் மனசானது அசையும் குரங்கினும்கொடியது. அதை நிறுத்தி விலக்குவதே முக்தி என்று கூறப்படுகிறது.



## சிவஉபதேஸனையில் தேவையானது.

**130. அஹம் ஆத்மா சிவோஹ்யன்ய: பரமாத்மேத யஸ் ஸ்மிருத:.
ஏவம் யோ(உ)பாஸதே மோஹாத் ந சிவத்வம் அவாப்நுயாத்.**

- (ஸர்வஞானோத்தராகமம்)

நான் ஜீவன், சிவன் வேறானவர் என்று பரமாத்மாவை வேறு என்று எண்ணியபடி எவர் அபேதஇயல்பை அறியாதவராய் உபாசிக்கிறாரோ அவர் சிவத்தை அடைவதில்லை. என்று சிவாகமம் கூறுவதால், ஜீவன் சிவனின் பண்புள்ளவன் என்றும் கலந்துள்ளவனாகவும் அறிந்து உபாசித்தல் முறை.

## சிவாத்வைதபாவனையின்தேவை.

**131. சிவோன்யஸ்த்வஹமம் யர்த்த: ப்ருதக் பாவம் விவர்ஜயேத்.
யச் சிவஸ் ஹோஹமேவேதி அத்வயம் பாவயேத் ஸதா.
அத்வைத பாவநாயுக்தா: ஸர்வத்ராத்மநி ஸம்ஸ்திதா:**

- (ஸர்வஞானோத்தராகமம்)

சிவன்வேறு தான்வேறு என்று கருதுவதை விட்டுவிடவேண்டும். எவர் சிவனோ அவரே நான் (ஆத்மா) என்றே இரண்டற்றதாக எப்போதும் கருதவேண்டும். இவ்வாறு சிவனோடு ஒன்றிய அத்வைத பாவனையுள்ளவர்கள் பரமாத்மாவிடம் கூடி விளங்குவார்கள். உடல் மற்றும் உள்ளத்து மாசுகளை நீக்கிடின் ஆன்மாசிவத்தன்மைகளைக் கொண்டிருப்பது விளங்கும் இதனால் தத்ரூபபாவனை பொருந்துவதாகும்.

## ஆன்மாவின்ஆப்தன் ஆண்டவன்.

**132. ஆப்தோக்தி ரத்ர ஸித்தாந்த: சிவ ஏவா (ஆ)ப்திமான் யத:.
ந தாப்யாம் ஸத்ருசக் கஸ்சித் ச்ரேய: ஆப்திவிதாயக:.**

- (ரத்னத்ரயம்)

பார்த்ததையும், கேட்டதையும் அப்படியே உண்மையாக கூறுபவனே ஆப்தன் எனப்படுபவன். இறைவனே உயிர்களின் துன்பங்களையும் மாசுகளையும் அறிந்த உயிர்களின் உற்ற நண்பன் (நலம்விரும்பி). அவர்கூறியவையே ஆகமநூல்கள். எனவே ஆப்தன், ஆகமம் இவைக்கு நிகரானதும் மேலானதும் வேறு எதுவும் உலகில் இல்லை என்று அறிதல்வேண்டும்.

## கோயிலில் முப்பொருள்வடிவம்.

**133. லிங்கம் து பதிவத் ப்ரோக்தம் பசுஸ்யாத் வ்ருஷம் உச்யதே.
பலிபீடம் ததா பாசம் த்ரிபதார்த்த ஸ்வரூபகம்.**

– (சிவாகமங்கள்)

கோயிலில் லிங்கமே இறைவன்சிவன் பதிப்பொருள். எதிரில் உள்ள எருதுஉருவவிருஷபதேவரே உயிர்களை உணர்த்துகிற பசுப்பொருள். பலிபீடமே பாசத்தை உணர்த்தும். இவ்வாறு ஆலயம் என்பது ஆகமங்கள் விளக்குகின்ற இறை உயிர், தளை, எனும் முப்பொருள்களையும் உணர்துகிறது. இத்தகைய முறையில் மூன்றையும் அறிவதே முக்திஞானம். இவற்றை அறியாமல் செய்யப்படும் பூஜை வழிபாடு பயனற்றதாகும்.

## தேவையான ஆத்மகுணங்கள்

**134. தயா(அ)ஸ்ப்ருஹா(அ)நசூயா ச சாந்திஸ் சௌசம்து மங்களம்.
அகார்ப்பண்ய மநாயாஸ: ச இத்தம் ஆத்மகுணா: [illegible]மே.**

– (சைவாகமம்)

கருணை, ஆசையற்றுஇருத்தல், பொறாமையின்றிஇருத்தல் அமைதி, நல்லொழுக்கம் (நன்நடத்தை), நல்லனவாயிருத்தல், மனநிறைவுபெற்றிருத்தல் (பூர்ணத்வம்) வருத்தமின்றியிருத்தல் ஆகிய இவை எட்டும் ஒவ்வொருஜீவனிலும் இருக்க வேண்டிய ஆத்மகுணப் பண்புகள் என்றறியுமாறு ஆகமங்கள் கூறுகின்றன.

## பாசத்தை நீக்குவான்பரசிவன்.

**135. அதாநாதி மலாபேத: ஸர்வக்ஞ: ஸர்வக்ருத் சிவ:
பூர்வ வ்யத்யாஸிதஸ்ய அணோ: பாசஜாலம் அபோஹதி.**

– (காமிகாகமம்)

அனாதியாக இயல்பாகவே மலம்என்பது இல்லாதவனாகவும், எல்லாமறிந்தவனாகவும், எல்லாவற்றையும் செய்யக்கூடியவனாகவும், உள்ள சிவனார், அனாதியாகவே தன்னுடன் மலத்தையுடைய உயிர்களுக்கு, இயல்பாகவே உள்ள ஐந்துவகை பாசக்கூட்டத்தையும் போக்குகிறார். இது சைவநெறி தீக்ஷையில் அருள் தரும் செயல்.



## சாஸ்த்ரம்சொல்பொருள்.

136. சுத்தாத்மநா ஹிதம் சாஸ்த்ரம் த்ராயதே யத் பவார்ணவாத்.
தத் சாஸந பரித்ராணாத் சாஸ்த்ர மித் யபிதீயதே. - (சூக்ஷ்மாகமம்)

எப்பொழுதுமே பரிசுத்தமான பரமசிவனால் உயிர்களுக்கு நன்மையளிக்க வேண்டி ஆப்தரால் கூறப்பட்டதாலும் – உலகவாழ்க்கைத் துன்பத்திலிருந்து காப்பாற்றுகிறதாலும் – இதனைச் செய்யவேண்டும் என்று கட்டளையிடுவதாலும், தீமையிலிருந்து மக்களைக்காப்பதாலும், இந்த ஆகமநூல்கள் **சிவனால்சாஸ்த்ரம்** என்று பெயர்பெற்றதாக அறியப்படவேண்டும்.

## உலகின் கர்த்தா ஹரனே.

137. ஸ்த்ரீ பும் நபும்ஸகா க்யாதம் ஜகத் ஸர்வம் க்ரமேணஜம்.
ஸ்திதி ஸம்ஹாரதோ விப்ரா: ஸர்வதா கர்த்ரு பூர்வகம்.
அநாதிமுக்தஸ் சித்ரூப: கிருத்யகர்த்தா ஹரப் பிரபு:.
- (ஸ்வாயம்புவாகமம்)

உலகமானது ஆண் பெண் அலி என்றுமுறையே முப்பாலிலும் உள்ளதாய் கூறப்பட்டது. அதன் காத்தலும் அழித்தலும் ஒரு தலைவனாலேயே செய்யப்படுவது. அந்த தலைவன் அனாதியாகவே முக்தனாயும், அறிவுஉருவத்தினனாயும், எல்லாம் செய்யவல்ல பிரபுவாயும் இருக்கும் ஹரனே ஆவார் என்கிறது ஆகமம்.

## ஒன்பதுதத்வம் கடந்துள்ளதே கடவுள்.

138. சிவஸ் சக்திர் நாத பிந்து ஸாதாக்யம் ஈச ருத்ரகௌ.
விஷ்ணுப் பிதாமஹஸ் சைவ ஏகைகோத்பவ முச்யதே.
நவ பேத ஸ்திதோ தேவோ நவ தத்வாத் பரஸ் சிவ:.
- (வாதுளோத்தராகமம்)

சைவசமயநெறியில் தெய்வங்கள் ஒன்பதுதத்துவங்களாக, ஒன்பதுநிலையில் மேலிருந்து கீழாக பேசப்படுகின்றன. அவை முறையே **சிவம், சக்தி, நாதம், பிந்து, ஸாதாக்யம், ஈச்வரம், ருத்ரகம், விஷ்ணு, பிரம்மா,** என்பவை. இவை மேலிருந்து முறையே ஒன்றிலிருந்து ஒன்றாகத்தோன்றிவெளிப்பட்டும், தோன்றியதில் ஒடுங்கியும் ஒன்பதுவகையில் விளங்கும். இந்த ஒன்பது தத்துவங்களுக்கும் மேலாக ஒன்பதையும் கடந்துள்ள கடவுள் எனும் **பரம்பொருளே சிவம்** எனப்படுவதாகும் என்றறிக.

 

## தாஸமார்க்கதொண்டுப்பயன்.

**139. யக் குர்யாத் து மஹேசாய புஷ்பா (ஆ)ராம க்ரியாவிதிம்.**
**ஸ்தோத்ர கானாதிகம் ஸர்வம் யக் குர்யாத் தாஸமார்க்ககம்.**
**சிவலோகம் து ஸம்ப்ராப்ய மஹேசஸ்ய குணோ பவேத்.**

உலகில் எவரொருவர் மகேச்வரருக்கு பூசைக்கு பூந்தோட்டத்தை உருவாக்கிதருவது, துதிபாடுவது, தொண்டுசெய்வது முதலிய சிவனடியார்களுக்குரிய தாஸமார்க்க வழிமுறைகளை பின்பற்றுகிறாரோ, அவர் மகேசரின் குணப் பண்புகளைப்பெற்று, சிவலோகத்தை அடைந்து இன்பமடைவார்.

## சைவசமயநித்யாசாரம்.

**140. தர்ம ஸங்கீர்த்தனம் சைக புராண ச்ரவணம் தத:.**
**நித்யாசாரா: ஸமாப்யேதா: யாவத்ஜீவம் தமாச்ரயேத். – (அம்சுமதாகமம்)**

சைவசமய அறநெறியில் நல்ல தர்மங்களை, வழிபாடுமுதலிய ஸத்காரியங்களைச் செய்தும், இறைவனின் புகழைப் பாடியும், தெய்வ வரலாறுகளை, தெய்வஉபதேச மொழிகளை, பாகவத உபநியாஸங்களைக் காதுகுளிரக் கேட்டும், தினமும் செய்ய வேண்டியவைகளைச் செய்தும், உயிருள்ளவரை யாவரும் அறத்தைக் கடைபிடிக்க வேண்டும் என்பது ஆகமகட்டளை.

## ஆசாரவாழ்வின்அரும்பயன்.

**141. சௌசாசார விஹீநஸ்ய ஸமஸ்தா நிஷ்பலா: க்ரியா:.**
**ஆசாராத் லபதே ஞானம் ஆசாராத் லபதே தனம்.**
**ஆசாராத் ஸர்வ மாப்நோதி ஆசாராந் முக்தி மாப்நுயாத்**
**– (காரணாகமம்)**

நல்லொழுக்கம் எனும் நன் நடத்தை இல்லாதவனுடைய அனைத்துவிதமான செயல்களும் பயனற்றவையாகும். நன்நடத்தை என்கிற ஸதாசாரத்தினால் ஞானத்தையும், செல்வத்தையும், முக்தியையும், அனைத்தையும் அடைவான் என்று சைவாகமம் கூறுகிறது.

## ஒற்றையாடையுடன் செய்யக்கூடாதவை.

**142. நைகவஸ்திரக் கிரியாம் குர்யாத் நக்னக் கௌபீநகேவல:.**
**ஸ்நாநே தேவார்ச்சநே யாகே போஜநே ச விபஸ்சிதா.**
**– (ஞானரத்னாவளீ)**

ஒற்றைஆடைஉடுத்தியவராயும், ஆடையற்றவராயும், கோவணம் மட்டுமே அணிந்தவராயும், குளித்தல், தெய்வபூசைசெய்தல், வேள்வி செய்தல், உணவருந்துதல் இச்செயல்களை ஒருபோதும் எவருமே செய்யக்கூடாது என்பது சைவாகமங்களின் ஆசார நியதியாம்.

## ஈரத்துணியுடன் செயல்படாமை.

**143.** **ஆர்த்ர வஸ்த்ரேண ஸம்யுக்த: கர்ம குர்யாத் அதந்த்ரிதம்.**
**வ்ருதா பவதி தத் கர்ம புனஸ் ஸ்நாநேந சுத்யதி.**

ஈரமான ஆடையுடன் கூடியவராக செய்யப்படும் எச்செயலும் சாஸ்திரவிரோதமாய் செய்யப்பட்டதாகும். அவை வீணானதாகும். ஆதலால் மீண்டும் நீராடுவதால் சுத்தமடையும். எனவே ஈரத் துணியுடன் சுபசெயல்களைச் செய்யக்கூடாது என்று அறிக.

## காணாக்கடவுளைக்காணுமிடம்.

**144.** **லிங்கே தேவோ மஹாதேவ: ஸாக்ஷாதேவ வ்யவஸ்தித:.**
**அநுக்ரஹாய லோகாநாம் தஸ்மாத் லிங்கம் ப்ரபூஜயேத்.**

– (சிவதருமநூல்)

காணமுடியாதகடவுள் சிவலிங்கத்தில் காணத்தக்கவகையில் மஹாதேவர் விளங்குகிறார். அவர் உலகத்துவருக்கு அருள்தரவே அதில் இருப்பதால் யாவரும் சிவலிங்கத்தை பூசிக்கவேண்டும் என்கிறது சிவதருமம் என்றநூல். லிங்கமேசிவம்.

## ஆலயதரிசனத்தின்போதுகூடாதவை.

**145.** **தைலாப்யங்கம் க்ருதாப்யங்கம் சிரஸோ வேஷ்டனம் ததா.**
**கஞ்சுகா வரணம் சாபி வர்ஜயேத் சிவ**
**மந்திரே.** – (ஸ்காந்தம்)



கோயிலுக்கு தரிசிக்க செல்வோர் தமது உடலில் எண்ணைக்காப்பு செய்தல், நெய்யை பூச்சைசெய்தல் தனது தலையில் துணியைசுற்றி முட்டாசுகட்டுதல், தம் உடலை சட்டையால் சால்வையால் மறைத்தல், இவற்றை நீக்கவேண்டும். சிவாலயத்தை மதித்து அடியவர்கள் இவைகளைத் தவிர்த்திடவேண்டும்.

## சிவராத்திரிகாலநிர்ணயம்.

146. மாகமாஸி அஸிதே பக்ஷே வித்யதே யா சதுர்தசீ.
தஸ்யாம் ராத்ரிஸ் ஸமாக்யாதா சிவராத்ரீ சிவப்ரியா.
தஸ்யாம் ஸர்வேஷு லோகேஷு ததா ஸம்க்ரமதே ஹர:.
யாநி காநி அத்ர லிங்காநி சராணி ஸ்தாவராணி ச.
தேஷு ஸங்க்ரமதே தேவி தஸ்யாம் ராத்ரௌ ஸதா ஹர:.
சிவராத்ரிஸ் தத: ப்ரோக்த: தேந ஸா ஹரவல்லபா.
கும்பராசிகதே பாநௌ யா ச க்ருஷ்ணா சதுர்தசீ
சைவாத்ர மாகஸம் ஸ்யாத்தத்ரைவார்ச்சா மஹாநிசி. - (காரணாகமம்)

மாசிமாதம், கிருஷ்ணபக்ஷத்தில் வருகிற, சதுர்தசி திதியானது பரமேச்வரருக்கு பிரியமான சிவராத்தி எனக் கூறப்படும். இதில் எல்லாலிங்கங்களிலும் பரமேச்வரர் ஆவிர்ப்பவித்து இருக்கின்றார். அசையுமாறும் அசையாதவாறும் உள்ள சரஸ்ஸ்திர லிங்கங்களில் பரமேச்வரர் இந்தராத்திரியில் சேர்ந்திருப்பதால், இதை சிவராத்திரி எனக்கூறப்படும். இந்த இரவில் எப்பொழுதும் சிவன் பூசிக்க வேண்டியவர். அந்த இரவு சிவனுக்கு பிரியமானகாலமாகும். சூரியன் கும்பராசியில் உள்ள ஸௌரமாஸமே இந்த மாஸமாகும்.

## சிவராத்ரீ வ்ரதபலன்.

147. சிவராத்ரி வ்ரதம் நாம ஸர்வபாபஹரம் ந்ருணாம்.
ஆசண்டாள மநுஷ்யாணாம் புக்திமுக்தி ப்ரதாயகம். - (ஈசானஸம்ஹிதை)

சிவராத்ரிவ்ரதம் என்பது மனிதர் களுடைய எல்லா பாவங்களையும் போக்கவல்லது. இதுஎல்லா மனிதர் களுக்கும் ஜாதிபாகுபாடின்றி சுகபோகத்தையும் பரமுக்தியையும் அளிக்கக்கூடியது. சிவராத்ரி விரதம் என்று அறிந்து யாவரும் வீட்டில் சிவனை னபூசித்தும் ஆலயத்தில் சென்றுதரிசித்தும் பயன்பெறவேண்டும். மிகமிக உயரியவ்ரதம்.

## சிவராத்ரிநடுநிசிப் பெருமை.

148. யுவயோர் வைரி நாசார்த்தம் அஸ்த்ராக்னி சமநாய ச.
மாக க்ருஷ்ண சதுர்தச்யாம் ஆதிதேவோ மஹாநிசி.
சிவலிங்க ஸமுத்பூத: கோடிசூர்ய ஸமுத்பவ:.
தத்காலே வ்யாபிநீ க்ராஹ்யா சிவராத்ரி வ்ரதே நிசி.

பிரம்மா விஷ்ணு இருவரின் பகைமையை நீக்கவும், அவர்களின் கோபத்தாலான் அஸ்திர நெருப்பினை ஒடுக்குவதற்கும்,

ஆதிதேவனான சிவனார் மஹாநிசி என்னும் நடுஇரவில் மாசிமாஸக்ருஷ்ண சதுர்தசிதிதியில் சிவலிங்கத்தில் கண்முன் தோன்றி கோடிசூரியர்களின் ஒளியுடன் வெளிப்பட்டார். ஆதலால் அந்த நடுஇரவு லிங்கோத்பவ காலத்தில் சதுர்தசிதிதி கூடியுள்ள இரவிலே சிவராத்திரி விரதமிருக்கவும், பூசைசெய்யவும், சிவனைவழிபடவும் ஏற்கத்தக்கது என்று சைவாகமங்களின் முடிவாகும்.

## சிவதிதிசதுர்தசிமஹிமை.

**149.** **உதயே ஸா க்வசித் க்ராஹ்யா க்வசித் அஸ்தமயே (அ)ன்வித.**
**வ்ரதிபிஸ் திதயோ யத்ர வர்ஜயித்வா வ்ரதம் து இதம்.**
**அர்தராத்ராத் அதச் சோர்த்வம் யுக்தா யத்ர சதுர்தசீ.**
**தஸ்யாமேவ வ்ரதம் கார்யம் மத்ப்ரஸாதார்த்திபிஸ் ஸஹ.**

**- (த்ரயோதசீ உமாகாரா சிவாகாரா சதுர்தசீ)**

உதயம் முதல் உதயம் வரையில் சதுர்தசியாயிருப்பினும், சூரியஅஸ்தமனம்முதல் சதுர்தசிவரினும், சிவதிதியானது மஹாநிசியில் பரவி இருந்தாலும், விரதஅனுஷ்டானத்தை சிவனருளை விரும்புபவர்கள் பின்பற்றவேண்டும் என்று சிவனார் கூறியுள்ளார். இதில்திரயோதசீ திதி உமாதேவிவடிவம் சதுர்தசீ சிவனார்வடிவாம் என்றறிக.

## பிறப்பறுக்கும் பரமன்தரிசனம்.

**150.** **வ்ருஷஸ்தம் வா ரதஸ்தம் வா சந்தனாலிப்த தாண்டவம்.**
**ஸக்ருத் தர்சன மாத்ரேண புனர்ஜன்ம ந வித்யதே. - (சைவாகமம்)**



சைவாலயத்தப் பெருவிழாவில் 5ம்நாளில் சிவனார் எருதுவாஹனத்தில் வலம்வந்து காட்சி தருதலும், 7 அல்லது 9ம் நாளில் தேரில் பவனி வந்து காட்சிதருதலும் தேருக்குப் பின்பு ஸ்ரீநடராஜர் ஊர்வலமாகிய சவோத்ஸவமும் நடைபெறும். இவற்றில் பக்தர்கள் இம்மூன்று நாட்களிலும் கண்டு வணங்கி ஒருமுறை தரிசிப்பதாலேயே மக்கள் மறுபிறவியெய்தாதவர்களாக ஆவார்கள் என்று சிவாகமங்கள் அரியபயனைக் கூறுகின்றன.

## தேரில் விழாகாலசேவைபயன்.

151. இஹ போகான் அவாப்நோதி தத் ப்ரஸாதாத் சிவஸ்ய து.
ஏகவிம்சதி குலோபேதம் சிவலோகே வஸேத் சிவம்.
முச்யதே ஸர்வ பாபேப்யோ ரதஸேவாபரோ பவேத். (சைவாகமம்)

ஆலயப்பெருவிழாவில் எவனொருவன் தேரில் உள்ள சிவனைக் கண்டு வணங்குகிறானோ, அவன் இவ்வுலகில் அனைத்து சுகபோகங்களையும் அனுபவித்து முடித்து, முடிவில் தனது 21தலைமுறையினரான குலத்தினருடன் சேர்ந்து சிவலோகத்தில் வசிப்பான், எல்லா பாவங்களிலிருந்தும் விடுபடுவான். தேர்பவனியை தரிசிப்பது விருப்பமான சிறப்புப் பயனைத்தரும் என்று சைவாகமங்கள் தெரிவிக்கின்றன.

## ஸ்தாவரஜங்கமலிங்கப்ரபாவம்.

152. ஸ்தாவரம் லிங்கம் இத்யுக்தம் ஜங்கமோ தேசிகஸ் ஸ்ம்ருத:.
ஸ்தாவராத் ஜங்கமம் சிரேஷ்டம் ஸ்தாவரம்து அதுநோச்யதே.
ஜங்கமஸ்ய ப்ரஸாதாத் ஹி ஸ்தாவரம் பலதம் பவேத்.
அர்ச்சகஸ்ய மனஸ்துஷ்டி தேவஸாந்நித்ய காரணம் (அஜிதாகமம்)

தேவாலயத்திலிருப்பது தாவரலிங்கம், ஆசார்யர் ஜங்கமலிங்கம். இந்த இருவகை லிங்ககளுள் ஆலயலிங்கத்தினும் அதைப்பூசிக்கும் அர்ச்சகர் அசைகிற ஜங்கமலிங்கமாக உள்ள காரணத்தால் சிறந்தவராகிறார். ஆசார்யரை மகிழ்விப்பதாலேயே கோயில்லிங்கம் பயன்தருவதாகும். அர்சகருடைய மனமகிழ்ச்சியே தேவனின் அருள்நிலைக்குகாரணமாகும். எனவே ஒரு ஆலயத்தின்று அருள்பெற ஆசார்யர் அர்ச்சகர்களை மகிழ்வித்தல் அவசியம்.

## ஆலயத்தில் மூர்த்தீ புனிததேவை.

153. சிவாலயோ அல்ப பலத: பஞ்சஊந சிவமூர்த்திக:.
ஸோமாஸ்கந்த: சிரேஷ்டதர: பஞ்சவிம்சதி மூர்த்திஷு.
மூலலிங்கஸ்ய தஸ்யா(அ)பி யோ (அ)ந்தர் ஆயாதி மோஹத:.
ஜன்ம அயுதார்ஜிதம் புண்யம் தஸ்ய நச்யதி தத்க்ஷணாத்.
– (காமிகாகமம்)

(பஞ்சமூர்த்திகள் எனப்படுபவை. 1. மூலலிங்கம் 2. சோமாஸ்கந்தர் 3. சந்திரசேகரர் 4. பிரதோஷநாயகர் 5. அஸ்த்ரதேவர் ஆகியவை). எந்தசிவாலயத்தில் கூறப்பட்ட இந்த ஐந்து மூர்த்திகளும், வழிபடப்படும் (சிலைகள் ஐந்தும்) 25மாகேச்வர உருவங்களில்

மிகமுக்கியமான **ஸோமாஸ்கந்தச்வரமூர்த்தி** இல்லையோ அவ்வாலயம் குறைவான பயனைத்தரும். மூலலிங்கம் உள்ள கருவறையினுள்ளே எவன் ஆசைமோகத்தால் அகந்தையால் விதிமுறையின்றி நுழைந்து, அதன் புனிதத்தைக்கெடுத்தானோ, உள்ளே சென்று வருகிறானோ அவனுக்கு பத்தாயிரம்பிறவியிலே அவன் சேர்ந்துள்ள புண்ணியங்கள் அனைத்தும் அக்கணமே அழிந்துவிடும்என்று சைவாகமம் கூறுகிறது.

## சிவஸேவைக்குரியநியமங்கள்.

**154. ஸூதகீ மிருதகீ க்ருத்த: ஸ்திரியம் கத்வா (அ)பி நாப்லுத:.**
**ஸ்த்ரியா பாலைஸ் ஸமாரப்த: ஸ்துவன் தேவாந்தரம் ததா.**
**ந ஸேவேத சிவம் மர்த்ய: ஸேவித்வா நரகம் வ்ரஜேத்**

உலகில் எவனொருவன், பிறப்பாலும்இறப்பாலும் ஏற்பட்ட மாசுடையவனாகவும், (குடக்குடன், தீட்டுடன்) தெய்வத்திடம் கோபம் கொண்டவனாகவும், பெண்ணைப் புணர்ந்து, உடல் உறவாடியபின்பு குளிக்காமலும், பெண்ணுடன்கூடி உரையாடியவாறும், சிறுவர்களோடு குலாவியவாறும், உல்லாசமாய் மகிழ்ந்திருப்பவனாகவும், சிவனில்லாத பிறதெய்வங்களை பரம்பொருளாகக்கருதி புகழ்ந்தபடி வாழ்பவனும், சிவனைக்கண்டு வணங்காதவனாய் இருந்து பிறரைவணங்கிடுபவனும் அழியாநரகத்தை அடைவான் என்று சைவாகமம் கூறுகிறது.

## விழாக்காலமூலலிங்கஸேவாவிதி.

**155. உத்ஸவார்த்தம் பஹிர்யாதே ஸோமாஸ்கந்தே விசேஷத:.**
**ஆலயஸ்தம் சம்புலிங்கம் ந ஸேவேத கதாசந.**
**ஆக்ருஷ்ய ஸர்வாஸ்ச கலா: ஸோமாஸ்கந்தஸ் து லிங்கத:**
**புராணோக் தோத்ஸவர்த்தாய பஹிர் யாதி நஸம்சய:.**
**மூலலிங்கம் ததா ஸேவந் தா: கலா: கர்ஷதே புந:.**
**தேந க்ருத்தஸ் ஸ வை சம்பு: நரகம் தஸ்ய யச்சதி.**
**ஸ்வாயம்புவம் சேத் தல்லிங்கம் விதேயம் தஸ்ய பூஜனம்.**

**- (காமிகே சிவயோகி ஸம்வாதே)**

சிவாலயத்தில் சிறப்பாக ஊர்வலத்திற்கு சோமாஸ்கந்தேச்வரர் வெளியில் சென்றுள்ள பொழுதில் பக்தர் ஒருபோதும் அக்கோயிலின் மூலாலயத்திலுள்ள மூலலிங்கத்தை (சிஷ்டலிங்கவகை சுயம்புலிங்கம் நீங்கலானதை) கண்டுதரிசிக்கக் கூடாது. ஏன் எனில் மூலசிவலிங்கத்திலிருந்த மந்திர கலாசக்திகள் இழுக்கப்பட்டு

சோமாஸ்கந்தருடன் வீதியில் அருள்வதற்காக வெளியே செல்வதில் ஐயமில்லை. இதனால் மூலஸ்தானத்தில் மானுஷலிங்கத்தை வணங்குவதால் அக்கலைகள் மீண்டும் உள்ளேஇழுக்கப்படுவதால் தெய்வகுற்றமாகி, கண்டுதரிசிப்பவனுக்கு நரகத்தை (தீமையை) அளிக்கும். தானேதோன்றிய சுயம்பு லிங்கமாயிருந்தால் மட்டும் அப்போது உத்ஸவத்திற்குப் பின்பு பூசிக்கலாம் தரிசிக்கலாம் என்று அறிக.

## விழாக்கால ப்ரதக்ஷிணநமஸ்காரவிதி.

156. தூராத் நமஸ்கிருதி: கார்யா பூஜகைஸ் து ஸமீபத:.
ஆதௌ நத்வா பஹிர் தேவம் லிங்கம் து ப்ரணமேத் தத:.
உபயதா(அ)பி ப்ரதேயா ஸ்யாத் வர்ஜயேத் து ப்ரதக்ஷிணம்.
பிரதக்ஷிணம் ச கார்யம் ஸ்யாத் சக்யம் சேத் உபயோ ரபி.
– (காமிகே சிவயோகிஸம்வாதே)

விழாவில் கோயிலில் பொதுமக்களால் தொலைவிலிருந்து வீழ்ந்து வணங்கிடவேண்டும். பூசைசெய்பவர்களால் அருகில் வணங்கப்படலாம். முதலில் வெளியில் (வீதியில்) உள்ள தேவனை வணங்கியபின்பு லிங்கத்தை வணங்கவேண்டும். இருவரையும் வலம் வரலாம், வலம் வராமலும் தவிர்க்கலாம். இயலுமேயானால் மூலவர் உத்ஸவர் இருவரையும் வலம் வருதலைச் செய்யவேண்டும்.

## லிங்கத்தருகே தூய்மைகாத்தல்

157. மிலேச்சாப் புளிந்தாப் பாஷாண்டா: மஹாபாதகிநோ த்விஜா:
ஸ்திரியஸ் ச பர காமிந்யோ மத்ய விக்ரயிணஸ் ததா.
ஆசௌ சினஸ் ஸங்கரஜா: த்வஜ ஸ்தம்பாத் பரம் யதி.
கச்சேயுஸ் து ப்ரதிஷ்டாப்ய: புனரேவ ஸதாசிவ:. (வாதுளாகமம்)

சிவம் என்னும் பரம்பொருள் எப்பொழுதுமே இயல்பாகவே மிகவும் சுத்தமாய்விளங்குவது. ஆதலால் பரமனுள்ள சிவலிங்கத்தை தூய்மையற்றோர்அருகில் நெருங்கநெருங்க அந்த இறைவன் விலகிமறைந்துடும், என்பதால் பல்வேறு புனிதமற்றசெயலாற்றும் பாட்டாளிகள், தூய்மையற்ற தொழில் வகுப்பினர் அந்தனராயினும், பெண்களில் சீலமற்றவரும், மதுவிற்பவர்களும், மாசுதுடக்கு உள்ளவர்களும், கலப்புத் திருமணத்தால் உதித்தவர்களும் கோயிலில் கொடிமரத்தைத்தாண்டி உள்ளே மேலேசெல்வார்களே யானால், அந்தலிங்கத்திலிருந்து சிவன்மறைவார். மறைந்துபோனசிவனை

மீண்டும் நிலைபெறச்செய்ய, மறுபடியும் யாகத்துடன் பிரதிஷ்டை என்ற செயலைச் செய்ய வேண்டும். ஆதலால் தூய்மைகாப்பது மிகஅவசியம்.

## ஆலயவிழாஊர்வலநேரச் செயல்முறை.

**158.** **யஸ்யாம் கஸ்யாம்சித் அபிவா மூர்த்தௌ சம்போர் மஹோத்ஸவே பஹிஸ் ஸ்திதாயாம் ஸர்வேஷாம் தேவாநாம் ஸகலா: கலா: நிவஸந்தி ததோ (அ)த்ரைவ தேவம் ஆலயகாமிநம். நத்வா பிரதக்ஷிணீ க்ருத்ய பிரம்மஹத்யாபலம் லபேத். நமநம் சார்ச்சநம் ஸாது லிங்கம் ஸ்வாயம்புவம் யதி. ஸ்வாயம்புவஸ்ய லிங்கஸ்ய தேவீ தத்ஸத்ருசீ மதா.-(காமிகாகமம்)**

சிவனாரின் பெருவிழாவில் ஏதேனும் ஒருமாகேச்வரத் திருமேனிச்சிலை வெளியில்உள்ளபோது, தெய்வசக்திகள் யாவும், அனைத்துதேவர்களுடனும் வீதியில்உள்ளதால் தெய்வங்களை அங்கேயே வீதிஉலாஇடையிலேயே வலம்வந்தும் வணங்கியும் மகாபாதகதோஷநீக்கம் கிடைக்கப்பெறலாம். சுயம்புலிங்கத்தில் மட்டும் வணங்குதலையும் பூசித்தலையும் செய்யலாம். தேவி ஆலயங்களிலும் இவ்வாறே விதிமுறை என்பதும் ஆகமப்படிஅறியவேண்டும். திருவிழாக்காலங்களில் தெய்வவழிபாட்டை செய்வதுமிக அரிய உயர்ந்தபயனைஅளிக்கும் என்று அறிந்து வழிபடவேண்டும்.

## பிராணவியோககால சிந்தனை.

**159.** **தீர்த்தே தாபஸ க்ருஹே வா (அ)லப்த ஸ்மிருதிரபி பரித்யஜந் தேஹம் ஞான ஸம கால முக்த: கைவல்யம் யாதி ஹதசோக:.**

எவனொருவன் புனிதநதீ தீர்த்தங்களிலோ, முனிவர் ஆச்ரமத்திலோ, தெய்வத்தை நினைத்தவனாக தனது உடலை (உயிரை) விடுகிறானோ, அவன் சிவஞானம் பெற்று காலனால்விடப்பட்டவனாக,துயரமற்றவனாக பரமுக்தி எனப்படுகிற கைவல்யத்தை அடைகிறான் என்கிறது சைவாகமம். ஆகையால் உயிர்விடும்தருணத்திலும் சிவசிந்தனையுடன் பிறிவது முக்திதருமாம். “சாகும் போது சங்கரனை நினை” என்பதாகக்கூறுவர்.



## கண்விழித்ததும்காணத்தக்கவை.

**160. பிராம்மே முகூர்த்தே புருஷ: த்யக்த நித்ரோ ஹரம் ஸ்மரேத்.**
**ஆலோக்ய மங்களம் திரவ்யம் கர்மா (அ)வச்யகம் ஆசரேத்.**
**ஏகஸ்மின் மங்களானி அஷ்டௌ பிராம்மணோ கௌர் ஹுதாசன:.**
**ஹிரண்யம் ஸர்பி ராதித்ய: ஆபோ ராஜா ததா (அ)ஷ்டம:.**
**- (நித்யகர்ம ஸமுச்சயம்)**

அதிகாலையில் மனிதன் தூக்கத்தைவிட்டு எழுந்ததும், சிவனை நினைக்கவேண்டும். கண்விழித்ததும் எட்டுவிதமான மங்களஉருவங்களைக் கண்டு முக்கியப்பணியாற்ற முயல்வதே நெறிமுறை. உரிய எட்டுமங்களப் பொருள்களில் ஏதேனும் ஒன்றைக் காண்பது சுபசகுணமாகும். 1.பிராமணர், 2.பசு, 3.நெருப்பு, 4.தங்கம், 5.நெய், 6.சூரியன், 7.தண்ணீர், 8.அரசன் இவைஎட்டும் காலையில் கண்விழித்ததும் காணத்தக்க சுபவடிவங்களாகும்.

## கணேசருக்கான குட்டனப்பயன்.

**161. ஹஸ்தாப்யாம் ஸவ்யவாமாப்யாம் முஷ்டிமுத்ராம் ப்ரகல்பயேத்.**
**மத்யமாங் குளிமத்யைஸ் ச குட்டயேத் மஸ்தகம் த்ருடம்.**
**மஸ்தகஸ்த அம்ருதேநைவ ஸர்வான் தேஹான் ப்ரவேசயேத்.**
**இத்தம் சுதா (அ)பிஷேகேண கணேசஸ்ய ப்ரியம் பவேத்.**

வலது இடதான இருகைகளினால் விரல்களை மூடிக்கொள்வதான முஷ்டி முத்திரையை நன்றாகச் செய்து கைகளில் நடுமூன்று விரல்களின் நடுப்பாகஙங்களினால் நெற்றியின்மேலே தலையில் இருபக்கத்தையும் நன்றாக குட்டிக்கொள்ள வேண்டும். இதனால் கபாலத்திலுள்ள அமுதத்தினால் உடல்முழுவதையும் நனைக்கவேண்டும். இதனாலே விநாயகருக்கு நம்மீது அன்பானது உண்டாகும் இஷ்டஸித்தி உண்டாகும்.

## தெய்வத்திசைக்கான பூஜகர்திசை.

**162. ப்ராக் பச்சிம முகேசம் து உத்தராபிமுகார்ச்சயேத்.**
**தக்ஷிணோதங்முகம் தேவம் பூர்வாபிமுகதோர்ச்சயேத்.**

கிழக்குமேற்கு முகமாகவுள்ள தெய்வங்களை பூசிப்பவர்வடக்கு முகமாக நின்றுகொண்டும் தெற்குவடக்குமுகமாகவுள்ள தெய்வங்களை பூசிப்பவர் கிழக்கு முகமாக நின்று கொண்டும் பூசிக்க வேண்டும் என்பது ஆகமவிதிமுறை.

## பூசைக்கான எண்வகைப் பூக்கள்.

**163. பங்கஜார்க்க பலாசஞ்ச நந்தியாவர்தஞ்ச மல்லிகா.**
**கரவீரம் பகம் சைவ நீலோத்பலம் அதா (அ)ஷ்டமம்.**

தாமரைப்பூ, வெள்ளெருக்கம்பூ, முருக்கன்பூ, நந்தியாவட்டம்பூ, மல்லிகைப்பூ, கஸ்தூரிபட்டைபூ கொக்குமந்தாரைபூ கருநைதல் பூ ஆகிய இந்த எட்டுவகை மலர்களும் சிவபூசைக்கு மிகவும் ஏற்றஅஷ்டபுஷ்பங்கள்.

## ஆசாரியர் அர்ச்சகர்களின் செயல்கள்.

**164. ஆசார்யச் சார்ச்சகஸ் சைவ த்விதா யே ச ப்ரதிஷ்டிதா:**
**ஆசார்யே ணைவ கர்த்தவ்யா பூஜா நைமித்திக க்ரியா**
**அர்ச்சகேந அர்ச்சனம் கார்யம் நித்யபூஜா விசேஷத: - (அம்சுமத்தந்த்ரம்)**

ஆதிசைவர்களில் ஆசார்யர் என்றும் அர்ச்சகர் என்றும் இருவகையில் சமயகுருமார்கள் உள்ளனர். (குருக்கள்) இவர்களில் நைமித்திகபூஜை எனும் சிறப்புகாலவிசேஷபூஜையானது ஆசார்யரால் செய்யத்தக்கது. விசேஷமாக நித்ய பூஜை என்பது அர்ச்சனமானது அர்ச்சகரால் செய்யத்தக்கது என்று பகுத்துஅறிந்து செய்யவும்.

## ஆசாரத்தில் முடிநீக்கும் முறை.

**165. கர்கி கன்யா தனுக் கும்ப மாசி க்ஷௌரம் விவர்ஜயேத்.**
**ரோமகண்டம் க்ருஹஸ்தஸ்ய பித்ருன் ப்ராசயதே யம:**
**ஸர்வ மாஸேஷு கர்த்தவ்யம் உத்ஸவாதௌ ந தோஷபாக்.**
**மூர்த்தாதி பாத பர்யந்தம் வபனம் காரயேத் சுதீ:.**
**ப்ரதிஷ்டோத்ஸவ கார்யாணி வப்தார ஸ்பர்சநாத் பரம்.**

ஆசார்யவபனவிதியானது, ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி ஆகிய கடகம், கன்னி, தனுசு, கும்பம் இவற்றில் சூரியன் உள்ள நான்கு மாதங்களில் ஆசார்யர் இல்லறத்தோர் ரோமத்தை (முடியை) வழித்தலை க்ஷவரத்தை செய்யக்கூடாது, விலக்கவும். ஏனெனில் செய்தால் அந்த முடிதுண்டுகளையே யமன் அவர்களின் மூதாதையர்களை உண்ணும்படிச்செய்கிறார். கோயில்திருவிழாவிற்கு காப்புகட்டப்போவதானால் எல்லாமாதத்திலும் செய்து கொள்வது தோஷமாகாது. தலைமுதல் பாதம்வரையிலும் உள்ள ரோமங்களையும் வழித்திடவேண்டும். இவ்வாறு தெய்வப்பிரதிஷ்டை உத்ஸவசெயல்கள் முடிக்ஷவரம் செய்து கொண்ட பின்னரே முடிதிருத்துவோர் தொட்டபிறகே செய்யப்படவேண்டும். தானேசெய்து கொள்ளக்கூடாது, செய்துகொள்ளாமலும் பதவிஏற்ககூடாது.

## இஷ்டலிங்க பூசைப்பயன்.

**166. யாவத் ஜீவம் ஸ்வ ஹஸ்தேந பூஜிதம் ஸ்வேஷ்ட லிங்ககம்.**
**ஆத்மார்த்த மிதி விக்ஞேயம் ஸாக்ஷாத் கைவல்ய தாயகம்.**

உயிருள்ளவரை தனதுகையினாலேயே தனது விருப்பமான லிங்கத்தில் பூசிப்பது ஆத்மார்த்தபூசை என்னும் முக்தியைத்தரவல்லதாயும் அறியத்தக்கது.

## ஸந்தியாவந்தனகாலம்.

**167. நக்தம் திவஸயோஸ் ஸந்தி: ஸந்தியேதி பாிகீர்த்யதே.**
**யஸ் ஸந்த்யாயாம் உபாஸ்தே அதி பக்த்யாச பரமேச்வரம்.**
**ஸச காலவசா தீத: ஸாயுஜ்யம் ப்ராப்நுதே த்ருவம்.**
**ஸந்தியாயா வந்தனம் யத்ச ஸந்த்யாவந்தன முச்யதே.**

இரவுக்கும் பகலுக்கும் இடைப்பட்ட தொடர்புடைய காலமே ஸந்தி எனப்படுகிறது. எந்தகாலத்தில் பரம்பொருளை உபாசிக்கிறார்களோ அவர் காலத்திற்கு அப்பாற்பட்டவராயிருந்து வணங்குவோர்க்கு ஸாயுஜ்யமுக்தியைத் தருகிறார். அக்காலத்தில் வணங்குவதே ஸந்தியாவந்தனம் என்று கூறப்படுகிறது. அனைத்து கிரியைகளுக்கும் மூலமாகவும், மதத்தினத் தத்துவங்களை உள்ளடக்கியதாகவும் இது விளங்குகிறது. இதனாலேயே பிறகிரியைகள் பயனளிப்பனவாகும் என்பது உறுதி.

## ஸந்திதேவியின்ரூபதத்வம்.

**168. யா சக்திப் பரமேசஸ்ய ஸா ஸந்தி யேதி நிகத்யதே.**
**தத்தீப்தி மத்யகோ பூத்வா ப்ராதக்கர்மணி ஸாதயேத்.(காமிகாகமம்)**

பரமேச்வரருடையசக்தியே ஸந்தியா என்று கூறப்படுகிறாள். அந்த ஸந்தியாமண்டலப் பேரொளியில் இருந்தவாறு யாவரும் கர்மாக்களை செய்து பயனைப்பெற்றிட வேண்டும்.

## முக்கால ஸந்தியா தேவிகள்.

**169. பிரம்மாணீ வைஷ்ணவீ ரௌத்ரீ பேதாத் பிந்நா வி பாதிஸா.**
**ஸாக்ஷிணீம்கர்மணா சம்போ: சக்திஸ் ஸந்தியேதி கம்யதே**
**– (சோமசம்புபத்ததி**

காலரூப சிவனாரின் சக்தியே, பிரம்மாணீ, வைஷ்ணவீ, ரௌத்ரீ, என்று மூன்றுவகையாக விளங்குகிறாள். ஸந்தியாதேவியே உலகத்தோரின் செயல்களுக்கு ஸாக்ஷியாகவும் பயனளிப்பவளாகவும் இருக்கிறாள்.

## ஆசமனத்தின்பயன்

**170. யதா தத் த்ரிதயம் பித்வா ருக் யஜுஸ் ஸாம த்ருப்தயே.**
**அதர்வஸ் யேதிஹாஸார்த்தம் தந்முகந்து த்விதாஸ் ஸ்ப்ருசேத்.**

**- (சுப்ரபேதம்)**

சைவாகமங்கள் பலவும் ஆசமனத்திற்கு மூன்று முறை தண்ணீர் பருகுவதும் மூன்று வேதங்களை மகிழ்விக்கவும், இருமுறை உதடுகளைத்துடைப்பது, அதர்வணவேதம் மற்றும் இருஇதிஹாசங்களை மகிழ்வித்திடவும் என்று கூறுகின்றன. நால்வேதப்பெயர்மந்திரங்களும் புராணங்களும் உரிய மந்திரங்களாக உள்ளன.



## பஸ்மமும் அதன் தேவையும்.

**171. பாஸயத் யகிலம் ஞானம் நித்யம் பாஸயதே ச யத்.**
**பக்ஷணாத் ஸர்வ பாபாநாம் பஸ்மேதி பரிகீயதே.**
**பஸ்மஸ்நாந விஹீநஸ் து சிவபூஜாம் ந காரயேத்.**

எல்லாஞானத்தையும் வெளிப்படுத்துவதாலும் எப்பொழுதும் ஒளிவீசுவதாலும், எல்லாபாவங்களையும் உட்கொண்டு புனிதப் படுத்துவதாலும், பஸ்மம் என்ற பெயர் விபூதியான திருநீறுக்கு விளங்குகிறது. இதனை முறை அணிதலாகிற பஸ்மஸ்நாநத்தை செய்யாமல் நெற்றியில் மேனியில் திருநீறு அணியாமல் சிவபூசையை ஒருபோதும் செய்யக்கூடாது.

## திருநீறு அணியும் பயன்.

**172. ஸர்வ தீர்த்தேஷு யத் ஸ்நாநம் ஸர்வ யக்ஞேஷு யத் பலம்.**
**தத் பலம் கோடி குணிதம் பஸ்ம ஸ்நாநேந ஸித்யதி.**

**- (சுப்ரபேதாகமம்)**

எல்லா புண்யதீர்த்தங்களில் செய்த ஸ்நானப்பயனும், எல்லா யாகத்திலும் எந்த பயன் கிடைக்குமே அப்பயனும், கோடிமடங்கு கூடுதலாக முறையான பஸ்மத்தை முறைப்படி அணிந்து கொள்வதாலேயே கைகூடும். அந்த அளவு உயரிய பயன்களைத் தரவல்லது என்றறிக.



## சிவனருள் தரும் எட்டுபெயர்கள்.

**173. சிவோ மஹேச்வரச் சைவ ருத்ரோ விஷ்ணு: பிதாமஹ:.
ஸம்ஸார வைத்யஸ் ஸர்வக்ஞ: பரமாத் மேதி முக்யத:.
நாமாஷ்டக மிதம் நித்யம் சிவஸ்ய ப்ரதிபாதகம்.**

தினமும் யாவரும் சொல்ல வேண்டிய எட்டு சிவனாரின் பெயர்கள் முறையே சிவன், மஹேச்வரன், ருத்ரன், விஷ்ணு, பிதாமஹர், ஸம்ஸாரவைத்யர், ஸர்வக்ஞர், பரமாத்மா என்பவைகளாகும். இவைகளைக்கூறுவது சிவனாருக்கு மகிழ்ச்சியை அளித்து நமக்கு சுகமளிக்கும்.

## சிவனாரின் அரிய திருநாமங்கள்.

**174. ஹரஸ் ஸர்வஸ்ய ஹரணாத் விபுத்வாத் விஷ்ணு ருச்யதே.
பகவான் ஸர்வவிக்ஞானாத் அவநாத் ஓம் இதி ஸ்மிருத:.**

அனைத்தையும் ஒடுக்கி ஸங்கரிப்பவராதலால் ஹரன் எனவும், எங்கும் நிறைந்த வியாபகராதலால் விஷ்ணு எனவும், ஸர்வக்ஞர் எல்லாமறிந்தவராதலால் பகவான் எனவும், காப்பவராதலால் ஓம் எனவும் அதாவது ஓமிதிப்ரம்மம் என்ற வேதவாக்குப்படி பரப்பிரம்மம் எனவும் தருநாமங்கள் இவை சிவபிரானுக்கு உரியவை. இவையாவும் பரம்பொருளான சிவனைக்குறிக்கும் பரப்பிரம்ம சிவவாசகமாம்.

## திருமண பஞ்சாங்க கிரியைகள்.

**175. வாக்தானம் ச ப்ரதானம் ச வரணம் பாணிபீடனம்
ஸப்தபாதீதி பஞ்சாங்கோ விவாஹ: பரிகீர்த்தித:.**

எட்டுவிதமான திருமணங்களில் முதலாவதான பிராஹ்ம விவாஹத்தில் முக்கிய அங்கங்களாக இருப்பன ஐந்து. அவை. 1. கன்னிகையை கொடுப்பதாக கன்யாபிதாவானவர் வாக்கு அளித்து நிச்சயம் பண்ணுதல். 2. கன்னிகாதானம் 3. கன்யாவரணம் 4. பாணிக்கிரகணம், 5. ஸப்தபதீ என்றும் ஐந்துமாகும். இவற்றோடு மாங்கல்யதாரணம், என்பதொரு செயலும் முன்னோர்களால் சேர்க்கப்பட்டு விவாஹத்தின் ஒரு அங்கமாக (ஆறாவதாக ஆரங்கமாக) இருக்கின்றது.



 

## கோயிலும் லிங்கமும்.

**176. தேஹோ தேவாலயப் ப்ரோக்தோ ஜீவோ தேவஸ் ஸதாசிவ:**
**தேஹம் விமான மித்யுக்தம் தேஹீ லிங்க மிதி ஸ்மிருதம்.**

தேவாலயமே தேஹம். ஜீவனே தேவன். சதாசிவன். கோயிலே உடம்பு எனவும், உடலையுடைய உயிரே லிங்கம் என்றவாறு, ஸ்தூலமாயும் சூக்ஷ்மமாயும் கோயிலும் லிங்கமும் அறியத் தக்கதாகும்.

**ஆலயோ தேஹ ஏவோக்த: கலாதத்வாத்ம ரூபக:.**



மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு ஸதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே. (திருமந்திரப்பாடல)

## கோயிலில் மூன்றுவகைலிங்கம்.

**177. ஸ்தூலலிங்கம் விமானம் ஸ்யாத் சூக்ஷ்மலிங்கம் ஸதாசிவம்.**
**பலபீடம் பத்ரலிங்கம் லிங்க த்ரயம் இஹோச்யதே.**

பெரிய அளவில் உள்ள ஸ்தூலலிங்கம் விமானமாகும் மூல ஆலயமாகும். சிறியஅளவில் கண்ணுக்குப் புலப்படாத நிலையின் ஸதா சிவனார் உள்ள சிவலிங்கம் சூக்ஷ்மலிங்கமாகும். பலிபீடம் பத்ரலிங்கமாகும். இவ்விதம் கோயிலில் மூலலிங்கம் அதன்மேலுள்ள விமானஸ்தூபி கலசம் முன்னுள்ள பலிபீடம் இவைமூன்றும் மூவகை லிங்கமாகும். தெய்வத்தின் அருளைத்தரவல்ல மூன்று திருவுருவங்களாகும்.

## கொடிமரத்தில் முப்பொருள் நிலை.

**178. ரஜ்ஜுஸ் சக்திஸ் ஸமாக்யாதா சிவஸ் ஸ்யாத் தண்டநாயக:.**
**பதிஸ் ஸ்தம்ப மிதி க்யாதம் பசுப் படம் இதி ஸ்மிருதம்.**
**ரஜ்ஜுப் பாசம் இதி ப்ரோக்தம் நராணாம் பாசஸம்ஹ்ருதி:**

**- (காமிகாகமம்:)**

பதி = இறைவன். பசு = பத்தான்மாக்கள். பாசம் = மாயாதிதளைகள். கோயிலில் பெருவிழாவில் கொடி ஏற்றப்பட்ட கொடி மரமானது மக்களுக்கு மாசுகளை மாய்த்து ஞானமளித்து போக மோக்ஷங்களைத் தரவல்லது. அப்பொழுது கொடிமரமே சிவன் அதில் சுற்றப்பட்டுள்ள கயிறு சக்தி என்று அறியத்தக்கது. மேலும் வாஹணம் எழுதப்பட்டுள்ள கொடித்துணி பசுவாகிய (விருஷபம்) உயிர்கள். என்றும், கொடி ஏற்றப்பட்டுள்ள கம்பமேதண்டமே

சிவனாரான பதி என்றும், கட்டப்பட்டுள்ள கயிறு பாசமென்றும் சைவாகமங்களில் கருதிடுமாறு கூறப்பட்டது. உலகத்து உயிர்கள் ஐவகைப்பாசத்தளைகளை விட்டு விலகி பதியாகிய சிவனைக்கூடிட சிவயோகப்பயிற்சி செய்யவேண்டுமென்பதை சுழுமுனை நாடியாக உள்ள ஆலயகொடிமரம் ஆன்மீகதத்துவத்தை உணர்த்துவது.

கோயில்கொண் டானடி கொல்லைப் பெருமறை
வாயில்கொண் டானடி நாடிகள் பத்துள
பூசைகொண் டான்புல னைந்தும் பிறகிட்டு
வாயில்கொண் டானெங்கள் மாநந்தி தானே (திருமூலரின்திருமந்திரம் 1729)

உடலின் பத்து நாடியின் முக்கிய இடாபிங்கலை சுழுமுனை ஆகிய மூன்று நாடிகளில் மையநாடிசுழுமுனை நாடியே கோயிலின் மையை நேர்க்கோட்டில் கொடி மரமாக விளங்குவதை அறியவேண்டும்.

## ஸித்தாந்தத்தில் இறையின் மூன்றுநிலை.

**179. தத்வம் மூர்த்தி ப்ரபாவஸ் ச த்ரிவிதோ வித்யதே க்ரமாத்.**
**சிவஸ் ச தத்வம் இத்யுக்தம் மூர்த்திஸ் சைவ மஹேச்வர:.**
**தயோர் யோகேந யத் ரூபம் தத் ரூபம் பாவஸம்ஞகம்.**
**பாவம் ஸாதாக்யம் இத்யுக்தம் இத்யேவம் பரிகல்பிதம்.**

(வாதுளசுத்தாக்யம்[1])

சிவனாரின் அருள் மூன்று வகையில் கிடைப்பதாகிறது. அவை கடவுளின் உண்மை இயல்புகளான தத்துவம், மூர்த்தி, ப்ரபாவம் என்பவை. இவற்றின் விளக்கத்தை வாதுளசுத்தாக்யநூல்கூறுகிறது, சிவன் தத்வம் என்றும், மூர்த்தி, மஹேச்வரரர் என்றும், இவ்விருவருவருடைய உருவச்சேர்க்கையை பாவனையால் உணர்த்தும் பாவாகாரலிங்கம் ஸாதாக்யம் எனப்படுகிற ஐந்தொழிலாற்றிடும் பிரபாவம் என்றறியவும்.

## முப்பகுதியில் மூன்றுதத்வாதிபதிகள்.

**180. பிரம்மா விஷ்ணுஸ் ச ருத்ரஸ் ச த்ரிகண்ட மிதி கத்யதே.**
**ஊர்த்வம் து சிவபாகஸ்யாத் விஷ்ணுபாகஸ் து மத்யத:**
**பிரம்மபாகஸ் து அதப் புரோக்த: சாஸ்த்ரக்ஞைர் லிங்ககும்பயோ:.**

சைவாலயங்களில் உள்ள சிவலிங்கம், கொடிமரம், திரிசூலம், கும்பம் பலிபீடம், ஆலயவிமானம் முதலியனயாவுமே மூன்று பகுதிகளுடன் கூடியே விளங்குவனவாகும், அவைபிரம்மபாகம் அடியிலும் விஷ்ணு பாகம் நடுவிலும் மேல்பாகம் ருத்ரபாகம் என்றும் மூன்று பகுதிகளை உடையதாக சிவலிங்கமும் கலசமும் என்றும் கருதப்படவேண்டியது.

## தருமவடிவவிருஷபரின் பஞ்சவர்ணம்.

**181. வ்ருஷபச் சுவேத வர்ணஸ்து ரக்தாஸ் ஸர்வே உரா: ஸ்மிருதா:.
ஸித கிருஷ்ணமயௌ சாக்ஷௌ த்விச்ருங்கௌ ரக்தவர்ணகௌ.
கர்ணௌ து ரக்தவர்ணாபௌ பீதவாலேந கோபித:.
கண்டாமாலா சுவர்ணாபா ஸ்திதம் வா சயனம் து வா.**

ஜீவாத்மாவை உணர்த்தும் தருமரூபமான விருஷபதேவரானவர் பஞ்ச முக ஸதாசிவரைப்போன்று ஐந்து நிறங்களைக்கொண்ட எருது வடிவில் உள்ளார். உடலில் வெணணிறமும், குளம்புகளில் செந்நிறமும், வலது இடது கண்களில் வெள்ளைகருப்பு நிறங்களும், இருகொம்புகளில் சிகப்புநிறத்தையும், இருகாதுகளை சிகப்பு நிறத்திலும், வாலில் மஞ்சள் நிறத்தையும் கழுத்தில் மணிமாலையானது தங்கநிறமும் கொண்டதாக உள்ள எருதானது நின்ற நிலையிலோ படுத்தநிலையிலோ கருதவேண்டும். இவ்வாறே உருவஅமைப்பிலும் தியானத்திலும் கொடித்துணியிலும் இருத்தல் வேண்டும்.

## விபூதிஅணிவதன் அவசியம்.

**182. ஸத்யம் சௌசம் ஜபோ ஹோமஸ் தீர்த்தம் தேவாதி பூஜனம்.
தஸ்ய வ்யர்த்த மிதம் ஸர்வம் யஸ்த்ரி புண்ட்ரம் ந தாரயேத்.**

எவர் விபூதிமுப்பட்டையை அணியவில்லையோ அவனுக்கு உண்மையான கூற்று, ஆசாரம், வேதமந்திரஜபம் முதலானவை ஹோமம், தீர்த்தியாத்தி ஸரக்ஷேத்ரசேவை சாஸ்த்திரஸேவை, தேவாக்னிகுருபூஜனம் இவையாவும் பயனற்றதாகும் என்ற அறியவும். எனவே திருநீறு அணிதல் தினமும் அவசியமாம்.

## சிவபக்த பிராம்மண அடையாளங்கள்

**183. முகே மந்த்ரம் ஹ்ருதி த்யானம் மஸ்தகே லிங்கதாரணம்.
சிகா சூத்ரம் ததா பஸ்ம ஹ்யேதத்
ப்ராம்மண லக்ஷணம்.**

வாயில் பஞ்சாக்ஷர மந்திரமும், இதயத்தில் சிவனாரின் நினைப்பும், தலையில் சிவலிங்கஸ்தாபனமும் சிகை, பூணூல், விபூதி இவைகளே ஒரு பிராமணனுக்கு இலக்கணம் என்று கௌதமர் கூறுகிறார்.



## லிங்கசின்னத்தின் பெருமை.

**184. லக்ஷ்மியாதி சக்தயஸ் ஸர்வா: சிவபக்தி விபாவிதா:.
தாரயந்தி அளிகாக்ரேஷு சிவலிங்கம் அஹர்நிசம்.**

லக்ஷ்மீ முதலானதேவிகள் அனைவரும் மஹேச்வரனிடத்தில் பக்தி உடையவர்களாய், தனது நெற்றியில் விருப்பமான இஷ்டலிங்கத்தை சமயசின்னமாக எப்பொழுதும் அணிந்துள்ளனர் என்கிறது ஆகமம்.

## பஞ்சாக்ஷரஜபவிதி



**185. அகஸ்த்ய ராமாதிபி ராத்ருதத்வாத்
அமுஷ்ய மந்த்ரஸ்ய ச வைதிகத்வாத்.
பரஸ்ய தத்வஸ்ய ச வாசகத்வாத்
நமச்சிவாயே தி ஸதா ஜபத்வம்.**

அகஸ்தியர் முதலான மகரிஷிகளாலும் ராகவராமர் முதலானவர்களாலும் ஏற்றுகடைபிடிக்கப்பட்டதாலும், இந்த சிவபஞ்சாக்ஷரம் நூல் வேதத்திலும் கூறப்பட்டதால் வைதிகமானதாலும், ஸாக்ஷாத்பரமாத்மாவைக் குறிப்பிடும் சொல்லாகவும் இருப்பதால் யாவரும் எப்பொழுதும் நமச்சிவாய என்கிற நாமமந்திரத்தை ஜபித்திடவேண்டும்.

## சிவனருட்ப்ரஸாதப்பெருமை

**186. உபவாஸ ஸஹஸ்ராணி ப்ராஜாபத்ய சதாநிச.
சிவப்ரஸாத ஸித்தஸ்ய கோட்யம்சேநாபி நோ ஸமா:. - (வாதுளாகமம்)**

ஆயிரக்கணக்கான விரதம் உபவாசம் நூற்றுக்கணக்கான பிராஜாபத்யம் முதலான பரிகாரங்கள்யாவும் சிவனாரின் அருள் கிடைத்த ஒருவனுக்கு அவை கோடியில் ஒரு அம்சம் கூடஆவதில்லை.

## சண்டேச்வரரின் அதிகாரவிதி.

**187. பாணலிங்கே சரே லோஹே ரத்னலிங்கே ஸ்வயம்புவி.
ப்ரதிமாஸு ச ஸர்வாஸு ந சண்டோ(அ) திக்ருதோ பவேத்.
- (சைவசித்தாந்தாகமே)**

பாணலிங்கத்திலும் (நர்மதை நதிநீரில் கிடைத்தவை) அசைக்கக்கூடிய சரலிங்கத்திலும், உலோகங்களாலான லிங்கங்களிலும், ரத்தினவகை லிங்கங்களிலும் சுவயம்பு லிங்கத்திலும் எல்லா பதுமை உருவச்சிலையான பிரதிமாபேர

விஷயத்திலும், சண்டேச்வரானவர் சிவனை சேவிக்கும் தரிசிக்கும் அடியவருக்கும் தரிசன பயனைத்தரும் அதிகாரம் இல்லாதவராகிறார் என்று சித்தாந்த சைவாகமங்கள் கூறுகின்றன. மானுஷலிங்கத்ருவ லிங்கவிஷயத்தில் அதிகாரியாகிறார் என்றறிக.

## சிவஅதுல்யபாவனைதேவை.

**188. சிவம் து ந ஸமம் ப்ரூயாத் தேவை ரன்யை: கதாபி வா.**
**ஸமம் ப்ருவன் ஸ நிஷ்கார்ய: சாஸ்த்ர சோதித வர்த்மநா.**

ஒருபோதும் மற்றதெய்வங்களோடு சமமானவராக சிவனைக் கூறக்கூடாது. சாஸ்திரங்களில் கூறப்பட்டவழிகளால் பூஜை முதலான செயல்களையும் சமமாகக் கூறிக்கொண்டு சமஅளவில் சமமுறையில் செய்யக்கூடாது. எக்கிரியையிலும் முதலாவதாக மேன்மை பெற்றுள்ள நிலையில் அதிகஅளவில் செயலைச் செய்து மற்ற தெயங்வங்களை அடுத்த நிலையில் குறைந்த அளவுபொருள் செயல்களை உடையதாகவே வழிபடவேண்டும், இணையாகச் செய்யக்கூடாது.

## அர்ச்சனா சொல்லின் பொருள்.

**189. அகாரம் அர்ச்சனம் ப்ரோக்தம் சகாரம் த்ரவ்ய முச்யதே.**
**மகாரம் மந்த்ர ஸம்பந்தம் அர்ச்சனம் சேதி கீர்த்திதம்.**

அர்ச்சனம் என்ற சொல்லில் உள்ள அகார எழுத்து பூசித்தலையும், சகாரஎழுத்து பூசைக்கு உரியபொருளையும், மகாரஎழுத்து பூசைக்கு பொருளைத்தர உரிய மந்திரத்தொடர்பையும் உணர்த்துவதாக ஒன்று கூடி அர்ச்சனம் என்று கூறப்பட்டது. மந்திரத்தால் பொருளை இறைக்கு அளிக்கும் செயலே அர்ச்சனையாம்.

## பூஜா சொல்லின் பொருள்.

**190. பூர்யந்தே ஸர்வகர்மாணி ஜாயதே ஞானம் ஆத்மனி.**
**பூரணாத் ஜாயதே யஸ்மாத் பூஜா சப்த இஹோச்யதே.**

பூஜா என்ற சொல்லில் உள்ள பூ என்ற எழுத்து (உயிர்களின் பிறப்பு சுகதுக்கங்களுக்கு மூலகாரணமாயுள்ள) அனைத்து வினைகளையும் பூரணம் அதாவது நிறைவு பெறமுடிவுஅறச்செய்தலையும், ஜா என்ற எழுத்து உயிர்களிடத்தில் சிவஞானத்தை வெளிப்படுத்துதலையும் செய்கின்ற இருவகைசெயல்பாடுகளை உணர்த்துவதாக இரு எழுத்தால் பூஜா என்றசொல் ஆகமத்தில் கூறப்படுகிறது.

## மந்த்ரம் சொல்லின்பொருள்.

**191. மனனம் ஸர்வ வேதித்வம் த்ராணம் ஸம்ஸாரி அனுக்ரஹ:.
மனன த்ராண தர்மித்வாத் மந்த்ர இத் யபிதீயதே.**

(காமிகம்&காரணம்)

மந்த்ர என்ற சொல்லில் உள்ள மந் என்பது மனதால் அதன் உரிய பொருளை அறிவித்தலையும், த்ர என்பது (உயிர்களை இவ்வுலக பிறவிவாழ்விக துன்பத்திலிருந்து) மீட்டுக் காப்பதையும் உணர்த்துவதாக எண்ணுதல் காத்தல் என்ற இருபண்புகளை உணர்த்துவதால் மந்த்ரம் என்ற பெயர் பெற்றதாக கூறப்படுகிறது என்று அறிக.

## முத்ரா சொல்லின் பொருள்.

**192. முதம் கரோதி தேவாநாம் அசுராணாம் ச த்ராவணாத்.
மோதனாத் த்ராவனாத் யஸ்மாத் முத்ரேயம் பரிகீர்த்திதா.**

(சுப்ரபேதம்)

முத்ரா என்ற சொல்லில் உள்ள மு என்ற எழுத்தானது முதம் என்கிறதான சந்தோஷத்தை தேவர்களுக்குத் செய்வதாலும், த்ரா என்ற எழுத்தானது த்ராவணம் என்பதான துரத்துதலை அசுரர்களுடைய விரட்டுதலைச் செய்வதாலும், இவ்விதம் இருவகை செயல்களைச் செய்வதாலேயே இது முத்ரா (காட்டப்படுகிறகை முத்திரைகள்) என்ற பெயரில் கூறப்படுகிறது.

## தீக்ஷாசொல்லின் பொருள்.

**193. தீயதே தத் சிவத்வம் ஹி க்ஷீயதே பாப பஞ்ஜரம்.
க்ஷய தான விஸேஷத்வாத் தீக்ஷா சேத் யபிதீயதே.**

– (சுப்ரபேதாகமம்)

தீக்ஷா என்ற சொல்லில் உள்ள தீ என்ற எழுத்து (உயிர்களுக்கு) சிவனாரின் (ஸர்வக்ஞத்வம் முதலிய எட்டுவகையான) குணங்களை கொடுக்கிறது என்பதையும், க்ஷா என்ற எழுத்து (ஆத்மாக்களுடைய (ஆணவம் கன்மம் மாயை, விந்து, திரோதானம், ஆகிய ஐந்துவகையான) மாசுக்கூட்டத்தை அழிப்பதையும் செய்விக்கின்ற அரிய செயலாக தானம் க்ஷயம் என்ற இருசெயலைச்செய்வதால் ஆகமத்தில் இச்செயலுக்கு தீக்ஷா என்ற பெயர் கூறப்படுகிறது. ஆன்மப்பயன்தரும் செயல் தீக்ஷை.

## வன்ஹிசொல்லின்பொருள்.

**194. வகாரோ வர்ததே ஞானம் ன்ஹிகாரேண மலக்ஷய:.**
**ப்ரக்ஞோத்பன்ன மலச்சேதாத் வன்ஹிரித்ய பிதீயதே.**

வன்ஹி என்ற சிவாக்னியான நெருப்பின் பெயரில் உள்ள வ என்ற எழுத்து ஆன்மாவில் ஞானத்தை வளர்த்தலையும், ன்ஹி என்ற எழுத்து ஆன்மாவின் மாசு நீக்கத்தையும் உணர்த்துவன. இவ்வாறு மலநாசம் செய்வித்து சிவஞானத்தை ஏற்படுத்தும் அறிவொளியே வன்ஹி என்று கூறப்படுகிறது.

## ருத்ர என்னும் சொல்லின்பொருள்.

**195. ருக் துக்கம் துக்கஹேதுர் வா தத் த்ராவயதி நப் பிரபு:.**
**ருத்ர இத் யுச்யதே ஸத்பி: சிவ: பரமகாரண:.**

ருத்ர என்ற சொல்லில் உள்ள எழுத்துகளில் ருக் என்பது துயரம் அல்லது துயரத்திற்கு காரணமானதை உணர்த்துவதாகும், த்ர என்பது அதனை துயரகாரணத்தை (யவரோக பிறவிப்பிணித்துயரத்தை) (த்ராவயதி விரட்டுகிறது என்பதாக) போக்குவதையும் உணர்த்தும். இவ்வாறு துயரத்தைபோக்குவதாலேயே நமது பிரபுவானப பதியான பரமகாரணரான சிவனார் அறிஞர்களால் ருத்ரன் என்றபெயரில் அழைக்கப்படுகிறார்.

## ப்ராயச்சித்தம் சொல்லின் பொருள்.

**196. ப்ராயோ விலய இத்யுக்த: சித்தராஹித்ய க்ருத் தத:.**
**லயராஹித்ய ஹேதுத்வாத் ப்ராயச்சித்த மிதிஸ்மிருதம்.**

ப்ராயச்சித்தம் என்ற சொல்லில் உள்ள ப்ராய என்பது தப்பு செய்ததால் ஏற்படுகிற அழிவை (தாழ்வை) உணர்த்துகிறது. சித்த என்பது ஏற்படும் அதனை அத்தாழ்வை இல்லாமல் செய்வதனை உணர்த்துகிறது. ஆகையால் பரிஹாரச் செயலானது இழிவை நீக்கும் காரணத்தாலேயே ப்ராயச்சித்தம் என்ற பெயரில் செயல் உள்ளதாக அறியத்தக்கது.



## பவித்ரம் சொல்லின்பொருள்.

**197. பகாரம் பாபநாசம் ஸ்யாத் விகாரஸ்ய மலக்ஷயம்.**
**த்ரகாரம் கர்ம சுத்யர்த்தம் பவித்ரஸ்ய து லக்ஷணம். -(வீரதந்த்ரம்)**

பவித்ரம் என்ற சொல்லில் உள்ள பகாரஎழுத்தானது ஏற்படும் பாவங்களை அழிப்பதனையும், வி என்ற எழுத்தானது மும்மலங்களை ஆன்மாவில் உள்ள மாசுகளை அழிப்பதைனையும், த்ர என்ற எழுத்தானது செய்யும் செயலைத் தூய்மைப்படுத்து தலையும் செய்கின்றன. இம்மூன்று பயன்கள் ஏற்படும் பொருட்டு செய்யப்படும் செயலே சந்தனம் புஷ்பம் அருகு அக்ஷதை அர்க்யஜலம் இவை ஐந்தை சேர்த்து பூசைமுடிவில் அளிக்கப்படும் நித்யபவித்ரம் சாத்துவதன் பயனாகும்.

## ஜபம் சொல்லின்பொருள்.

**198. ஜகாரோ ஜன்மவிச்சேத: பகார: பாபநாசன:.**
**ஜன்மபாபஹரோ யஸ்மாத் ஜப இத்யுச்யதே புதை:.**

ஜபம் என்ற சொல்லிற்கு அதிலுள்ள ஜ என்ற எழுத்து இனி பிறப்பெடுப்பதைத்தவிர்திடுவதை செய்கிறது. ப என்ற எழுத்து பாவங்களை அழித்திடுவதை செய்கிறது. இவ்விதம் எந்த செயலானது எதனால் மறுபிறப்பைப்போக்கி பாவத்தை நீக்கிஉதவுகிறதோ அதனால் இறைவன் பெயரை பலமுறை மந்திரத்தை கணிக்கும் செயல் ஜபம் என்ற பெயரால் அறிஞர்களால் கூறப்படுகிறது.

## குண்டம் சொல்லின்பொருள்.

**199. குகாரம் கோணரூபம் ச ண்டகாரம் ஸமரூபகம்.**
**ஸமகோணஸமம் பிந்து குண்டமித்யபிதீயதே - (லலிதாகமம்)**

குண்டம் என்ற வேள்விசெய்யும் பள்ளப்பகுதியானது கட்டுமான உருவஅமைப்பில் அப்பெயரில் உள்ள கு என்ற எழுத்து கோணஉருவத்தையும், பலமுனை (கூர்உள்ளதையும்)யையும், ண்ட என்ற எழுத்து சமமாக பட்டையாக கண்ணாடிபோல பூசப்பட்டசமஉருவத்தையும் குறிப்பதாய் கோணத்தோடும் சமத்தோடும் சேர்ந்துள்ளதால் குண்டம் என்ற பெயருடையதாகி அனைத்தையும் தோற்றுவித்துஒடுக்கும் இயல்புடைய ஆதிமூல காரணமான பரபிந்து (பரமாகாச) சக்தியின் பஞ்சகலைகளின் உருவமாக விளங்குவதே யாக சாலையில் அமைகிறஹோமத்திற்கான குண்டம் எனப்படுகிறது.

## புரச்சரண விளக்கம்.

**200. பூஜா த்ரைகாலிகீ நித்யம் ஜபஸ் தர்ப்பண மேவச.**
**ஹோமம் ப்ராம்மண புக்திஸ் ச புரச்சரண முச்யதே.**

தீக்ஷையில் தெய்வமந்திரத்தை குருவிடமிருந்து பெற்ற சீடர்மந்திரஸாதகராக ஆவதற்கு அந்த மந்திரத்தால் தினமும் அருள்கூடும் வரை செய்யப்படுவது புரச்சரணம் எனப்படும். இது தினமும் மூன்று வேளைகளில் மும்முறை பூசை செய்தல், ஜபம் செய்தல் பால்நீரால் தர்பணம் செய்தல், ஹோமம் செய்தல், பிராம்மணர்களுக்கு விருந்துணவு அளித்தல் ஆகிய ஐந்து செயல்களையும் உறுப்பாகக் கொண்டது என்று அறியவும்.

## ப்ராஸாதம் சொல்லின் பொருள்.

**201. ப்ராசப்தம் ஸ்யாத் சிவஜ்ஞேயம் ஸாசப்தம் சக்தி ருச்யதே.**
**தத் ஸ்வரூபம் து தம் சப்தம் த்ரிவர்ண மபி தீயதே.**
**தாநேன முக்திதம் யஸ்மாத் தஸ்மாத் ப்ராஸாத முச்யதே.**

– (வாதுளசூத்தாக்யம்)

சைவசமயத்தில் ஆகமங்களில் கோயிலும் சிவனது மேலான மந்திரமும் ப்ராஸாதம் என்ற பெயரார் விளங்குகிறது. இதில் உள்ள மூன்று எழுத்துக்களும் முறையே ப்ரா என்பது சிவனையும் ஸா என்பது சக்தியையும், தம் என்பது இருவரின் உருவத்தையும் குறிப்பனவாகி எதனை மந்திரத்தை அளிப்பதால் முக்தி ஏற்படுறதோ (எதனை கோயிலைக்கட்டிஅளிப்பதால்) அதனால் இது ப்ராஸாதம் என்ற பெயரால் கூறப்படுவதாகிறது. பிராஸதத்தை அறியாதவன் ஆசார்யனாக விளங்கமுடியாது. சிவசக்தி அருள்வடிவமே ப்ராஸாதம் ஆகும்.

## ஸ்நபனம் சொல்லின் பொருள்.

**202. ஸ்நகாரம் ஸர்வஸித்திஸ்யாத் பகாரம் ஸ்திதி ருச்யதே.**
**நகாரம் பாபநாசம் ஸ்யாத் தஸ்மாத் ஸ்நபன முச்யதே.** – (காரணாகமம்)

கோயில் தெய்வத்திற்கு அபிஷேகம் செய்வதற்காக கலசம் வைத்து பூசை செய்வது ஸ்நபனபூசை எனப்படும். இந்த ஸ்நபனம் என்ற சொல்லில் உள்ள ஸ்ந என்பது காரியங்களில் அனைத்துப்பயனும் கைகூடுவதையும், ப என்ற எழுத்து காக்கும் தொழிலையும், ந என்ற எழுத்து பாவத்தை நாசம் செய்வதையும் உணர்துவதாய் பாவங்களை நீக்கி காரியஸித்தியை அளித்து அனைத்து உயிர்களை இறையருளால் காத்திடும் செயலாம்.

## ரக்ஷா சொல்லின் பொருள்.

203. ரகாரம் ஸர்வ மித்யுக்தம் க்ஷகாரம் பாபநாசனம்.
ரக்ஷாசப்த மிதி க்யாதம் ஸமாஸாத் பரிகீர்த்திதம். –(காரணாகமம்)

ஒரு செயலுக்கு முன்னதாக சிலைக்கோபூஜகருக்கோ கையில் கட்டப்படும் கயிறு காப்பு ரக்ஷா எனப்படும். இச்சொல்லில் உள்ள ர என்ற எழுத்தானது எல்லாவகையையும் (பாவதோஷதீட்டுகளை) உணர்த்தும், க்ஷ என்ற எழுத்தானது பாவங்களை அழிப்பதையும் உணர்த்தும் இவ்வாறு எதை கட்டுவதால் எல்லாவகை பாவமாசுகளை அகல்கிறதோ அதுவே ரக்ஷா என்பதாகும்.

## லிங்க தத்துவ ஸ்வரூபம்.

204. ஆகாசம் லிங்க மித்யாஹு: ப்ருத்வீ தஸ்ய பீடிகா.
ஸர்வபூதா லயம் ப்ரோக்தம் லயநாத் லிங்கமுச்யதே. – (ரௌரவாகமம்)

சிவலிங்கமானது லிங்கம் பீடம் என்ற இருபகுதிகளை உடையது. இதில் ஆகாயமே மேலுள்ள (தூண்போன்ற) லிங்கம் (சிவன்) என்றும் பூமியே கீழுள்ள சுற்றியுள்ள பீடம் இவ்விதம் பஞ்சபூதத்தில் உள்ள மூலமான இருகருப்பொருளான விண்ணும் மண்ணும் சேர்ந்து அனைத்தையும் தம்முள் ஒடுக்கிக் கொண்டும் பின்பு வெளியிட்டும் இவ்வாறு அனைத்து பூதங்களுக்கும் இருப்பிடமாயும் ஒடுங்குவதாலும் இதுலிங்கம் (அதாவது லி=லயம்=ஒடுக்கம்) என்று கூறப்படுகிறது.

## பதி என்ற சொல்லின் பொருள்.

205. லய போகா திகாராத்மா வ்யாபார த்ரய லக்ஷித:.
ஸ்வபாவாத் அச்யுதச் சாந்த: ஸ பதி: பரிபட்யதே. – (பௌஷ்கராகமம்)

சைவஸித்தாந்தசமயத்தில் இறைவன் லயம்=உருவமற்று மறைந்து ஒடுங்கி இருத்தல், போகம் =பிந்துவைக்கலக்கி உலகைப்படைத்தல். அதிகாரம் = ஐந்து நிலைகளில் பெயர் உருவம் தாங்கி ஐந்தொழிலாற்றல், இவ்வாறு மூன்று நிலைகளில் இருப்பவரும், அழிவற்றவரும், விருப்புவெருப்பற்ற சாந்தராயுமிருப்பதாலே அவர்பதிஎனப்படுகிறார்.



## தீக்ஷையின்வகைகள்.

**206. சாக்ஷுஷீ ஸ்பர்சதீக்ஷா ச வாசிகீ மானஸீ ததா.**
**சாஸ்த்ரீ ச யோகதீக்ஷா ச ஹௌத்ரீ த்யாதி ரநேகதா.**

சைவசமயத்தில் அருள்தரும் செயலான தீக்ஷை என்பது பலவகை. தம் சீடனுக்கு சிவத்தன்மையை குருவானவர் கண்ணால் தருதல், தொட்டுகைகால் பதித்துத்தருதல், வாயால் மொழிந்துதருதல், மனதால் கருதி அளித்தல், சாஸ்திர முறையால் செய்தல், யோகத்தால் செய்தல், ஹௌத்ரீ என்பதாக குண்டமண்டஹோமத்தால் செய்வது முதலாக பலவழிமுறைகளில் தீக்ஷை செய்யத்தக்கதாகும்.

## பஞ்ச மஹாயக்ஞங்கள்.

**207. ஞானம் தியானம் ச ஸ்வாத்யாயஸ் தப: கர்ம ததைவச.**
**ஏதே பஞ்ச மஹாயக்ஞா: மயா ப்ரோக்தா யதா க்ரமம்.**

– (அஜிதாகமம்)

சைவாகமம் முதலிய பல அறநூல்கள் ஐந்து வகையில் வேள்வியைக்கூறும். 1. ஞானயக்ஞம் 2. தியானயக்ஞம் 3. ஸ்வாத்யாயயக்ஞம் 4. தபோயக்ஞம் 5. கர்மயக்ஞம் என்பவை பஞ்சமஹாயக்ஞங்கள். 1. பூஜாஹோமாதிகளால் செய்வது கர்மயக்ஞம் 2. சாந்த்ராயணம் முதலான பலவித உபவாஸவிரதங்கள் தபோயக்ஞம் 3. ஜபம் செய்வது ஸ்வாத்யாயயக்ஞம் 4. சிவமந்திரத்திற்கு ஜபம் செய்தலே தியானயக்ஞம். 5. கற்றல் கற்பித்தல் உரைத்தல் கேட்டல், எண்ணுதல் இவை ஐந்தும் ஞானயக்ஞம்.

## ஆகமத்தில் ஆறு பொருள்கள்.

**208. பதி: குண்டலிநீ மாயா பசு: பாசாஸ் ச காரக:.**
**இதி ப்ரோக்தா: பதார்த்தாஷ் ஷட் சைவதந்த்ரே ஸமாஸத:**

சைவாகமங்களில் ஆறு பொருள்கள் பேசப்படுகின்றன. பதி = சிவன், 2. குண்டலிநீ = மஹாமாயை 3. மாயா = அசுத்த மாயை 4. பசு = தாத்மா. 5. பாசா: = கன்மங்கள் 6. காரக: = ஆணவமலம் ஆகிய இவை ஆறுமாகும். மஹாமாயை = சுத்தபுவன உபாதானம். மாயை அசுத்தபுவன உபாதானகாரணம்.



## கர்மப்படிக்கட்டு தரும்பயன்.

**209. கர்மஸோபாந நிச்ரேண்யா புவனாத் புவனாந்தரம்.**
**யாத்யாத்மா போகதோ போகம் தேஹாத் தேஹாந்தரம் ததா.**

ஜீவன்கள் தங்களின் வினையின் பயனாக ஒரு புவனத்திலிருந்து ஒருமேல்புவனத்திற்கு கன்மமாகிறபடிக்கட்டு மூலமாக உயிரானது ஒருஅனுபவத்திலிருந்து வேறு சுகானுபவத்தை உடலிலிருந்து வேறு உடலை அடைவதுபோல கீழுலகிலிருந்து மேலுலகை அடைந்து சுகதுக்கங்களை அனுபவிக்கின்றன.

## சிவதீக்ஷையின் ஆறங்கம்.

**210. ஷடங்காநி விதேஸ் தாவத் வக்தவ்யான் யாநுபூர்வச:.**
**முத்ரா மண்டல மந்த்ராஸ்ச க்ஷேத்ரம் த்ரவ்யாணி ஸாதகா:.**
**குருணா வேதிதவ்யாநி யதாவத் தன் நிபோத மே. – (மதங்காகமம்)**

சைவதீக்ஷைசெய்முறையில் ஆறு உறுப்புகள் குருவினால் அறியத்தக்கவை. அவை முறையே 1. முத்ரைகள் 2. மண்டலஅமைப்பு 3. உபதேசமந்திரங்கள். 4. செய்யுமிடம் 5. தேவையானபொருட்கள் 6. உபதேசம் பெறும் சீடர்கள். இவற்றை முதலில் குருவானவர் அறிந்து முடிவு செய்தபின் அருள்செய்வார்.

## தீக்ஷைக்கான கைமுத்திரைகள்.

**211. சக்திமுத்ரா பவேத் பூர்வம் பீஜமுத்ரா தத னந்தரம்.**
**ப்ரசாந்தா (ஆ)வாஹநீ சைவ ஸம்ஹாரீ பஞ்சமீ மதா.**
**– (மதங்கபாரமேச்வர)**

சைவதீக்ஷையில் ஆசாரியர்பயன் படுத்திடும் முக்கிய முத்திரைகள் ஐந்து. அவைமுறையே 1. சக்திமுத்ரா 2. பீஜமுத்ரா 3. ப்ரசாந்தா முத்ரா 4. ஆவாஹநீமுத்ரா 5. ஸம்ஹாரீமுத்ரா ஆகியவை குறிப்பிடத் தக்கவை.

## பஞ்சபூத பாவனைமுறை.

**212. பூதாநி தத்வ கர்பாணி பஞ்ச சின்ன யுதாநிச.**
**ஸ்வபாவ தேவ ஸம்ஸ்தான கலா மண்டல காரணை:.**
**வர்ண மந்த்ர குண ஸ்தான ப்ரமாணாதி யுதாநிச.**
**(ஆகமஞானரத்னாவளீ**

சைவாகமத்தின் 36 தத்துவங்களுக்குள் விளங்குகின்ற ஐந்து பெரும் பூதங்களையும் செயலில் கருதும்போது

அவைகளுக்கு உரியவற்றை எண்ணி பஞ்சபூதமண்டலங்களை பஞ்சகலாமயமாகக் கருதவேண்டும். அதற்கு ஒவ்வொரு பூதத்திற்கும் நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம் ஆகியவற்றிற்கு உரியதான பெயர், சின்னம், நிறம், இயல்பு, தெய்வம், இருப்பிடம், கலை, மண்டலம், வடிவம், காரணேச்வரர், மந்திரம், குணம்,இடம், அளவு, செயல்முறை, நட்பு, பகை, தோற்ற ஒருக்ககாரணம் முதலியவைகளுடன் கூடியவைகளாக பஞ்சபூதங்களை அறிதல் அவசியம்.

## ஆணவமலத்தின் இலக்கணம்.

**213. ததேகம் ஸர்வபூதாநாம் அநாதி நிபிடம் மஹத்.**
**ப்ரத்யாத்மஸ்த ஸ்வகாலாந்தா(அ)பாயி சக்தி ஸமூஹவத்.**

– (மிருகேந்திராகமம்)

உயிர்கள் தோருமுள்ள ஆணவமலமானது ஒன்றாகவும், அநாதியாகவும் உடனேயே உள்ள பெரியமலமாகவும், ஒவ்வொரு உயிர்களிடத்திலும் உரியகாலமுடிவில் அழியக்கூடிய ஆற்றலையுடையதுமாக ஒருவனுக்கு உள்ள வலிமைமுதுமையில் இல்லாதுபோவதுபோலவும் சக்தியைப்போல இருக்கும்.

## கன்மபாசத்தின் இலக்கணம்.

**214. தர்மாதர்மாத்மகம் கர்ம க்ரியதே தத் பலார்த்திபி:**
**கர்மதஸ்ச சரீராணி விஷயா: கரணாநி ச – (மிருகேந்திரம்)**

ஒவ்வொருவராலும் பயனைவிருப்புபவர்களால் அந்த செயலானது தர்மம் அதர்மம் என்பதாக இருவகையில் வினை (செயல்) வெளிப்படுகிறது. இதனால் புண்யமும் பாவமும் முறையே தோன்றிட அந்த ஒருவரின் புரிந்த வினையின் காரணமாகவே ஜீவர்களுக்கு உடல்களும் அனுபவப்பொருள்களும், துணைக்கருவிகளும் வந்து சேருகின்றன என்று அறியவும்.

## மாயாபாசத்தின்இலக்கணம்.

**215. மாயோபரி மஹாமயா சுத்தா (அ)சுத்தேதிச த்விதா.**
**மாயாதத்வம் ஜகத்பீஜம் அவிநாசீ அவ்யயாத்மகம்.**

சக்திபடைத்த இந்த மாயையில் பிரளயத்தில் அனைத்தும் அடங்கிட (அளக்கப்படுகிறது என்பதால் மாதி) ஒடுங்குகிறது பின்புபடைத்தலில்யாவையும் வெளிவருகின்றன என்பதை மா என்றும் யா என்றுமுள்ள இரு எழுத்துகள் உணர்த்திட மாயா என்று

பெயர் பெற்ற இது உலகத் தோற்றத்திற்கு (மட்குடத்திற்குமண்போல) வித்தாகவிளங்குவதும், அழியாததும், பலவகை வல்லமையுடையதும் மயக்குவதுமாக உலகப்பாசமாய்த் திகழ்வதே மாயை.

## பிந்துவில் உதித்த ஐந்துகலைகள்.

**216. நிவ்ருத்திஸ் ச ப்ரதிஷ்டா ச வித்யா சாந்திஸ் ச நாபஸீ.**
**புராணி பைந்தவாநீஹ பஞ்ச ப்ரோக்தான் யதப்பரம்.**

(காமிகாகமம்)

அனைத்திற்கும் தோற்றுவாயாக மூல முதல் காரணமான பிந்துவிலிருந்து ஐந்துகலைகள் தோன்றிபரவிவிளங்கியாவுமாய் உள்ளன. அவை முறையே நிவிருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி, சாந்தியதீதா. இது விண்மயமானது பரமாகாசரூபிணீ). இவை ஐந்து பூதவடிவங்களை உடையவை.

## தீக்ஷைஉபதேசமுறை.

**217. வ்ரதினாம் சைவ தத்காலே மந்த்ரம் தக்ஷிணகர்ணகே.**
**ஸ்த்ரீணாம் வாமகர்ணே ச உபதேசோ விதீயதே.** (காலோத்தராகமம்)

சைவதீக்ஷையின் போது விரதமிருக்கும் சிஷ்யர்களுக்கு அப்பொழுது முடிவில் சிவனாரில் மூலமந்த்ரம் பிராஸாதம் பஞ்சபிரம்மஷடங்கஅஸ்திரமந்திரங்கள் ஆசாரியரால் காதில் ரகசியமாக உபதேசமாய்க்கூறப்படும். இந்த உபதேசத்தை ஆண் சீடனுக்கு வலது காதிலும் பெண்சிஷ்யைக்கு இடதுகாதிலும் செய்யப்படவேண்டும் என்பது சைவாகமவிதிமுறையாகும்.

## துவாதசாந்தத்தில் இருப்பவர் சிவன்.

**218. தேஹாதீதம்து தம் வித்யாத் நாதாந்தம் த்வாதசாங்குலம்.**
**அந்தஸ்தம் தத் விஜாநீயாத் தத்ரஸ்தோ வ்யாபயேத் ப்ரபுः.**

(த்விசதிகாலோத்தரம்)

கடவுள் உடலுக்கு உள்ளேயும் வெளியேயும் இருக்கிறார். இதயகமலத்தில் உள்ளே இருப்பவராயும் தலை உச்சித்துளைக்குமேல் பன்னிருஅங்குல (கைசான்அளவு) உயரத்தில் உள்ள துவாதசாந்தம் எனப்படுகிற பரமாகாசத்தைக்கடந்து உள்ள இடம் ஓசையின் நீண்ட ஒலிஓட்டத்தின் முடிவான நாதாந்தத்தில் சிவம் எனும் பரம்பொருள் அருவமாய் உள்ளதாக அறியவேண்டும்.

## சிவபதமடையும் வழிமுறை.

**219. அபாவே பாவமாச்ரித்ய பாவம் குர்யாத் நிராச்ரயம்.**
**அமனஸ்கே மனக் க்ருத்வா ந கிஞ்சித் அபி சிந்தயேத்.**

(சித்தாந்ததீபிகா)

மூலாதாரம் முதலிய ஏழுஆதாரசக்ரஸ்தானங்களை ஆன்மாவானது மனதுடன் கூடிக் கடந்து அதற்குமேலலே ஆதாரமேதுமில்லாத நிராதார சூன்யஸ்தானங்களை அடைந்து பின்பு சேர்ந்து வந்துள்ள மனதையும் விலக்கிவிட்டுமேலேபயனித்து சிவபாதசலங்கைநாத வழியாய் மனோவாசம் கடந்துள்ள கடவுளை அடைந்து கடந்துவந்தசப்தஸ்தானங்கள் மனோபாவங்களை சிந்திக்கக்கூடாது.

## ஜீவனின் கர்மபோகம்

**220. அனேகபவிகம் கர்ம தக்தம் பீஜம் இவா (அ)ணுபி:.**
**பவிஷ்ய தபி ஸம்ருத்தம் யேநேதம் தத் ஹி போகத:.**
(கிரணாகமம்)

உயிர்களால் பல பிறவிகளில் செயல்பட்டு சேமிக்கப்பட்டுள்ள கர்மவினைகளானதும், அதனால் எதிர்வருங்காலங்களில் வரப்போகிற அவ்வினையின் பயன்களும் இவ்விதமான ஆகாமிகர்ம ஸஞ்சிதகர்மா எனும் இரண்டு மட்டும் (பிராரப்தம் நீங்கலாக) தீக்ஷை செயலில் பகவானால் சிவாக்னியால் வருத்த (சுட்ட) விதைபோல வினைகள் பயன்தரத்திறனற்றவைகளாக அல்லவா ஆகின்றன. மற்றது அனுபவத்தே அழிக்கவல்லது. இவ்விதம் கர்பந்தவிமோசனமறிக.

## பக்திக்கு இலக்கணம்.

**221. அன்யே(அ)பி யோக்யதா சேச லக்ஷணோபஹ்ருத ஸ்மிருதிம்.**
**பக்தித்வேந ஸமாக்யாதோ விக்ஞானாவயவம் ப்ருதக்.**

சைவசமயத்தில் பக்தி என்பது சிவனிடத்தில் மட்டுமே லயித்திருப்பதாகும். ஈச்வரனுடைய இலக்கணங்களோடு கூடி சிவசிந்தனை உடனிருந்தலும் சிவஞானம் பெற்றிருத்தலுமே (பக்குவமற்ற ஆன்மாக்களுக்கு) சிவபக்திக்குத் தகுதியாகும். சக்திநிபாத மேற்பட்டதகுதியே சிவனிடத்தில் மட்டுமே அசையாதுள்ளதே உண்மையான பக்தி என்பதாம்.



 

## சிவாகமத்தோற்றம்.

**222. சிருஷ்டிகாலே மஹேசாநः புருஷார்த்த ப்ரஸித்தயே.**
**விதத்தே விமலம் ஞானம் பஞ்ச ஸ்ரோதோ (அ)பிலக்ஷிதம்.**

(மிருகேந்திராகமம்)

உலகப்படைப்புகாலத்தில் மஹேச்வரரானவர் அனைத்து உயிர்களுக்கும் அறம்பொருள் இன்பம் வீடு எனப்படுகிற நால்வகையான விருப்பமான பயன்கள் ஜீவர்களுக்கு கிடைக்க வேண்டுமென்ற கருணையுள்ளத்தால் தனது தூய ஞானத்தை தன்னுடைய ஐந்து திருமுகங்களிலிருந்து வெளிப்படுத்தினார். அவைகளே சைவத்தில் சித்தாந்த ஆகமநூல்களாம்.

## சிவாகமத்தின் தனிச்சிறப்பு.

**223. புராணம் பாத்யதே வேதைः ஆகமைஸ் ச தது்க்தயः.**
**ஸாமான்யம் ச விசேஷம் ச சைவம் வைசிஷ்டிகம் வசः.**

(மோஹசூரோத்தரம்)

வேதங்கள், ஆகமங்கள் (துந்த்ரங்கள்)அதன் கூற்றுகள் புராணங்கள் இவைகள் யாவும் சாமான்யமான முதல்நிலைபொது அறிவு நூல்கள். சைவாகமங்களான காமிகம் முதலிய 28 சித்தாந்த நூல்வகைகள் விசேஷமான சைவசமயத்திற்கான சிறப்புநூல்களான சிவனாரின் வாய்மொழிவடிவமான சிவசாஸ்திர உத்தம விசேஷநூல்கள் என்றறிக.

## மாயையை இயக்கும் மஹாதேவன்.

**224. அசேதனஸ்ய மாயாதேः ப்ரவர்த்தகதயா பதிः.**
**ஸித்தஸ் ஸர்வார்த்தவித் கர்த்தா வ்யாபகः ஸததோதிதः.**

(விச்வஸாரோத்தரே.)

இவ்வுலகமானது அசேதனமாய் உள்ளதால் உபாதானகாரணமான மாயை தானே எதையும் தோற்றுவிக்காது என்பதால் அதனை செயல்படுத்துவதற்காக அறிவுடையவனான சேதனரூபரான, பதி என்பவன் ஒருதலைவன் உள்ளான். அவன் எல்லாவற்றையும் அறிந்தவனாயும் எங்கும் பரவியுள்ளவனாக கர்த்தா என்பவராக சிவன் எப்போதும் உள்ளவராக கூறப்படுகிறார்.



## ஆத்மானந்த சுகம்பெறுதல்.

**225. ஸன்மார்க்க ஞானினாம் யுக்தம் தஜ்ஞானம் ஸாதனம் பவேத்.**
**பிந்துர் நாதஸ் ச சக்திஸ் ச பரஸ் சைவ பராத்பரம்.**
**பிரம்ம ப்ராப்தி யவதிஸ் தேந சாத்மானந்த சுகம் பவேத்.**

(அசிந்த்ய விச்வஸாதாக்யம்)

சைவாகமநல்வழியில் வாழும் ஞானிகளுக்கும் சிவஞானமே முக்திக்கு ஸாதனமாக (காரணக்கருவியாக) உதவுவதாக உள்ளது. பிந்து, நாதம், சக்தி, பரம், பராத்பரம் என்ற பலநிலைகளை முறையே கடந்து சென்று முடிவில் பரம்பொருளை அடைந்து அதனால் ஆத்மானந்த சுகத்தை அனுபவிப்பவர்களாவார்கள்.

## ருத்ராக்ஷம்சொல்லின்பொருள்.

**226. துக்கநாசகரஸ் யாஸ்ய ருத்ரஸ்ய நயனாம்புபி:.**
**உத்பூதம்ச இஷ்டதம் பூதம் ருத்ராக்ஷ மிதி கீர்த்திதம்.**

உயிரினங்களின் துயரத்தைப்போக்குவதால் ருத்ரன் என்ற பெயருடைய வருடைய கண்களின் நீர்களிலினால் தோன்றியதும், விரும்பியதை அளிப்பதும், பரிசுத்தமானதும் ருத்ராக்ஷம் என்று கூறப்படுகிறது.

## உபவீதம் சொல்லின்விளக்கம்.

**227. ஸஹஜம் ப்ராம்மணோ யத்தத் ப்ராபகம் தத்ஸமீபகம்.**
**பவித்ரதம் ச யக்ஞாதௌ உபவீத மிதி ஸ்மிருதம்.**

பிரம்மத்துடன் தோன்றியதும், பரப்ரம்மத்திற்கு அருகில் ஜீவனை அடைவிப்பதும் புனிதத்தன்மையை யாகம் முதலிய செயல்களில் அளிப்பதாலும் புனித நூலாக பூணூல் என்பது உபவீதம் எனப்படுகிறது.

## ஆசார்யர் சொல்பொருள்.

**228. ஆசிநோதி ஹி சாஸ்த்ரார்த்தான் ஆசாரே ஸ்தாபயத் யபி**
**ஸ்வயம் ஆசரதே யஸ் ச ஆசார்யம் தம் ப்ரசக்ஷதே.**

சாஸ்திரங்களின் உட்பொருளை ஆராய்ந்து கூறுபவரும், சீடர்களை நல்லொழுக்க ஆசாரத்தில் இருக்கச்செய்பவரும், நல்லொழுக்க ஆசாரநடத்தைகளை தாம் கடைபிடிப்பவராகவும் எவர் இருக்கின்றாரோ அவரை ஆசார்யர் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

## மந்திரசக்தியே மகேசனின் மேனி.

229. மூலாத் யஸம்பவாத் சாக்தம் வபுர் நோ தாத்ருசம் விபோ:.
தத் வபுப் பஞ்சபிர் மந்த்ரைர் பஞ்சக்ருத்யோ பயோகிபி:.
– (மிருகேந்திராகமம்)

நமக்கு பரம்பொருளாய் எங்கும் பரவியுள்ள கடவுளுக்கு ஆதியும் அந்தமும் மூலமும் முனையுமில்லாததால் அவருக்கு நமக்குப் படைத்தல் காத்தல் ஒடுக்குதல் மறைத்தல் அருளுதல் ஆகிய ஐந்து வகையில் இறைவன் தொழிலாற்றி நமக்கு உதவுவதற்காக உள்ள ஐந்து மந்திரங்களால் அவருடைய திருமேனி சக்திமயமானது சாக்தம்வபு: என்கிறது.



## லிங்கத்தில் பரம்பொருள்நிலை.

230. பிந்துமத்யே கதோ நாதோ நாதமத்யே து மூர்த்ய:.
மூர்த்திமத்யே கதம் தத்வம் தத்வமத்யே கதம் சிவம்.
சிவமத்யே கதம் நிருத்தம் நிருத்தமத்யே து சாந்திகம்.
அதீதம் சாந்திமத்யே து சாந்தா தீதம் பராத்பரம். – (மகுடாகமம்)

சுத்தத்தோற்றுவாயான பிந்துவின் (ஒளியின்) நடுவில் நாதமும் (ஓசையும்) நாதத்தின் நடுவே உருவங்களும், அந்த மூர்த்தியின் நடுவிலே தத்துவமும் (இறைஇயல்பும்) அந்த தத்துவத்தின் (நடுவில்) உள்ளே சிவமும், அச்சிவத்தினுள்ளே இதயத்தில் நிருத்தமான ஆனந்தமும் (நடேசரும், அந்தஸச்சிதானந்த நிருத்தத்தினுள்ளே சாந்தர் எனும் ப்ரம்மமும், அதன் நடுவே சாந்தாதீதம் என்ற பராத்பரம் உள்ளது என்றும் சூக்ஷ்மஅதிசூக்ஷ்மநிலைகளில் ஒன்றுள் ஒன்றாய் உள்ளதை சைவாகம தெய்வநிலை ரகசியம் அறியவும்.

## போகமோக்ஷங்களின்ஸாதனங்கள்.

231. சர்யா சைவ க்ரியா யோக: கர்மிணாம் ஸாதகம் பவேத்.
சர்யா க்ரியா யோக யுக்தம் ஞானம் சைவ பவேத் ததா.
(அசிந்த்யவிச்வஸாதாக்யம்)

அறவழியில் செயல்படுவோருக்கு ஆகமங்களில் கூறப்படுகிற சரியை, கிரியை, யோகம் இவை உதவி செய்வதாக ஆகும். அப்பொழுது அவ்வாறே சரியை க்ரியை யோகம் இவை மூன்றுடன் கூடியதாக ஞானம் ஏற்படும். இத்தகைய சிவஞானமே மோக்ஷஸாதனம் ஞானமின்றி மோக்ஷம் ஏற்படுவதில்லை.

## பதிஞானத்தால் மட்டுமே முக்தி.

**232. பாசஞானான் ந முக்தி: ஸ்யாத் பசுஞானாத் ததைவ ச.**
**ஸர்வதஸ் ச யதோ முக்தி: பதிஞானேன கம்யதே.**

இறைவனோடு இணைந்து பேரானந்தப்பெருவாழ்வான முக்தியானது பாசஞானத்தினால் ஏற்படாது. அவ்வாறே பசுஞானத்தினால் ஏற்படாது. எல்லாவகையிலும் இறைவனை உணரும் பதிஞானத்தினால் மட்டுமே பரமுக்தி (பாசுவிடுதலை) கிட்டும்.

## ஜீவனின் சைதன்யரூபம்.

**233. சைதன்யம் த்ருக்கிரியாரூபம் ததஸ்த் யாத்மநி ஸர்வதா.**
**தச் சைதன்யாகதம் ஞானம் ஆத்மனி யுஷ்ண மிவானலே.**
**ஏகானேக ஸ்வபாவஸ் ச குணோ குணினி திஷ்டதி.**

(மிருகேந்திராகமம்)

ஒவ்வொரு ஆத்மாவினிடத்திலும் தெய்வாம்சமுள்ள சைதன்யம் என்பது ஞானம்கிரியை உருவமாக எப்பொழுதும் பிரியாமல் இருக்கிறது. அந்தசைதன்யத்தால் வந்தஞானமானது ஆத்மாவில் நெருப்பில்வெட்டம்போல ஒன்றோ பலவோ ஸ்வபாவமுடைய தெய்வகுணமானது குணமுடையஆத்மாவில் குணினி பிரியாமல் விளங்குகிறது. ஆன்மா இயல்பாகவே சைதன்யமுள்ளது.

## அருள்பவன் சிவன்ஒருவனே.

**234. அனாதௌ ஸதிஸம்ஸாரே காரணம் பரமேச்வர:.**
**ஸ்வபாவாத் ஏவ ஜந்தூனாம் அனுக்ரஹகர: பர:.**

இவ்வுலகவாழ்க்கையில் அனாதியாக உள்ள பாசமயக்கத்தில் இருந்து விடுபடுவதற்கு முக்தி பெற்றிட மூலமுக்கியமுதல் காரணம் பரமேச்வரனே ஆவார். எவ்வாறெனில், இயல்பாகவே மாசற்றவரான சிவனார் எப்பொழுதும் இயல்பாகவே அனைத்து உயிர்களுக்குமே அருளை வழங்கும் அனுக்ரஹம் செய்யும் மேலான பரம்பொருள் சிவனே.



## மந்திரசக்தியே மகேசனின் மேனி.

**229. மூலாத் யஸம்பவாத் சாக்தம் வபுர் நோ தாத்ருசம் விபோ:.**
**தத் வபுப் பஞ்சபிர் மந்த்ரைர் பஞ்சக்ருத்யோ பயோகிபி:.**

– (மிருகேந்திராகமம்)

நமக்கு பரம்பொருளாய் எங்கும் பரவியுள்ள கடவுளுக்கு ஆதியும் அந்தமும் மூலமும் முனையுமில்லாததால் அவருக்கு நமக்குப் படைத்தல் காத்தல் ஒடுக்குதல் மறைத்தல் அருளுதல் ஆகிய ஐந்து வகையில் இறைவன் தொழிலாற்றி நமக்கு உதவுவதற்காக உள்ள ஐந்து மந்திரங்களால் அவருடைய திருமேனி சக்திமயமானது சாக்தம்வபு: என்கிறது.

## லிங்கத்தில் பரம்பொருள்நிலை.



**230. பிந்துமத்யே கதோ நாதோ நாதமத்யே து மூர்த்ய:.**
**மூர்த்திமத்யே கதம் தத்வம் தத்வமத்யே கதம் சிவம்.**
**சிவமத்யே கதம் நிருத்தம் நிருத்தமத்யே து சாந்திகம்.**
**அதீதம் சாந்திமத்யே து சாந்தா தீதம் பராத்பரம். – (மகுடாகமம்)**

சுத்தத்தோற்றுவாயான பிந்துவின் (ஒளியின்) நடுவில் நாதமும் (ஓசையும்) நாதத்தின் நடுவே உருவங்களும், அந்த மூர்த்தியின் நடுவிலே தத்துவமும் (இறைஇயல்பும்) அந்த தத்துவத்தின் (நடுவில்) உள்ளே சிவமும், அச்சிவத்தினுள்ளே இதயத்தில் நிருத்தமான ஆனந்தமும் (நடேசரும், அந்தஸச்சிதானந்த நிருத்தத்தினுள்ளே சாந்தர் எனும் ப்ரம்மமும், அதன் நடுவே சாந்தாதீதம் என்ற பராத்பரம் உள்ளது என்றும் சூக்ஷ்மஅதிசூக்ஷ்மநிலைகளில் ஒன்றுள் ஒன்றாய் உள்ளதை சைவாகம தெய்வநிலை ரகசியம் அறியவும்.

## போகமோக்ஷங்களின்ஸாதனங்கள்.

**231. சர்யா சைவ க்ரியா யோக: கர்மிணாம் ஸாதகம் பவேத்.**
**சர்யா க்ரியா யோக யுக்தம் ஞானம் சைவ பவேத் ததா.**

(அசிந்த்யவிச்வஸாதாக்யம்)

அறவழியில் செயல்படுவோருக்கு ஆகமங்களில் கூறப்படுகிற சரியை, கிரியை, யோகம் இவை உதவி செய்வதாக ஆகும். அப்பொழுது அவ்வாறே சரியை க்ரியை யோகம் இவை மூன்றுடன் கூடியதாக ஞானம் ஏற்படும். இத்தகைய சிவஞானமே மோக்ஷஸாதனம் ஞானமின்றி மோக்ஷம் ஏற்படுவதில்லை.

## பதிஞானத்தால் மட்டுமே முக்தி.

**232. பாசஞானான் ந முக்தி: ஸ்யாத் பசுஞானாத் ததைவ ச.
ஸர்வதஸ் ச யதோ முக்தி: பதிஞானேன கம்யதே.**

இறைவனோடு இணைந்து பேரானந்தப்பெருவாழ்வான முக்தியானது பாசஞானத்தினால் ஏற்படாது. அவ்வாறே பசுஞானத்தினால் ஏற்படாது. எல்லாவகையிலும் இறைவனை உணரும் பதிஞானத்தினால் மட்டுமே பரமுக்தி (பாசுவிடுதலை) கிட்டும்.

## ஜீவனின் சைதன்யரூபம்.

**233. சைதன்யம் த்ருக்கிரியாரூபம் ததஸ்த் யாத்மநி ஸர்வதா.
தச் சைதன்யாகதம் ஞானம் ஆத்மனி யுஷ்ண மிவானலே.
ஏகானேக ஸ்வபாவஸ் ச குணோ குணினி திஷ்டதி.**

(மிருகேந்திராகமம்)

ஒவ்வொரு ஆத்மாவினிடத்திலும் தெய்வாம்சமுள்ள சைதன்யம் என்பது ஞானம்கிரியை உருவமாக எப்பொழுதும் பிரியாமல் இருக்கிறது. அந்தசைதன்யத்தால் வந்தஞானமானது ஆத்மாவில் நெருப்பில்வெப்பம்போல ஒன்றோ பலவோ ஸ்வபாவமுடைய தெய்வகுணமானது குணமுடையஆத்மாவில் குணினி பிரியாமல் விளங்குகிறது. ஆன்மா இயல்பாகவே சைதன்யமுள்ளது.

## அருள்பவன் சிவன்ஒருவனே.

**234. அனாதௌ ஸதிஸம்ஸாரே காரணம் பரமேச்வர:.
ஸ்வபாவாத் ஏவ ஜந்தூனாம் அனுக்ரஹகர: பர:.**

இவ்வுலகவாழ்க்கையில் அனாதியாக உள்ள பாசமயக்கத்தில் இருந்து விடுபடுவதற்கு முக்தி பெற்றிட மூலமுக்கியமுதல் காரணம் பரமேச்வரனே ஆவார். எவ்வாறெனில், இயல்பாகவே மாசற்றவரான சிவனார் எப்பொழுதும் இயல்பாகவே அனைத்து உயிர்களுக்குமே அருளை வழங்கும் அனுக்ரஹம் செய்யும் மேலான பரம்பொருள் சிவனே.



## சிவோஹம் பாவனையின் தேவை.

**235. உத்ஸ்ருஜ்ய ப்ராக்ருதம் பாவம் சிவோ(அ)ஹம் இதி பாவயேத்.
நாருத்ரஸ் ஸம்ஸ்மரேத் ருத்ரம் நாருத்ரோ ருத்ர மர்ச்சயேத்.
நாருத்ரக் கீர்த்தயேத் ருத்ரம் நாருத்ரோ ருத்ரமாப்னுயாத்.**

(ஸ்கந்தகாலோத்தரம்)

அடியார்கள் ப்ரகிருதியாயுள்ள மாயீயமானவெளி உலகசுகானுபவ ஸம்ஸார ஆசைகளை உலகப்பற்றைவிடுத்து தன்னை சிவாம்சம் உள்ளவனாக தம்முள் சிவமுறைந்துள்ளதை அறிந்து தன்னையே சிவமாக தானே சிவம் எனக்கருதவேண்டும் இந்த பிரம்மஞானத்துடன் தெய்வத்தை எண்ணி வழிபடவேண்டும் தன்னை ருத்ரனாக கருதாதவர் ருத்ரனை நினைக்கவோ பூசிக்கவோ, புகழவே கூடாது. எனவே தன்னிடம் ருத்ரபாவனை உடையவனே. ருத்ரனை அடைகிறான். தெய்வம் போல் புனிதனாகி தெய்வாம்சம் பெறவேண்டும்.

## நிர்மால்யப்ரஸாதம்மிக உயர்வானது.

**236. நிர்மால்யம் நிர்மலம் சுத்தம் நிர்மலத்வாத் அநிந்திதம்.
மத் புக்த சிஷ்ட நிர்மால்யம் பேஷஜம் இதி கத்யதே.
ஸம்ஸார ரோக ஹரணாத் பேஷஜம் பிஷக் ஈச்வர:.
சிவ ப்ரஸாத ஹேதுத்வாத் ப்ரஸாத இதி கீயதே.** (சைவாகமங்களில்)

மலம் என்றால் புனிதத்தைகெடுக்கும் மாசு என்பதாகும். நிர்மலம் என்றால் மாசற்றது புனிதமானது என்பது பொருள். எனவே சுத்தமான பொருளே தெய்வத்திடம் இருந்து மீண்டும் நம்மிடம் வருவதே நிர்மால்யம் என்பதாகும். சிவனால் அனுபவிக்கப்பட மீதமான நிர்மால்யமானது அருமருந்தாகும். இந்த உலகவாழ்க்கைப் பிறவித் துன்பத்தை நீக்குவதால் அது மருந்தாம். இத்தகை இனிபிறவாத நிலையை தந்து பிறப்பறுத்து அருளும் வைத்தியர் ஈச்வரனே. இது சிவனாரின் அருளைத்தரும் காரணத்தால் இது சிறப்பாக ப்ரஸாதம் எனப்படுகிறது. பிரஸாதம் என்ற சிறப்புப் பயனைத் தருவதாம்.

## ப்ரதக்ஷிணம் சொல்லின் பொருள்.

**237. ப்ரச்சினத்தி பயம் ஸர்வம் தகாரோ மோக்ஷஸித்தித:.
க்ஷிகாராத் க்ஷீயதே ரோக: ணகாரம் ஸ்ரீப்ரதாயகம்.
ப்ரதக்ஷிணார்ண ஸம்யோகாத் ப்ரதக்ஷிணம் இதி ஸ்மிருதம்.**

தெய்வத்தையும் பெரியோர்களை அவருக்கு வலமிருந்து இடமாக முறையே சுற்றி வரும் செயலுக்கு ப்ரதக்ஷிணம் (வலம்வருதம்)

என்று பெயர். இச்சொல்லில் உள்ள எழுத்துக்கள் இச்செயலின் அரியபயன்களை உணர்துபவை. ப்ர என்பது அனைத்துவகை அச்சத்தை நீக்குவதையும், த என்றஎழுத்து செய்பவருக்குபாவப்பிறவி விடுதலையான முக்தியைதருவதையும், க்ஷி என்ற எழுத்து அவரது உடலிலுள்ளநோய்கள் யாவும் அழிந்து ஆரோக்யம் ஏற்படுவதையும், ண என்பது செல்வத்தைத்தரும் என்பதையும் உணர்த்துபவைகளா இவை சேர்ந்து பிரதக்ஷிணம் என்ற பெயர் பெற்றுள்ளது. ஆதாலால் இப்பயன்களைப் பெற ஆலயங்களில் பலமுறை வலம் வரவேண்டும்.

## பில்வபத்ரஅர்ச்சனைப்பயன்.

**238. மாதாபித்ரோஸ் ச மித்ரஸ்ய பசூநாம் ப்ருத்யகஸ்ய ச.**
**சிசோர்வதம் க்ருதம் பாபம் அன்யத் ஸர்வம் ததைவச.**
**சிவார்ச்சிதேந பில்வேந வ்யபோஹதி ந ஸம்சய:.**

(சைவாகமம்)

பில்வஇலைகளால் சிவனை அர்ச்சிப்பது பெரும்பாவங்கள் விலகும். தாய், தந்தை, நண்பன், விலங்குகள், வேலைக்காரன், குழந்தை, பிற உயிரினங்கள் இவர்களைக் கொன்ற பாவங்கள் அனைத்தும் மூன்று இதழ்களுள்ள தூயவில்வமரஇலைகளால் சிவனை அர்ச்சிப்பதால் விலகுகிறது என்பதில் ஐயமில்லை என்று சிவாகமங்கள் கூறுகின்றன.

## நிவேதனத்திற்கு நெய்சுத்திதேவை.

**239. க்ருதயுக்தந்து நைவேத்யம் சிவாய சு நிவேதயேத்.**
**க்ருதஹீனந்து நைவேத்யம் ராக்ஷஸா(அ) பஹ்ருதம் பவேத்.**

நெய்யோடுகூடின ஹவிஸ்ஸை சிவனுக்கு நிவேதிக்கனும். நெய்சேர்ப்பதால் சுத்திகரிக்கப்படாதநைவேத்யம் தெய்வத்திற்கின்றி அது அரக்கர்களால் கொள்ளையடிக்கப்பட்டதாக ஆகிவிடும் என்று அறிக அன்னவகை நிவேதனங்களில் சிறிதளவு பசுவின் நெய்யை விட்டு நிவேதிக்கவும்.



## அர்க்யபாத்ரசங்கின்அங்கதேவதைகள்.

**240. சங்கமூலே தராதேவீ குக்ஷௌ து விஷ்ணுதைவதம்.**
**தாராயாம் கோரதேவம் து வலயம் ஸூர்யதைவதம்.**
**முகே ச ஸப்ததீர்த்தானி ப்ரவேசே சந்த்ரதேவதா.**
**த்ரிபாத்யாம் அதிதைவத்யம் பிரம்ம விஷ்ணு மஹேச்வரா:.**
**வ்ருத்தம் ஆதாரசக்திஸ் ச இத்யேதா: அதிதேவதா:.**

(சைவஸூக்ஷ்மசாஸ்த்ரே)

பூஜார்க்யபாத்ரமாயுள்ள சங்கினிலே அடியில் பூமிதேவியும், வயிற்றில் விஷ்ணுவும், தாரை (பாதையில்) அகோரசிவனாரும், வலயசுற்றில் சூரியரும், முகவாயில் கங்கை முதலியஏழுநதீ தீர்த்தங்களும், நுழைவாயில் சந்திரரும், முக்காலியில்மும்மூர்த்திகளும், வட்டத்தில் ஆதாரகுண்டலினீ சக்தியும் ஆகிய தெய்வங்கள் பலவும் சங்கில் இடம் பெற்றுள்ளதால் அதிலுள்ள நீரே புனிததீர்த்தம்.

## ஆலயபாத்திரவிலக்குவிதி.

**241. மிருத்பாண்டாநிச ஸர்வாணி மாஸாதூர்த்வம் பரித்யஜேத்.**
**தார்விஷ்டகா சிலா லோஹான் தல் லயாந்தான் பரித்யஜேத்.**

(ஸூக்ஷ்மாகமம்)

கோயிலில் பயன்படுத்திய மண்பாத்திரங்களை ஒருமாத காலத்திற்குமேல் நீக்கவேண்டும். மரம், சுட்டகல், கருங்கல், உலோகம் இவற்றாலான பொருட்களை அவை அழியும் வரை வைத்தது திருத்தம் செய்யாது நீக்குதல் முறை.

## ஹோமகுண்டஉருவப்பயன்.

**242. அச்ராக்ருதிர் யதா குண்டம் ஸர்வ கார்யார்த்த ஸித்தயே.**
**யோனிர் புத்ரகரம் ஜ்ஞேயம் தனுராபம் ரிபுக்ஷயம்.**
**சாந்திகம் ஸ்யாத் த்ரிகோணாபம் வர்ஷார்த்தம் சைவ வர்துளம்.**
**பூதாச்ரம் ரோக நாசார்த்தம் பத்மகுண்டம் தான்ய வர்தனம்.**
**ஷடச்ரம் மோக்ஷதம் ஜ்ஞேயம் குண்டானாம் ச பலம் க்ரமாத்.**

(ஸூக்ஷ்மே)

இறைவழிபாட்டு வேள்விச் செயலில் தீக்குண்டத்தின் உருவம் விருப்பப்பயனுக்கும் நோக்கத்திற்கும் ஏற்ப அமைந்து பயன்தரும். அதாவது நால்வேதரூபமான நாற்கோணம் ஸர்வகாரியங்களின் ஸித்திக்கானது. யோனி (அரசிலைரூபம்) மகனைத்தரும். வில் உருவஅரைவட்டவடிவம் எதிரிகளை அழித்திடும். முக்கோணம்

சாந்தி தரும் வட்டம் மழை தரும் ஐங்கோணம் நோய்களை நீக்கும். தாமரைப்பூவடிவம் வெற்றிதரும் எட்டுபட்டை உருவம் விரும்பியதை தந்திடும். ஏழுபட்டை உருவம் தானியவளம் தரும், ஆறுபட்டை உருவம் முக்தியைத் தரும் என்று குண்டவடி வங்களுக்கான சிறப்புப்பயன் அறியத்தக்கது.

## அக்னிவாயிரண்டில் ஏழுநாக்குகள்.

**243.** **ஹிரண்யா கனகா ரக்தா க்ருஷ்ணா வை தக்ஷிணாஸ்யகே.**
**சுப்ரபா சாதிரக்தா ச பஹு்ரூபா ச வாமகே.**
**வாருணே மத்யமே ஸௌம்யே யாம்யே பூர்வேக்னிகோசரே.**
**ஈசே ஹிரண்யாதி ஸ்யாத் ஜிஹ்வாஸ்தானம் ப்ரகல்பிதம். (ஸூக்ஷ்மே)**

அக்னிதேவனுக்கு 1.ஹிரண்யா 2. கனகா 3. ரக்தா 4. க்ருஷ்ணா . இவை வலதுவாயிலும் 5. சுப்ரபா 6. அதிரக்தா 7. பகுரூபா இடது வாயிலும் இவை ஏழும் முறையே மேற்கு, நடுப்பகுதி, வடக்கு, தெற்கு, கிழக்கு, தென்கிழக்கு, வடகிழக்கு ஆகிய ஏழு இடங்களில் ஹிரண்யாமுதலான ஏழுநாக்குகளின் இருப்பிடம் என்று அறிக.

## ஹோமஸமித்துகுச்சிவகை.

**244.** **பலாசோ தும்பரோ (அ)ச்வத்த: ப்லக்ஷோ ந்யக்ரோத ஏவச.**
**சமீ கதிர பில்வார்க்கா: அபாமார்க்கா (அ)ர்ஜு்நௌ ததா.**
**ஆம்ரோ வேணுஸ் குசா: தூர்வா கஞ்சீ ஸமிதஸ் ஸ்ம்ருதா:.**
**(காரணாகமம்)**

பொரசு, அத்தி, அரசு, இத்தி, ஆல், வன்னி, கருங்காலி, வில்வம், வெள்ளெருக்கு, நாயுருவி, மருதம், மாமரம், மூங்கில், அருகம்புல், தர்பை, சீந்தில் இவைகள் தேவதாஹோமத்திற்கான ஸமித்துவகைகள் ஆகும் (சமித்து=1 சாண்நீள நேர்குச்சிகள்)

## புண்யாஹம் என்ற சொல்லின்பொருள்.

**245.** **பும்காரப் பாபநாசஸ் ஸ்யாத் ண்யாகாரோ தேஹசுத்தித:.**
**ஹகார: ஸ்தானசுத்திஸ் ஸ்யாத் புண்யாஹம் து விதீயதே.**
**(ஸூக்ஷ்மாகமம்)**

நித்யநைமித்திக காம்ய கர்மாக்களில் ஸ்தானபிம்ப தேஹ த்ரவ்யாதிகளின் சுத்திகரித்தலுக்காக முதலாவது செய்யவேண்டிய செயலே புண்யாஹம் எனப்படுவது. இச்சொல்லில் உள்எழுத்துக்கள் மூன்றும் இச்செயலின் பயனை உணர்த்துவனவாகும், அதன்படி

புகாரமானது பாபநாசம் செய்வதையும்ண்ய என்ற எழுத்து உடலை சுத்திசெய்வதையும், ஹகாரமானது இடத்தை சுத்தி செய்வதையும் உணர்துவதால் இச்செயல்இப்பெயரால் புண்யாஹம் என்று அழைக்கப்படுகிறது.

## பூசையில் புஷ்பாஞ்சலிமுதலிய உபசரிப்புகள்.

**246.** **புஷ்பாஞ்ஜலி த்ரயம் க்ருத்வா தத்யாந் நித்ய பவித்ரகம்.**
**ருக்வேதம் ச யஜுர்வேதம் ஸாமவேதம் அதர்வணம்.**
**தத: சூத்ரம் புராணம் ச ஸ்தோத்ரம் ஸம்கோஷயேத் க்ரமாத்.**
**ந்ருத்தம் கீதம் ச வாத்யம் ச ப்ரதக்ஷிண மதப் பரம்**
**நமஸ்காரேண ஸந்தோஷ்ய ஜபம் ஸந்தர்ப்பயேத் புத:.** (சூக்ஷ்மாகமம்)

ஆலயசிவபூஜைமுடிவில் அதிகமலர்களை இருகைத்தலங்களில் அஞ்ஜலீமுத்திரையில் எடுத்துக்கொண்டுபலமுறை3/3 முறை புஷ்பாஞ்சலிசெய்யப்படவேண்டும். இதற்குப் பிறகு சந்தனம் புஷ்பம் அக்ஷதை, அருகுமுனை தர்பை முனை அர்க்யதீர்த்தம் இவற்றையுடன் மந்திரத்தால் நித்யபவித்திர புஷ்பத்தை ஸமர்பித்த பின்பு முறையே நால்வேதங்கள் (சிரௌத) சூத்திரம், புராணம், தோத்திரம் இவைகளை ஓதிமுழங்கிய பின்பு நாட்டியம், வாய்ப்பாட்டு, வாத்யஇசை, பிரதக்ஷிணம், நமஸ்காரம் இவைகளால் மகிழ்வித்து ஜபம் செய்து அளித்து தர்ப்பணம் செய்யவேண்டும்.

## வாஸ்துபூஜைசெய்வதன்தேவை.

**247.** **வாஸ்துபூஜா விதி: ப்ரோக்த: ஸர்வஸம்பத் ஸம்ருத்தித:.**
**வாஸ்துபூஜா விஹீனம் ஸ்யாத் தத் ராஷ்ட்ரம் ச விநச்யதி.**
**தஸ்மாத் ஸர்வப்ரயத்னேந வாஸ்துபூஜாம் ஸமாசரேத்.**
(சூக்ஷ்மாகமம்)

எந்த ஒரு இடத்தில் நிலம் சாந்த அல்லது கட்டடம், ஆலயம், சார்ந்த பணிகள் துவங்கும்போதும் செய்யப்படவேண்டிய நிலநாயகரான பிரம்மா முதலிய 53 தெய்வவழிபாட்டுமுறையே வாஸ்துபூஜா என்று பெயர்பெறும். இதனை முதலில் செய்யாது செய்யும் செயலானது செய்பவன் மக்கள் மன்னம் அரசு இவைகளை அழித்திடும். ஆகையால் அனைத்துவகையான பெருமுயற்ச்சியுடன் முதலாவது வாஸ்து பூஜையை செய்யவேண்டும்.



## மூவகையில் ஆத்மார்த்த சிவபூசைகள்.

**248. சுத்தம் ச கேவலம் மிச்ரம் ஆத்மார்த்தம் த்ரிவிதம் ஸ்ம்ருதம்.**
**சுத்தம் வா சக்திரஹிதம் கேவலம் சக்திஸம்யுதம்.**
**ஸௌராதி சண்டபர்யந்தம் மிச்ரம் சைவ ப்ரகீர்த்திதம். (சூக்ஷ்மே)**

அனைவரும் தமது வீட்டில் தினமும் தன் குடும்பநலன் குறித்து செய்கின்ற ஆத்மார்த்த சிவபூஜையானது மூன்று வகையாக சுத்தம், கேவலம், மிச்ரம் என்று பெயர் பெற்றதாயுள்ளது. சிவனை மட்டுமே பூசித்தல் சுத்தபூசை, எனவும், சிவனை சக்தியுடன் பூசித்தலுக்கு கேவலார்ச்சனம் எனவும், சூரியன் முதலாக சிவனை பரிவாரங்களுடன் சண்டேசர் பூஜை வசை செய்வது மிச்ரபூஜை என்றும் சிவபூஜை முறையை மூவகையாய் பகுத்துக்கூறுகிறது.

## வீட்டுபூசை-ஆத்மார்த்தபூசைப் பயன்.

**249. ஆரோக்யம் ஆயுள் கீர்த்திம் ச விஜயஸ்ய பலப்ரதம்.**
**ப்ரம்மஹத்யா விநாசார்த்தம் வீரஹத்யா விநாசனம்.**
**கோஹத்யாதி விநாசார்த்தம் ப்ரஜாவ்ருத்திகரம் பரம்.**
**ஸர்வகாம ப்ரஸித்யர்த்தம் ஸர்வயக்ஞ பலப்ரதம்.**
**ஆத்மார்த்த யஜனாத் ஸம்யக் ந பூதம் ந பவிஷ்யதி**

**(சூக்ஷ்மசாஸ்த்ரே)**

அனைவருக்கும் விசேஷதீக்ஷைபெற்ற எவரும் செய்கிறதான ஆத்மார்த்த பூஜையானது அருட்பயனாக நீண்டவாழ்நாளையும், புகழையும், எச்செயலிலும் வெற்றியையும், பிராமணர், வீரபுருஷன் பசுமாடு இவைகளைக் கொன்றமாபாவநீக்கத்தையும் தம் மக்கள் பெருக்கத்தையும், விருப்பப்பயனனைத்தையும், அனைத்துயாகப்பயனையும் தருவதாகும். இத்தகைய சிவபூசைக்கு நிகரான வேறு செயல் ஒன்று இருந்ததுமில்லை இருக்கப்போவதுமில்லை.

## சந்தனாதிஅஷ்டகந்ததிரவியம்.

**250. சந்தனாகரு கற்பூர குங்குமம் ரக்தசந்தனம்.**
**ஹிமதோயம் க்ருஷ்ணகந்தம் கோரோசன மத த்வயம்.**

பூசையில் சிவலிங்கத்தில் பூசுவதற்கேற்ற சந்தனக்கலவையானது, முறையே சந்தனம், அகில், பச்சகற்பூரம், குங்குமப்பூ, செஞ்சந்தனம், பன்னீர். புனுகு ஜவ்வாது, கோரோசனை அரகஜா ஆகியவற்றைக் கலந்து நறுமணக்கலவைச்சார்ந்து தயாரித்து சாத்துவது இஷ்டஸித்தியை அளிக்கும்.

## சிலையைவிட்டு தெய்வம்விலகக் காரணம்.

251. ஜீர்ணதேஹீ யதா தேஹம் த்யக்த்வா அன்யம் ப்ரதிபத்யதே.
ததா ஜீர்ணம் ச சலிதம் பேரம் முஞ்சந்தி தேவதா: (சுப்ரபேதம்54)

பழுதடைந்த உடலையுடைய உயிர் எவ்வாறு அவ்வுடலை விட்டு விலகி வேறுஉடலை பெற்றுக்கொள்கிறதோ, (அடைகிறதோ) அது போலவே தேவதைகள் பூசித்தசிலையானதுபழுதடைந்து குறைபட்டபொழுதும் அசைக்கப்பட்டபோதும் அந்தசிலயை விட்டு விலகுகிறார்கள். எனவே பூஜ்யபேரம் பழுதுஏற்படாமலும், அசைக்காமலும் புனிதம் கெடாமலும் காத்திடவேண்டும்.

## ஜீர்ணோத்தாரத்தின் தேவை.

252. ஏவ மாதீனி ஸர்வாணி ராக்ஷஸாத்யா விசந்தி ஹி.
ராக்ஷஸாச்சா(அ)சுராச் சாபி பிசாசா ப்ரம்ம ராக்ஷஸா:.
தஸ்மாத் ஸர்வ ப்ரயத்னேன ஜீர்ணோத்தாரம் து காரயேத்.

இவ்வாறு தேவதைவிலகிய சிலைகளில் ராக்ஷஸர்அசுரர், பிசாசுகள் பிரம்மராக்ஷஸர்கள் முதலான துஷ்டர்கள் உட்புகுந்து தீமைதருவர். ஆகையால் முழு முயற்சியினால் தெய்வச்சிலையை பழுது நீக்கிமேம்பாட்டைச் செய்து இலக்கணமும் புனிதமும் குறையாமல் காத்தலைச்செய்வது அவசியம்.

## ஆலயத்தை மேம்படுத்துவது அவசியம்.

253. ப்ராஸாதம் ப்ரதமம் லிங்கம் பீடம் ப்ராகார மண்டபம்.
கோபுரம் பரிவாரம் ச ஜீர்ணகாலே ததோ உத்தரேத்.

கோயில் மூலஸ்தானமுதல்லிங்கம், பீடம், ப்ராகாரம், மண்டபம் கோபுரம் பரிவாரசுற்றுப்பகுதிகள் இவைகள் பழுதுபட்டபொழுதில் உடனே வெகு விரைவில் அவற்றை சரிசெய்து மேம்படுத்தவேண்டும்.

## ஆலயஉறுப்பை சரிசெய்தல்.

254. ஸ்தூபீ நாஸீச சாலா ச கபோதம் கூட பஞ்ஜரம்.
பாதா (அ)திஷ்டான ஸம்யுக்தம் யத் ஹீனம் தத் விவர்ஜயேத்.
விமானம் பூர்வவத் க்ருத்வா ப்ரோக்ஷணம் விதிவத் குரு.

மூலக்கோயிலில் மேலிருந்து அடிவரையில் உள்ள பகுதிகளில், ஸ்தூபீ, நாசீ, சாலா, கபோதம், கர்ணகூடம், பஞ்ஜரம், பாதவர்கம், அதிஷ்டானம் இவையுடன்கூடியக்கோயிலில் எந்தப்பகுதி

பழுதடைந்து, சிதைந்ததோ அதைமட்டும், பழுதுநீக்கி சரிசெய்து கோயிலைமுன்புபோலவே செய்து அதற்கு சம்ப்ரோக்ஷணத்தைச் செய்யவேண்டும் என்கின்றன சிவாகமங்கள்.

## பழுதடைந்ததை விலக்கும் முறை

**255. ஆவ்ருதம் சிவபக்தைஸ் து ஸ்துதி ஸ்தோத்ர ஸமன்விதம்.**
**ஸமுத்ரே ப்ரக்ஷிபேத் லிங்கம் நமஸ்காராந்த மந்த்ரகை:.**
**தடாகாதிஷு அசோஷ்யேஷு காத்வோர்வ்யாம் வாத நிக்ஷிபேத்.**
**தாருஜம் சேத் ததா(அ)க்னௌ து ஜலே லிங்கம் வ்யபோஹ்யச.**
**ப்ரதிலிங்கம் ச பீடம் ச க்ருத்வா பூர்வோக்த லக்ஷணை:.**
**ஸ்தாபயேத் விதிநா தீமான் ந்ருப ராஷ்ட்ர ஹிதாய வை.**

(சுப்ரபேதாகமம் 54ல்.18 20)

முற்றிலும் பழுதடைந்துவிட்ட லிங்கத்தை பக்தர்களுடன் துதிகளுடன் முறைப்படி ஸகலஉபசரிப்புடன் எடுத்துச்சென்று கடலில் போடவேண்டும். அல்லது நீர்வற்றாத குளம் ஏரிமுதலான நீர்நிலைகளிலோ, பூமியைக்குழிதோண்டி அதிலோபோட்டோ மூடிமறைக்கவேண்டும். லிங்கசிலைமரத்தாலானால் நீரையும்நிலைத்தையும் தவிர்த்து, அந்த மரத்தாலான லிங்கத்தை பூசித்தசிவாக்னியில் இட்டு பஸ்மமாக்கவேண்டும். லிங்கத்தோடுகூடிய பீடத்தையும் இவ்வாறே விலக்கியும் சேர்த்தும், சரிசெய்தும் முன்புபோலவே ஸ்தாபித்திடுவதால் அரசனுக்கும் அரசுக்கும் நன்மை ஏற்படும். பழுதுற்றதான உருவச்சிலைகளுக்கும் இதுபோலவே விலக்குதலைச்செய்யவேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன.

## பழுதுநீக்கி புனரமைப்புமுறை.

**256. மிருத் தாரு ரூப பிம்பாநி உத்ருத் யாசு விநிக்ஷிபேத்.**
**உத்ருதே லோஹபிம்பே து தத்திரவ்யேன புனர் நவம்.**
**குர்யாத் ஸாமான்ய மேவம் து விசேஷம் அதுநா ச்ருணு.**
**த்ரவ்யோத் க்ருஷ்டேந கர்த்தவ்யம் தத்ப்ரமாணாதிகம் ததா.**
**இதரம் து ந கர்த்தவ்யம் க்ருதம் சேத் கர்த்ரு நாசனம்.**

மண்ணாலும் மரத்தாலுமான சிலைகளை உடனே எடுத்து விலக்கிடவும். பழுதுற்றது எடுத்தது உலோகச்சிலையானால் (அதனை உறுக்கி) அந்த மூலப்பொருளாலேயே மீண்டும் புதியசிலையை செய்திடவேண்டும். இதுபொது விதியாகும் சிறப்புவிதிமுறையாக, மேம்பட்டதரத்தினாலான மூலப்பொருளால் செய்வதானால், (அதற்கு மட்டும்) அளவுகூடுதலாக முன்னைவிட

சற்றுபெரியதாக செய்யலாம். அதே பொருளால் அளவை மாற்றி செய்யக்கூடாது. முன்போல் உருவமும் அளவும்இல்லாதவாறு சீரமைத்தால் செய்பவருக்கு அழிவு ஏற்படும்.

## பழுதுநீக்கிப்புதுப்பிக்க காலஅளவு.

**257. ஸர்வநாசம் பவேத் அதத்ர ஸர்வம் நிஷ்பல மேவஹி.**
**யதா மாஸாத் ததர்தேஷு அசுபாநி சுபாநி ச.**
**அபரீக்ஷ்ய ததா குர்யாத் உத்தாரம் ஸ்தாபனம் புன:.**

(சுப்ரபேதம்)

கோயிலில் பழுதடைந்த லிங்கம் அல்லது சிலைகளில் தொடர்ந்து பூசித்தலால் ஸர்வநாசம் ஏற்படும். செய்யும் பூசையாவும் பயனற்றதாகிவிடும். ஆகையால் (அவசரசிகிக்சையைப்போல) ஒருமாஸம் அல்லது அரைமாஸகாலத்திற்குள் (30/15 நாட்களுக்குள் தவறாமல்) பழயதை வெளியிலெடுத்து, மறைத்துவிலக்கிவிட்டு, புதியதை மாற்றாகவோ, பழயதை செப்பனிட்டுச் சரிசெய்தோ மீண்டும் ஸ்தாபனக்ரியைகளை ஆகமப்படி செய்திடவேண்டும் என்றறிக.

## திடீரெனஏற்படும் சிலைக்குறைக்குத் தீர்வு.

**258. ப்ரமாதாத் பின்ன சின்னாதி ஸம்பவே பூர்வவத் குரு:**
**ஸர்வேஷ் வங்கேஷு ஹீநம் சேத் புனராங்கம் நியோஜயேத்.**
**கண்டோர்த்வ ஹீனம் பிம்பம் து ஜீர்ணோத்தாரம் து காரயேத்.**
**திதி வார முகூர்த்தாநி நிரபேக்ஷண புத்திமான்.**
**அதிவாஸநாதி கார்யாணி ஸத்ய ஏவ ஸமாசரேத்.**
**ப்ரதிஷ்டாப்ய விசேஷேண ப்ராயச்சித்தம் ச்ருணுஷ்வ ஹி.** (சுப்ரபேதம்)

கோயில்பூசையில் இடையே சிலையில் உடைப்பு முறிவு, விரிசல் ஏற்பட்டால் எல்லாஉறுப்புகளிலும் குறைவுஇருந்தால் அதனை மீண்டும்சேர்த்து, சரி செய்யவேண்டும். கழுத்துக்குமேல் தலைவிலகி குறைஏற்பட்டால், அதனை விலக்கிடவேண்டும். சிறுகுறைகளை மேம்படுத்த வேண்டும். நல்லகாலத்தை இச்செயலுக்கு எதிர்பாராமல் உடனேயே அதிவாஸம்செய்து பிரதிஷ்டையை செய்தபின்பு, இதற்கான பிராயச்சித்தத்தை செய்யவேண்டும் என்கின்றன ஆகமங்கள்.



## பூசைக்கான மண்டலம் சொல்விளக்கம்.

**259. மண்டலம் ஸாரம் இத் யுக்தம் ஸர்வ தேவாலயம் க்ருத:.**
**மண்டலம் தேந விக்யாதம் சிவேந பரமாத்மநா.**
**ஸர்வ பாபாநி முச்யந்தே ததோ மண்டல தர்சநாத். (சுப்ரபேதம்)**

12 மாசபூசைகள் தீக்ஷைகள் முதலியவைகளில் வண்ணக்கோலமாக வரைகோட்டுச் சக்கரமாக அமைக்கப்படுகிற மண்டலம் என்பது, எல்லாதத்துவஉருவங்களின் ஸாரமாக விளங்குவதாகும். இது ஒருவரைபடம்போல விளங்குவதாய், ஸகலதேவர்களின் கோயிலாக இருப்பதாகும். அதனால்தான் சிவனால் மண்டலம் என்றபெயரில் கூறப்பட்டு, புகழ்பெற்றுள்ளது. இத்தகைய பூசித்தமண்டலத்தைப் பார்ப்பதாலேயே, மக்கள் எல்லாபாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர் அவ்வளவு பெருமைஉடையது என்று அறிக.

## ஆசார்யரின் அன்றாடசெயல்கள்.

**260. சிவார்ச்சனா (அ)க்னிகார்யம் ச ஜப த்யானம் ச சக்தித:.**
**வ்யாக்யாம் அநுக்ரஹம் கார்யம் ஏவம் பவது ஸர்வதா.**
**ஸர்வாதிகார பா[4]வம் ச தத்வா சிஷ்யஸ்ய தேசிக:. (சுப்ரபேதம்)**

சைவதீக்ஷையை செய்துவைக்கின்ற சிவாசார்யரானவர், தினமும் சிவபூஜை, ஹோமம், ஜபம், சிவத்யானம் இவற்றை முடியுமளவிற்கு செய்பவராயும், சமயப்ரச்சாரவிளக்க உரைநிகழ்த்துபவராயும், சிவபக்தர்களுக்கு அருள்புரிபவராயும், எப்பொழுதும் இருப்பவராக ஸர்வக்ரியைகளிலும் அதிகாரத்தையும் உரியசிவசத்பாவனையையும் சிஷ்யனிடத்தில் (மறைக்காமல் முழுமையாக) கொடுத்தும் வாழ்ந்திட வேண்டும் என்கிறது ஆகமம்.

## மகப்பேறுக்கான கர்பதான விதிமுறை.

**261. புத்ரார்த்த மேவ ஸங்கல்ப்ய ந போகாய கதாசந.**
**ஆர்த்தவாத் த்வாதசாந்தம் வா ஷோடசம் வா ப்ரசக்ஷதே.**
**ப்ரதானம் த்ரிதினம் த்யக்த்வா சதுர்த்த திவஸாகமம்.**
**யுக்மகே து புமான் வித்தி து அயுக்மே ஸ்த்ரீ ப்ரஜாததா.**
**சுக்லவ்ருத்யா து புருஷோ ரக்தவ்ருத்யா ஸ்த்ரீ ப்ரஜாயதே.**
**ரக்த சுக்லௌ ஸமம் சேத் து ஷண்டம் தத்ர ப்ரஜாயதே. (சுப்ரபேதம்)**

இல்லறத்தோர் ஸத்புத்திரனைப்பெற்றிடதன் பத்னியினுடைய பருவகாலக் குளியலுக்குப்பிறகு, மகவைப் பெரும்பொருட்டே ஸங்கமிக்க வேண்டும். தவிர ஒருபோதும் சுகபோகத்திற்காக ஒன்றுகூடுதல் ஆகாது என்கிறது ஆகமம். முதல் மூன்று நாட்களைத்

தவிர்த்து, நாலாம்நாள் முதல் 12ம்நாள் அல்லது 16ம்நாள்வரையில் தம்பதிகள்கூடிடவேண்டும். இரட்டைப்படையான 4,6,8,10,12ல் நாட்களில் கூடுவதால் ஆண்மகவும், ஒற்றைப்படையான 5,7,9,11,12,13,15ம் நாட்களில் கூடுவதால் பெண்மகவும், ஆணின் சுக்லமிகுதியால்ஆண்மகவும், பெண்ணின் சோணிதமிகுதியால் பெண்மகவும், இரண்டின் சமநிலையால் ஷண்டம் (பேடி) யும் ஏற்படும் என்பது அறியத்தக்கது. முறைப்படி ஸங்கமித்து வம்சவிருத்தியைச் செய்ய வேண்டும் என்று அறிக.

## ஆண்டவனைஅடையஉதவும் ஆறுவழிகள்.

262. தத்வாத்வா ப்ரதமம் வித்தி புவனாத்வா த்விதீயகம்.
மந்த்ராத்வா வை த்ருதீயம் து வர்ணாத்வா வை சதுர்த்தகம்.
பதாத்வா பஞ்சமம் ஜ்ஞேயம் கலாத்வா ஷஷ்டமம் ஸ்ம்ருதம்.
ஷட்விதைர் அத்வபிர் மார்க்கைஸ் ஸம்விசேத் ஏக மீச்வரம். (சுப்ரபேதம்)

தெய்வாம்சமாயும் எல்லாவடிவமாயும் உள்ள ஆறுவழிகளே ஷடத்வா எனப்படும். அத்வா என்பதற்கு வழிஎன்பது பொருள். இவைகளை அறிந்து, நன்கு புரிந்து நடப்பதாலேயே இறையருள்கிட்டும். அவை 1. தத்வாத்வா 2. புவனாத்வா 3. மந்த்ராத்வா 4. வர்ணாத்வா 5. பதாத்வா 6. கலாத்வா என்பவை. இந்த ஆறுவகைவழிகளால் ஒரே இறைவனை அடைந்து, பேரின்பம்பெறலாம் என்று ஆகமத்தால் அறியவும்.

## லிங்கத்தை மதித்துபோற்றும் முறைகள்.

263. லிங்கதர்சன காலே து புஷ்பம் க்ருத்வா ப்ரணம்ய ச.
ரிக்தபாணிர் ந கந்தவ்யோ தேவதேவஸ்ய ஸந்நிதௌ.
பத்ரபுஷ்பபலைர் வாபி ந சூன்யம் மஸ்தகம் ததா.
பஸ்மயுக்தே யதா த்ருஷ்டே லிங்கமுத்ராம் து தர்சயேத்.
சிவசின்ன த்ராஸ் சைவ பக்தியுக்தாஸ் ததன்வகா:. (சுப்ரபேதம்)

சைவசமய ஆசாரசீலமுள்ளவர் சிவலிங்கத்தைக்காணும்போது அதற்கு ஒரு பூவைவைத்து வணங்கவேண்டும், வெறுங்கையுடன் சிவனிடம் செல்லக்கூடாது. சிவலிங்கத்தின் தலையுச்சியில் ஒன்றுமில்லாமல் இருக்கக்கூடாது, சூன்யமாயுள்ளதைக் காணக்கூடாது. ஆகையால் மலர், இலை, பழம், இவைகளில்ஒன்றை சமர்பிக்கவேண்டும். ஒருவரைத் திருநீறுடன் காணும்போது, கைகளால் சிவலிங்க முத்திரையைக் காண்பிக்கவேண்டும். சிவசின்னங்களை எப்பொழுதும் அணியவேண்டும். சிவனிடம்பக்தியுடையவராய்

அதைப்பின்பற்றி செல்லவேண்டும். இவையே ஒருசைவசமயிக்கான ஆசாரவிரதமும் சிவலிங்கம் மற்றும் சாத்திரத்தை மதிப்பதுமாகும் என்று அறியவும்.

## சிவ என்பதே யாவினும் மூலமந்த்ரம்.

**264. ஸர்வேஷா மேவ தத்வாநாம் மூலம் சிவ இதி ஸ்மிருத:**
**தஸ்மான் மூலம் இதி ஞேயம் மூலமந்த்ரஸ் தத் உச்யதே.**

(வாதுளசூத்தாக்யம்)

தத்துவங்கள் அனைத்திற்கும் (36க்கும்) மூலமாய், முதலாய், அடிப்படைக்காரணமாய் விளங்குவது, சிவ என்பதாக (சிவதத்வமாக) அறியத்தக்கது. ஆகையால் சிவ என்பதே ஆதிமூலம் என்றும் மூலமந்திரம்என்றும், அறியத்தக்கதாகிறது. சிவமந்திர ஐந்து எழுத்துகளில் சிவ என்ற இருஎழுத்தே மூலம் என்று அறியதக்தக்கது. இதனால் யாவரும் எப்பொழுதும் சிவ சிவ என்று ஜபிக்கலாம்.

## பஞ்சாக்ஷரமும் ஷடக்ஷரமும்.

**265. நமச் சிவாய பஞ்சார்ணம் ஏதத் பஞ்சாக்ஷரம் ஸ்மிருதம்.**
**ப்ரணவேந ஸமாயுக்தம் ஜப காலே ததோ (உ)ச்யதே.**
**ததா ஷடக்ஷரம் ப்ரோக்தம் ஸ்த்ரீ சூத்ராத்யைஸ்து வர்ஜிதம்.**

சைவஸித்தாந்தத்தில் நமசிவாய என்ற இந்த ஐந்து எழுத்துக்களுமே பஞ்சாக்ஷரம் என்று பெயர்பெறும் இதனை ஜபம் செய்யும் பொழுதில் ஓம் எனப்படுகிற ப்ரணவத்துடன் கூடியதாக அவ்வாறே ஓம் நமசிவாய என்று கூறப்படுகிறது. அப்பொழுது அது ஆறு எழுத்துள்ள ஷடக்ஷரமாம். பெண்களாலும் அதீக்ஷிதபாட்டாளிகளாலும் இம்முறை தவிர்க்கத்தக்கது. (சுப்ரபேதாகமயோகபாதம்3)

## ஐந்துவகை சிவப்ராஸாத மந்திரம்.

**266. ப்ராஸாதப் பஞ்சதா ஞேய: தத்பேதோ வக்ஷ்யதே அதுநா.**
**சுத்தோ மூலம் ததா தத்வம் ஆதி ராத்மேதி பஞ்சதா.**

(வாதுளசூத்தாக்யம்)

சிவனாரின் மூலமந்திரமே ப்ராஸாதம் என்ற சிறப்புப்பெயருடையது. இது ஐந்து வகைப்படும் அவை. 1.சுத்தப்ராஸாதம், 2.மூலப்ராஸாதம், 3.தத்வப்ராஸாதம், 4.ஆதிப்ராஸாதம், 5.ஆத்மப்ராஸாதம் என்பனவாம். இதுபல்வேறு தத்வக்காரணங்களுக்கும் காரியங்களுக்கும் ஏற்ப உயிர்மெய்கூட்டுஎழுத்துக்களாக அமைவதாகும். இவற்றை தீக்ஷாகுருமுகமாக மட்டுமே அறிவது ஆகமகட்டளை ஆகும்.

 

## இருவகையில் தேவீஆலயம்.

**267. ஸ்வதந்த்ரம் கேவலம் சேதி த்விவிதம் பரி கீர்த்திதம்.
ஸ்வதந்த்ரம் வீர மித்யுக்தம் பரிவாராதிபிர் யுதம்.
பரிவாராதி ஹீநம் யத் கேவலம் சேதி கத்யதே.** (அம்சுமதாகமம்)

தேவியின் ஆலயமானது ஸ்வதந்த்ராலயம் என்றும் கேவலாலயம் என்றும் இருவகைப்படும். இவையே ஸ்வதந்த்ரசக்தி ஆலயம், வீரசக்தியாலயம் ஆகும். பரிவார தெய்வங்களுடன் கூடியுள்ள கோயில் ஸ்வதந்த்ரசக்த்யாலயம், என்றும், பரிவாரமாக சுற்றுதெய்வ மில்லாதவாறு தனியே தேவி மட்டும் உள்ளது கேவலசக்த்யாலயம் என்றும் ஆகமங்கள் கூறப்படுகிறது.

## தீக்ஷைசெயலின் முக்யமூலப் பயன்.

**268. ஸபாசத்ரய விச்லேஷம் சிவத்வம் வ்யஜ்யதே யயா.
க்ரியா ஸா கத்யதே தீக்ஷா பக்தி வைராக்ய லக்ஷணா.**

(ரௌரவம்)

சைவசமயத்தில் எந்தஒரு (தீக்ஷைஎன்ற) செயலால் பத்தஆத்மாக்களுக்கு **ஆணவம், கர்மம், மாயை,** என்ற மூன்றுவகை பாசத்திலிருந்தும் விடுதலை ஏற்படுவதாலும், சிவனுடைய ஸர்வக்ஞத்வம் முதலான இறைவனின் எட்டுவகைகுணங்கள் வெளிப்படுவதாலும்,சிவனிடத்தில் அகலாத உறுதியான பக்தி, வைராக்யம் உள்ளது என்பதற்கு இலக்கணமாக உள்ளதாலும், இந்த செயல் **தீக்ஷை** என்றபெயரால் அழைக்கப்படுவதாகிறது, என்பதை அறியவும். இந்த மூவகையான அரியபயனைப் பெறவும் வழிபடத் தகுதிபெறவும் தீக்ஷை அவசியம்செய்து கொள்ளுமாறு ஆகமம் கட்டளையிடுகிறது.

## சைவதீக்ஷிதனின் அடையாளம்.

**269. தஸ்மாத் ஞானம் ச பக்திஸ் ச வைராக்ய மிதி ச ஆத்மனः.
தீக்ஷிதஸ் யேஹ சின்னானி பசோஸ் த்வேதாநி நாஞ்ஜஸா.**

(ரௌரவாகமம்)

சமயநெறியில் தீக்ஷை செய்யப்பெற்ற ஆன்மாவிற்கு இருக்க வேண்டிய இலக்கணம் முக்திஸாதனமான சிவனைப்பற்றிய பதிஞானம், பக்தி, வைராக்யம் என்பவை. இவையே தீக்ஷிதனின் அடையாளம். அக்ஞானத்துடன் கூடிய பசுக்களான சாதாரணமான பத்தஆத்மாவிற்கு இவைமூன்றும் ஏற்படுவதில்லை.

## பந்தமோக்ஷங்களுக்கு காரணம் சிவனின்விருப்பமே.

**270. பசோ ரக்ஞதயா மாயா யோகோ போகாய கர்மணாம்.**
**ஸமாயாதீ (ஈ)ச்வரேச்சாதோ முக்திர் நாஸ்த்யான்யதா யத:**
**ததஸ் சுகாதிகம் க்ருத்ஸ்நம் போகம் புங்க்தே ஸ்வகர்மத:**
**ஸம்ஸாரீ ஸ பசுர் பத்தோ முக்தப் பாசத்ரயோஜ்ஜித:** (ரௌரவாகமம்)

பத்தாத்மாக்களுக்கு ஆணவஅறியாமையால் வினைப்பயன்களை அனுபவிப்பதற்காக மாயையின்சேர்க்கை ஏற்படுகிறது. அதனால் போகியாகிறான். சிவனாரின் விருப்பமான அருள் இல்லாமல் வேறு எதனாலும் முக்கதி என்பதில்லை. தன்வினைக்காரணத்தாலேயே பாவரும் சுகதுக்கங்கங்களையும் விரிவான சுகபோகங்களையும் அனுபவிக்கின்றனர். இவ்வாறு வினையால் கட்டுண்ட ஆன்மா ஸம்ஸாரீ பசு பத்தன் எனப்படுகிறான். மூவகைப்பாசங்களிலிருந்து விடுபட்டவனே முக்தன் என்று அறியவும்.

## குருவின் ஒப்பற்ற தனிச்சிறப்பு

**271. குருஸ் ஸ்ப்ருசதி ஹஸ்தேந யத் யத் பச்யதி சக்ஷுஷா.**
**சிவம் பவதி தத் ஸர்வம் சிவாதேவ ப்ரஸாதத:.**
**ந லிப்யதே மலைநைவ பத்மபத்ர மிவா (அ)ம்பஸா**

(அசிந்த்ய விச்வசாதாக்யம்)

குருவருளின் ஆற்றல் ஈடு இணையற்றது. சிவனுருவாகவுள்ள ஆசார்யர் தனதுகையினால் எதை எதைத் தொடுகிறாரோ, அவர் எவற்றைக் கண்ணால் பார்க்கிறாரோ, சிவனாரின்அருளாலே அவையனைத்தும் சிவமாகவே ஆகிறது. இதனால் அந்த உடலும் உயிரும் மாசுடன் சேருவதில்லை. தாமரையிலையில் மேலுள்ள நீர்த்துளியைப்போல் பாசப்பற்று அற்று விளங்கும் என்பது குருவின் கண்டுதொடுதலின் தனிச்சிறப்பென்றறிக.

## உயிர்ப் பசுவின் இலக்கணம்.

**272. கிஞ்சிக்ஞோ மலிநோ பிந்ந: கர்த்தா போக்தா ஸ்வகர்மணாம்.**
**சரீரஸ்தோ விபுர் நித்ய: ஸம்ஸ்கார்யஸ் ஸேச்வரப் பசு:**

(ரௌரவாகமம்)

ஜீவன், உயிர், எனப்படுகின்ற ஆத்மாஎன்பது, சரீரத்திலிருப்பதும், சிற்றறிவுடையதும், மலமுடையதும், பதிக்கும் பாசத்திற்கும் வேறானதும், செயல்படுவத்துவதால் கர்த்தாவானதும், தன்வினைப் பயன்களை அனுபவிப்பதும், தோற்றமும் மறைவுமின்றி நித்யமானதும், வியாபகத்தன்மை உள்ளதும், எப்பொழுதும் தலைவுடன் கூடி

 

யிருப்பதும், பாசமுள்ளதால் பசு எனப்படுவதுமாக உள்ளதால், தீக்ஷை முதலியவற்றால், ஸம்ஸ்காரங்களைச் செய்து புனிதப்படுத்தத் தக்கதாகிறது. இவ்விதம் உயிரைப்பற்றி அறிந்திடவேண்டும்.

## பாசங்கள் மூன்றின் இலக்கணம்.

**273. பாசா: அபி த்ரயோ ஜ்ஞேயா: மலம் மாயா ச கர்ம ச.**
**மலம் சா (அ)சுத்தி: அக்ஞானம் தச் சைதன்ய நிரோதகம்.**
**மாயா கலாதி ப்ருத்வ்யந்தா தத்பவா தத்வ ஸம்ஹதி:.**
**தர்மா (அ)தர்மாத்மகம் கர்ம இத் யேதைர் பாசைர் யுதப் பசு:.**

(ரௌரவாகமம்)

பாசங்கள் மூன்றுவகையாக அறியத்தக்கவை. அவை மலம், மாயா, கர்மம் என்பவை. இவற்றில் மலம் என்பது அசுத்தமாய் அக்ஞானமாய் ஆன்மசைதன்யத்தை மறைப்பதாய் உள்ளது. மாயா என்பது அதிலிருந்து தோன்றியகலாதத்துவம் முதலாக ப்ருத்வீதத்துவம் வரையிலான தத்துவவ்ருத்திகளாயுள்ளது. கர்மம் என்பது நல்வினை தீவினைகளான தர்மம், அதர்மம் என்ற இருவகைவினைகளுமாகும். இந்த மூன்றுவகையானபாசங்களையும் கொண்டுள்ளதால் ஆன்மாவானது பசு எனப்படுவதாக அறியத்தக்கது. இந்த பசுத்தன்மை நீக்கப்படவேண்டும்.

## ஆசார்ய இலக்கணம் (துறைத்தகுதி)

**274. க்ரியாதி ஞானபர்யந்த சாஸ்த்ரேஷு க்ருதநிச்சய:.**
**க்ரியாபாதே து நிபுண: சர்யாபாதா (அ)நுவர்த்தக:.**
**யோகபாதே க்ருதா (அ)ப்யாஸோ ஞானபாதா(அ)நுரஞ்ஜக:.**
**ஹேயோபாதேய தத்வக்ஞ: தத்வார்த்தே ஸம்வ்யவ ஸ்தித:.**

(சுப்ரபேதாகமம்)

சைவசமயத்தில் ஒருவருக்கு தீக்ஷையைச் செய்திடும் ஆசார்யரானவர் சைவாகமமரபுத்துறைத்தகுதிகளாக, முறையே சைவாகமங்களினுடைய நான்குபாத விஷயங்களில் எதையும் நிச்சயிக்கும்அளவுக்கு நிச்சயஞானவானாகவும், கிரியாபாதத்தில் செயல்திறனுள்ளவராயும், சர்யாபாதத்தை செயல்திற தினமும்அனுசரித்துப் பின்பற்றுபவராயும், யோகபாதத்தில் செய்யப்பட்ட பயிற்சியை உடையவராயும், ஞானபாதக்கொள்கைகளில் உறுதியான விருப்பமுள்ளவராயும், அறியவேண்டியவற்றை அறியும் தத்துவ நுண்ணறிவை உடையவராயும், தத்வார்த்தத்தில்

உண்மையில் நிலைத்திருப்பவராயும் இருத்தல் வேண்டும் என்கின்றன சிவாகமஙங்கள். யாவரும் தீக்ஷையைப்பெற இத்தகைய ஸத்குருவை அடையவேண்டும்.

## குருகண்ணால் பார்தருளும் தீக்ஷை

**275. சக்ஷு ருன்மீல்ய யத் தத்வம் த்யாத்வா சிஷ்யம் ஸமீக்ஷதே.**
**பாசபந்த விமோக்ஷாய தீக்ஷே(இ)யம் சாக்ஷுஷீ மதா**

(சித்தாந்தசேகரம்)

குருவானர் தனது கண்களைத்திறந்து எந்த தத்துவத்தைத் தியானித்து தனது சீடனைப் பார்க்கிறாறோ, இச்செயல் சீடனின் பாசக்கட்டுதலை நீக்குவதற்காகும். இந்தமுறையில் ஞானக் கண்ணால்பார்த்து செய்யப்படுவதால் இது சாக்ஷுஷீதீக்ஷை எனப்பெயர் பெறும்.

## குரு கையால் தொட்டு அருளும் தீக்ஷை.

**276. நிதாய தக்ஷிணே ஹஸ்தே சம்பும் ப்ரம்மாங்கஸம்யுதம்.**
**நிதத்யாத் சிஷ்ய சிரஸி ஸ்பர்சதீக்ஷா பவேத்இயம். (சித்தாந்தசேகரம்)**

குருதனது வலதுகையில் மந்திர பிரம்மாங்கங்களுடன் கூடிய, சம்புவை இருத்தி, சீடனின் தலைமீது, அந்த (சிவஹஸ்தத்தை) கையை வைத்த்துஅருள வேண்டும். இவ்வாறு வலது கையால்தொட்டு அருள்வதால் இது ஸ்பர்சதீக்ஷை எனப்பெயர்பெறும்.

## யோகதீக்ஷையும் ஹௌத்ரீதீக்ஷையும்.

**277. தத்வ த்யோதக யோகஸ்ய ப்ரதாநாத் யோகஜா பவேத்.**
**அக்னி கார்யமயீ ஹௌத்ரீ த்யேவம் தீக்ஷா நிருபிதா.**

யோகநிலையில் தத்துவங்களை அறிவிக்கின்றவகையில் சீடனுக்கு யோகத்தைக் கொடுப்பதனால் இந்ததீக்ஷை யோகஜாதீக்ஷை எனப்படும். ஹோமத்துடன் நெருப்பிடையேபூசையை ஆகுதியுடன் செய்வித்துசெய்யப்படுவது ஹௌத்ரீ தீக்ஷை எனப் பெயர்பெறும்.



## ஆசார்ய அபிஷேகத்திற்கு தகுதி.

**278. த்ரிபதார்த்தாம் சதுஷ்பாதாம் புக்தி முக்தி பலோதயாம். ஸம்ஹிதாம் யோ விஜாநாதி சிஷ்யோ அஸௌ ஸேகம் அர்ஹதி.**

சைவதீக்ஷைகளைச் செய்துகொண்டு, பதி, பசு, பாசம் ஆகிய மூன்று முக்கியப் பொருள்களை எடுத்துரைப்பதும், மக்களுக்கு சுகபோகத்தையும் மோக்ஷத்தையும் பயனாகத்தோற்றுவிப்பதுமான, (சைவாகமங்களை) சிவசம்ஹிதாமந்திரங்களை எந்தசிஷ்யன் நன்கு அறிந்தவராக உள்ளாரோ அவரே (ஆசானாக) ஆசார்யராக அதிகார அபிஷேகத்தை செய்துகொள்ளத் தகுதியுடையவராகிறார் என்று அறியவும். ஆதனால் மந்திரப்பயிற்சிசாதனை செய்வது அவசியமாகும்.

## அக்னியின் இருவகைஉறைவிடம்.

**279. அக்னிகுண்டைஸ் ஸமாயுக்தம் ஸ்தண்டிலைஸ் ச ஸமன்விதம் வாலுகைஸ் ச ஸிதைர் வாபி அக்னேர் ஆயதனம் த்விதா.**

(ரௌரவாகமம்)

அக்னிமூர்த்தியை ஆராதிப்பதற்கு அமைக்கப்படும் பூஜாஸ்தானமானது, குண்டஅமைப்பு, ஸ்தண்டிலஅமைப்பு, என்று இருவகைப்படும். கற்களால் கட்டப்படுவது குண்டம், ஆற்றுமணலை ஒருமுழுஅளவில் சமசதுரமாகப் பரப்பிவைப்பது (அக்னியை ஆராதித்தல்) ஸ்தண்டிலம் ஆகும்.

## கூடாத பஞ்சமாபதகச்செயல்கள். (விலக்கத்தக்கவை)

**280. ப்ரம்ஹஹத்திஸ் ஸுராபானம் ஸ்தேயம் குர்வங்கனாகமः. விசேஷபாதகாநி (அ)யத்ர தத்யோகாத் பஞ்சமோ பவேத்.**

பிராமணர்களை கொல்லுதல், மதுபானம் செய்தல் (தங்கத்தை) திருடுதல், பெரியோர்களின் மனைவியை விரும்புதல், இவர்களுக்கு உதவியாக சேர்ந்திருத்தல் ஆகிய இந்த ஐந்து செயல்களும் மிகக்கொடிய செய்யக்கூடாத ஐந்துவகை பெரும்பாவச் செயல்கள். பஞ்சமாபாதகம் என்று கூறப்படும் இவை யாவராலும் தவிர்க்கப்பட வேண்டியவை.



## ஆன்மார்த்தபூசையை அனைவரும்செய்க.

281. ஆத்மார்த்தம் பூஜயேத் ஸர்வே ஸோபஹாரம் சிவஸ்ய து.
தஸ்மாத் பத்ர பலைர் புஷ்பைர் அம்பஸா மனஸா புத:.

(சுப்ரபேதம் 20ல் 4)

வீட்டுபூசை, கோயில்பூசை என்னும் இவ்விரண்டில், முதலாவதான தன்னலம்குறித்த ஆத்மார்த்தபூசையை, சிவனுக்கு தினமும் உலகில் அனைவருமே செய்யவேண்டும். ஆகையால் அறிவாளியானவன் இயலாதபோது, மனதாலேயாவது இலை, மலர், கனி இவைகளை நீருடன் அளித்து, பூஜையை செய்யவேண்டும். தினமும் இறைவன்தாள்பணிதல் பிறவிக்கடமை என்று அறிக.

## யாகத்தில் குருவின் ஐந்து ஆபரணம்.

282. மகுடம் குண்டலம் ஹாரம் தீக்ஷாம்பர பவித்ரகம்.
சிவயாகார்ச்சனே காலே குரோப் பஞ்சாங்க பூஷணம்.

சைவயாகபூசையின்போது, அதைச் செய்திடும் குருவிற்கு, 1. தலைக்கு மகுடம், (கிரீடம்) 2. காதுக்கு 2 காதணிகள் 3. கழுத்துக்கு மாலை 4. காயச் செயலுக்கான, தீக்ஷாவஸ்த்ரம், (ஆடை) 5. கைவிரலுக்கு பொன்னாலான பவித்ரமோதிரம், இவை ஐந்தும், இருக்கவேண்டிய, ஐந்துஉறுப்புகளுக்கான, ஐந்துவகைபூஷணங்களாகும். இவை இல்லாமல் தரித்திரனாக (பூஷணஹீனனாக) பரமனைப்பூசித்தல் கூடாது என்று அணிகலனின் அவசியம் அறியத்தக்கது.

## யாககுண்டத்தின் எட்டு உறுப்புத்தேவை.

283. சிரோ ஹ்ருதய நாபிஸ் ச கண்ட யோனி த்ரி மேகலா:.
அஷ்டௌ குண்டாக்ருதிஸ் ஸா து அஷ்டமூர்த்தி ஸ்வரூபகம்.
ஏகபாக விஹீனம் சேத் தத் குண்டம் பரி வர்ஜயேத். (அஜிதாகமம்)

யாககுண்டத்திற்கு எட்டுஉறுப்புகளாக எப்பொழுதும் இருக்கவேண்டிய - தலை, இதயம், நாபி, கண்டம், யோனி, மூன்றுமேகலைகள் ஆகியவைகளை தவறாமல் பெற்றிருப்பதாக குண்டவுருவம் இருத்தல் அவசியம். காரணம் இவை எட்டும் பஞ்சபூதங்கள் சூரியசந்திராத்மாக்கள் என்ற எட்டு மூர்த்திகளின் அம்சமான உருவங்களாம். எனவே இவற்றில் ஒரு உறுப்புஇல்லாவிட்டாலும் அக்குண்டத்தை ஹோமத்திற்கு ஏற்காமல், அதை கட்டாயமாகநீக்கவேண்டும். குண்டம் இலக்கணப்படி இருப்பது மிகஅவசியம் என்று அறியவும்.

## நித்யபூசையில் பவித்ரம் சாத்துதல்.

**284. சிரஸ் யாரோப்ய தேவஸ்ய தூர்வாக்ஷத பவித்ரகம்.**
**ஸ்தூயமானம் விரிஞ்சாத்யைஸ் ஸந்துஷ்டம் பாவயேத் சிவம்.**

சிவபூசையில் முடிவில் தினமும் பூசகர் தனதுகையில் உரியமலருடன் கூடிய அருகம்புல் முனைகள், அக்ஷதைகளை வைத்துக்கொண்டு உரியமந்திரத்தால் சிவனுடைய (லிங்கத்தின்) தலைமீது அதனை ஏற்றிவைத்து பவித்ரபுஷ்பம் சாத்தியபின்பு, பிரம்மதேவன் முதலானவர்களால் சிவன் துதிக்கப்படுபவராகவும், மகிழ்ந்தவராயும் சிவனைக் கருதிடவேண்டும். பக்தியோடு இவ்விதமாக பவித்ரமளித்து வழிபடவேண்டும் என்று சிவாகமங்கள் அறிவிக்கின்றன. இம்மூன்று பொருள்களை ஒன்று சேர்த்து பக்தியோடளிப்பது சிறப்பு பயன்தரும் என்பது அறியத்தக்கது.

## பூசையில் கைமணியைஅடிக்கும்முறை.

**285. ஏகநாதஸ்து மோக்ஷாய விரக்தானாம் ப்ரசஸ்யதே.**
**கண்டாதாடன மேவம் ஸ்யாத் த்விநாதோ போகமோக்ஷத:.**
**ஜானு நாபேர் அதோ நாத: ந கர்த்தவ்யோ கதாசன.**
**நாபே ரூர்த்வம் து கர்த்தவ்யம் கண்டாதாடன முத்தமம்.**

சிவபூசையின் போது முக்தியைப்பெற விரும்புவோர்கள் ஒருநாதமாய் மணியைஅடிப்பது மோக்ஷத்தைத் தருவதாகும். சுகவாழ்வைவிரும்புவோர் (மக்களுக்கு) இருநாத (ஒலியுடன்) ங்களுடன் மணியை அடித்தல், போகம் மோக்ஷம் இரண்டையும் தருவதாகும். ஒருபோதும் மணியை தனது கால்முட்டி அல்லது தொப்புளுக்குக் கீழே இறக்கிப் பிடித்தபடி தாழ்த்திவைத்து மணியடித்தல் கூடாது. எப்பொழுதும் கைமணியை தனது நாபிக்குமேலே இருக்குமாறு, கையில்பிடித்தவாறு மணிஅடிப்பதே (மணி அடித்தபடி பூசைசெய்வது) உத்தமான முறையாகும். மணியோசையின்றி பூசை செய்யக்கூடாது என்று அறியவும்.



## பூசையில் தவிர்க்க வேண்டியவை.

**286. அதோ ந பந்தயேத் முத்ராம் நோ(உ)பரி ப்ராமயேத் கரம்.
ஸர்வதா குஸுமைக் குர்யாத் தேவஸ்யா (அ)சூன்ய மஸ்தகம்.**

பூஜகர் பூசையின்போது தனது கைமுத்திரைகளை கீழ்பகுதியில் காட்டக்கூடாது. ஆராத்ரிகம், நீராஜனம், ரக்ஷை, முத்ராகாலங்களில் தலைமேலே தனது கையைக் கொண்டுசென்று சுற்றக்கூடாது. எதிரில் மட்டுமே காண்பிக்கவேண்டும். எப்பொழுதுமே லிங்கத்தின் உச்சிபாகமானது வெறுமனே (சூன்யமாக) இல்லாதவாறு, மலர்களுடன்இருப்பதாகவே வைத்துக்கொள்ளவேண்டும். என்பவை கட்டாயவிதி முறைகள் என்பதை அறியவும்.

## புபுக்ஷுமுமுக்ஷுகள் நீராட்டும் முறை.

**287. பயோ ததி க்ருத க்ஷௌத்ர சர்க்கராத்யைர் அனுக்ரமாத்.
ஈசாதி மந்த்ரிதைர் புக்த்யை முக்த்யை தேஷாம் விபர்யய:.
தோய தூயாந்தரைஸ் ஸர்வைர் மூலேந ஸ்நாபயேத் சிவம்**

(ஸோமசம்புபத்ததி)

உலகில் சுகபோகவாழ்வைவிரும்பிடும் மக்கள் (புபுக்ஷுக்கள்), ஈசானம் முதலான ஐந்துமந்திரங்களால், பஞ்சஅமிருதங்களான பசுவினுடைய பால், தயிர், நெய், தேன், சர்க்கரை இவை ஐந்தையும், முறையே சிவனுக்கு அபிஷேகம் செய்யவேண்டும், உலகவாழ்வை வெறுத்து முக்தியைப் பெறவிரும்பிடும் மக்கள் முமுக்ஷுக்கள் இப்பொருள்களையே சர்கரை முதலாக பால்வரை (தலைகீழாக) முறையைமாற்றி, மந்திரத்தையும் ஸத்யோஜாதம் முதலான மந்திரங்களால் செய்வது இஷ்டப்பயனைத் தரும் என்பதை அறியவும்.

## பேசாமலிருந்தபடி செய்யத்தக்கவை.

**288. ஸ்நானே தேவார்ச்சனே ஹோமே போஜனே யாக யோகயோ:.
ஆவச்யகே ஜபே தீர: ஸதா வாசம்யமோ பவேத். (ஸோமசம்புபத்ததி)**

யாவரும் சிலவற்றை பேசாமல் மௌனமாயிருந்தவாறு செய்ய வேண்டும். அவை குளித்தல், தெய்வபூசையைச் செய்தல், ஹோமம் செய்தல், உண்ணுதல், யாககாலம், யோககாலம், அவசிய செயல்களான மலஜலாதிகளை வெளியிடும் காலம், மந்திரத்தை ஜபம்செய்யும்காலம், இந்தசெயல்களில் ஈடுபட்டுள்ளகாலங்களில் எப்பொழுதும் புலனடக்கமுள்ளவராகி பேசாமலிருக்கவேண்டும் என்று அறிக.

## ப்ரதக்ஷிணசெயலின்நாலுஉறுப்புகள்

289. பதாத் பதாந்தரம் கச்சேத் கரௌ சலனவர்ஜிதௌ
ஸ்துதிர் வாசா ஹ்ருதி த்யானம் சதுரங்கம் ப்ரதக்ஷிணம்.
ஆஸன்னப் பிரஸவா நாரீ தைலபூர்ணம் யதா கடம்.
வஹந்தீ சனைகர் யாதி ததா குர்யாத் ப்ரதக்ஷிணம்.

தெய்வத்தை வலம்வருவது என்னும்செயல் நான்கு உறுப்புகளுடன் கூடியதாகச் செய்யப்படுவதாகும். அதாவது பிரஸவிக்கும் தருவாயில் உள்ளஒருபெண்தனதுகையில் எண்ணைக்குடத்தை எடுத்தபடி ஒரு காலடியிலிருந்து மறுகாலடியை மெதுவாக மெள்ள மெள்ள அடியை எடுத்துவைத்து செல்வதுபோல நடந்துசென்றும், கைகளை வீசியபடியும் அசைக்காகதவாறும் அடக்கமாய்வைத்தும், 1. உடலால் நடத்தலையும், 2. வார்த்தையால் துதிசெய்தபடியும், 3. இதயத்தில் (உள்ளத்தில்) தெய்வ உருவத்தை தியானம்செய்தபடி கருதுவதையும், 4. கைகளை அசைக்காதவாறும் இந்நான்கையும் கடைபிடித்துசெய்வதே **தெய்வப்பிரதக்ஷிணம்** என்பதாக யாவரும் அறிந்து பின்பற்றவேண்டும். கோயில் தரிசனத்தில் அவசரத்தைக் காட்டக்கூடாதென்று அறிக.

## நமஸ்காரம் செய்வதன் பயன்.

290. தேஹே ஸம்ஸக்த ரேணூநாம் யாவந்தி பரமாணவ:.
தாவத் யுக ஸஹஸ்ரேஷு சிவ லோகே மஹீயதே.

கோயிலில் இறைவனை தரையில் விழுந்த தடிபோல் உடலால் கிடந்து, ஸாஷ்டாங்கமாய் நமஸ்காரத்தைசெய்வதனால், அப்போது அந்தஉடலில் எந்தஅளவுக்கு (அடியவர்களின்(பாகவதபாத)தூசுகள், மண்புழுதிகள்உள்ளனவோ.அந்தஅளவுக்கு ஆயிரம்யுகங்கள் (ஒரு துளிக்குஓரா யிரம்யுககாலம் வீதம்) சிவலோகத்தில் மீளாஅடிமையாக முக்தியின் பேரின்பத்தை அனுபவிப்பார்கள் என்று ஆகமஙங்கள் கூறுவதால் தவறாமல் நமஸ்காரத்தைச் செய்து பயனடையவேண்டும் இதனை –இரண்டுபாதங்கள், இரண்டுகைகள், மார்பு, தலை, வார்த்தை, மனம், புத்தி பார்வை ஆகிய பத்து உறுப்புகளுடன் செய்யப்படுவதே தாண்டம் எனும் தடிபோல் வீழ்ந்து வணங்கும் நமஸ்காரம் என்று அறியவும்.



## தேவிபூசையில் ஸௌபாக்ய த்ரவ்யங்கள்.

**291. ஹரித்ரா குங்குமம் சைவ ஸிந்தூராதி ஸமன்விதம்.**
**கஜ்ஜலம் கண்டஸூத்ராணி ஸௌபாக்ய த்ரவ்ய முச்யதே.**

(பரசுராமகல்பஸூத்ரம்)

தேவிகளையும், சுமங்கலிகளையும் பூசைசெய்யும்போது, மஞ்சள்கிழங்கு, குங்குமம், சிந்தூரப்பொடி, கண்மை, தாலிசரடுகயிறு மங்களகரமான ஆகிய இவைஐந்தும் பஞ்சமங்களப் பொருள்களாக ஸௌபாக்யத்ரவ்யங்களாக கூறப்படுகிறது. இவற்றை ஸமர்ப்பித்து அருளாசிபெறுவது அவசியம் என்று அறியவும்.

## ஆசார்யதக்ஷிணையின் அவசியம்.

**292. ஆசார்ய தக்ஷிணா ஹீநே கர்த்தா பர்த்தா விநச்யதி.**
**அத்ர யாகபலம் ஸர்வம் நிஷ்பலம் பவதி த்ருவம்.**

(பூர்வகாரணாகமம் 144)

விசேஷபூஜைகள் தீக்ஷைகள் முதலான தெய்வச் செயலைசெய்திடும் ஆசாரியருக்கு ஆகமங்களில் கூறப்பட்டுள்ள (பொருளை உரிய அளவு முறையில்) தக்ஷிணையானது அளிக்கப்படாதபொழுது, அதனால் செய்திடும் கர்த்தாவும், நிர்வாகியான பர்த்தாவும் அழிந்திடுவர். இவ்வாறு தக்ஷிணைவிடுபட்டால் அங்கு அந்தயாகத்தின் பயன் முற்றிலும் இல்லாற்போவதாய் அச்செயல்பயனற்றதாவது நிச்சயம். எனவே எச்செயலையும் ஆசார்யருக்கு தக்ஷிணைதந்து முடிக்கவேண்டும் என்று அறிக.

## பக்வபந்தனத்திற்கு உரியலிங்கவகை.

**293. பக்வாஷ்டபந்தனம் குர்யாத் மானுஷஸ்ய ப்ரஜாயதே.**
**ஆர்ஷஸ்ய தைவிகஸ் யைவ காணபஸ்ய ததைவ ச.**
**ம்ருதுபாகேந கர்த்தவ்யம் ஸ்வய முத்பூத லிங்ககே.**
**ஆர்த்ர பந்தனகம் குர்யாத் ஆசார்யஸ் ஸம்யக் ஏவது.** (காரணாகமம்)

உரியஎட்டுபொருட்களை நெய்யில் போட்டு காச்சி லேகியம்போல சமைத்து ஆசாரியர் இளஞ்சூட்டுடன் லிங்கபீடங்களின் இடைவெளியில் விட்டுப்பூசுவது அஷ்டபந்தனம் என்ற பக்குவபந்தனம் எனப்படும். இம்முறையை மானுஷலிங்கம், ஆர்ஷதலிங்கம், தைவிகலிங்கம், காணபலிங்கம் ஸ்வயம்புலிங்கம், இவைகளுக்கு செய்யவேண்டும் மற்றவகைக்கு காச்சாமல், உரலில்இட்டு இடித்து அபக்வபந்தனமாக சாத்துதல் விதிமுறை என்று அறிந்து அவசியம் பந்தனத்தை செய்யவேண்டும்.

## பக்குவபந்தன பசனமுறைப் பயன்.

**294. த்ரவ்யேஷு தைலம் ஸர்பிர் வா ஸம்யோஜ்ய பாசயேத் க்ரமாத்.**
**அதி பக்வே ப்ரஜா நாச: அபக்வே த்ரவ்ய நாசனம்.**
**பக்வம் வை பாசயித்வா (அ)த பந்தயேத் லிங்க பீடயோ:.**

(பூர்வகாரணம்)

ஆகமங்கள் கூறியுள்ள எட்டுபொருள்களைப்பொடித்து, அவற்றில் தூயஎள்ளினாலான நல்லெண்ணையை அல்லது பசுநெய்யை விட்டு, ஒன்றுசேர்த்து, இளந்தீயில் கொதிக்கவைத்துக் காச்சிக் கிளரிவிட்டு சமைத்து லேகியத்தைப்போல் இளகியதாகத் திரண்டநிலையில் எடுத்து லிங்கம், பீடம் இவற்றின் இடையில் சேர்க்கவும். இச்செயலில் அதிகமாகக் காய்ந்து முறுகிவிட்டால், அங்கத்தியமக்களுக்கு அழிவும், வேகாமல் இருந்துவிட்டால் அங்கு பொருட்களுக்குச் சேதமும், ஏற்படும். ஆதலால் உரிய பக்குவமாக காச்சி பீடபிம்பங்களிடையில் சேர்த்து, வலுவாக அழுத்திப்பூசி கட்டுதலை செய்யவேண்டும். இவ்விதம் காச்சியதையோ இடித்ததையோ வைத்து சேர்த்தல் அவசியம் என்று அறிக.

## ஆவாஹனாதி பஞ்சஸம்ஸ்காரம்.

**295. ஆவாஹநாதிபிர் பக்த்யா பரமேசம் ஸுபூஜயேத்.**
**ஆவாஹ்ய ஸத்ய மந்த்ரேண ஸ்தாபயேத் குஹ்ய மந்த்ரத:.**
**பசுரூபேண ஸாந்நித்யம் புருஷேண நிரோதனம்.**
**ஸர்வாவயவ ஸம்பூர்ணம் ஈசாநேந து பாவயேத்.** (சுப்ரபேதம், கிரணம்)

சிவபூசையில் இறைவனை ஆவாஹனம்முதலான, ஐந்து சடங்குகளால் முதலில் பூசிக்கவேண்டும். இவற்றை முறையே ஸத்யோஜாதத்தால் ஆவாஹனத்தையும், வாமதேவமந்திரத்தால் ஸ்தாபனத்தையும், அகோரமந்திரத்தால் ஸாந்நித்யத்தையும் தத்புருஷத்தால் நிரோதனத்தையும் ஈசானத்தால் அனைத்து அவயவநிறைவையும் கருதிசெய்யவேண்டும் என்று அறியவும்.

## பூனூல்அணியும் விதிமுறைகள்.

**296. நவ ஸப்த ஸரம் பஞ்ச த்ரி ஸரம் தேசிகஸ்ய து.**
**த்ரிசூத்ரம் த்ரிவ்ருதம் கார்யம் க்ரந்தௌ க்ருத்வா த்ரிவேஷ்டனம்.**
**உபவீதம் பவேத் ஏவம் க்ஷத்ரியாதி த்ரயஸ்ய து.**
**த்ரிஸரம் த்விஸராந்தம் ச கார்யம் ஏகஸரம் க்ரமாத்.**
**பூஜாதிகால மாத்ராந்தம் நோர்த்வம் தேஷாம் பவேத் இஹ.**

(சைவாகமங்கள், கிரணே)

ஆசாரியருக்கு பூணூலானது ஒன்பது இழை அல்லது ஏழு இழை (ஸரம் நூலிழை) அல்லது ஐந்து இழைகள் உள்ளதாக இருக்கவேண்டும். அல்லது சமய ஆசானுக்கும் பொதுவாக அந்தனருக்கும் ஆசார்யருக்கும் மூன்று இழையுடனும் பூணூல் இருத்தல் வேண்டும். அரசன், வைசியன், பாட்டாளி இவர்கள் மூவருணத்தவர்களுக்கும் முறையே, மூன்று ஸரம், இரண்டு ஸரம், ஒரு ஸரம் உள்ளதாக பூணூல் புனிதசெயலிலும், பூஜை முதலிய கர்மாவிலும், அக்காலத்திற்கு மட்டுமாக அணிவது அவசியம். அதற்குப் பிறகு அணிவது தேவையற்றதாககூடாதாம்.

## சிவமுத்திரைகள் ஐந்தில் சிவபக்தி.

297\. குரௌ லிங்கே (அ)க்ஷமாலாயாம் மந்த்ரே பஸ்மனி பஞ்சசு.
ஏதாஸு சிவமுத்ராஸு சிவபக்திம் ஸமாசரேத். (வாதுளசூத்தாக்யம்10)

குரு, லிங்கம், ஜபமாலை, மந்திரம், விபூதி, ஆகியவை ஐந்தும், சிவன்உறைந்துஅருளும் பஞ்சமுத்திரைகள் (திருமேனிகள்) எனப்படுபவை. இவைகளில் சைவசமயவிரதவாழ்கைவாழும்சம யிகள் சிவபக்தியைச் செய்யவேண்டும், என்று அறிந்து இவற்றை உயிருள்ளவரை நிந்திக்கக் கூடாது அறியவும்.

## பசுவணக்கத்தால் சிவலோகப்ராப்தி.

298\. வந்திதாஸி வஸிஷ்டேந விச்வாமித்ரேண ஜன்ஹுநா.
கபிலே! ஹர மே பாபம் யந் மயா துஷ்க்ருதம் க்ருதம்.
காவோ மமா(அ)க்ரதோ நித்யம் காவப் ப்ருஷ்டத ஏவ மே.
காவோ மே ஹ்ருதயே வாசி கவாம் மத்யே வஸாம்யஹம்.
ஏவம் நரோ ஜபேன் மந்த்ரம் த்ரிஸந்த்யம் நியதஸ் சுசி:
விமுக்தஸ் ஸர்வ பாபேப்யோ சிவலோகம் ஸ கச்சதி.

(சோமசம்புபத்ததி)

தினமும் கோமாதாவான பசுவை வணங்கிடவேண்டும் என்பது நமதுதினக்கடமை. அப்பொழுது இவ்வாறு, பூசித்து துதிசெய்து வணங்கவேண்டும். பசுவே நீ வசிஷ்டர் விச்வாமித்திரர், ஜன்ஹு முதலிய மஹரிஷிகளால் தினமும் வணங்கப்பட்டவளாக இருக்கிறாய். ஆதலால் உன்னைவணங்குகின்ற என்னுடைய, செய்யக்கூடாதவற்றைச் செய்ததால் ஏற்ப்பட்டபாவத்தை போக்குவாயாக கபிலைப்பசுவே! எனது வார்த்தையிலும் பசுக்களே, உள்ளன. பசுக்களின் நடுவிலேயே நான் தினமும் வசித்துவருகிறேன். என்னைப் பாவம்நீக்கி அருள்வாய் போக்குவாயாக என்றுகூறி

கசிந்துருகியவாறு யார் இந்ததுதிமந்திரத்தைக் கூறி மூன்று வேளையும் இடைவிடாதகொள்கை உறுதியுடன் தூயவனாயிருந்து வழிபடுகிறானோ, அவன் சிவலோகத்தை அடைந்து பேரின்பத்தை அனுபவிப்பான் என்று அறிந்து தினமும் பசுவை வணங்கவும்.

## பசுவுக்கு தினமும் பசும்புல்தரத் துதி.

**299. ஸௌரபேயி! ஜகன்மாத:! தேவானாம் அம்ருத ப்ரதே!.**
**க்ருஹாண வரதே! க்ராஸம் ஈப்ஸிதார்த்தம் ச தேஹி மே.**
**அம்ருதோன் மதனோத்பன்னே! ஸுரபே! லோகதாரிணி!.**
**இமம் க்ராஸம் க்ருஹாண த்வம் இதம் மே வ்ரதம் உத்தமம்.**

(சோமசம்புபத்ததி)

தினமும் யாவரும் பூசையை முடித்த பின்பு மதியம் சாப்பிடுவதற்குமுன்பாக, ஒருகைப்பிடிஅளவிற்கு, பசுமையான, சுத்தமான, அருகம்புல்லை, (தூர்வாமுனைகளை) பசுவிழுங்கும் அளவுள்ள சிறுகட்டை (ஒரு க்ராஸத்தை) மேலுள்ள துதியைக்கூறி பசுவைப்புகழ்ந்த பின்பு பசுவின்வாயில் கொடுத்தபின்பு வலம்செய்து வணங்கவேண்டும். மூவுலகிற்கும் சுகமளிக்கமுதலில்தோன்றியவை பசுக்களே என்று ஆகமங்கள்கூறுவதால் மூவுலக அன்னையாகக் கருதி பசுவை வணங்குதல் முறை என்றறிக.

## சிவலிங்கத்தில்ஷடக்ஷரம்.

**300. தாரம் லிங்கே ப்ரவிந்யஸ்ய பட்டிகாயாம் நகாரகம்.**
**மகாரம் ஊர்த்வ கஞ்ஜேது சிகாரம் வ்ருத்த மத்யமே.**
**அதக் கஞ்ஜே ச வாகாரம் அதப் பட்யாம் யகாரகம்.**
**ஏவம் ஷடக்ஷரம் ப்ரோக்தம் லிங்கரூபே விசேஷத:.** (ஆகமங்கள்)

சிவலிங்கமானது பிரணவம் மற்றும் பஞ்சாக்ஷரம் ஆகிய மந்திர வடிவமாகும். சிவலிங்கத்தில் பிரணவமும் (ஓம்காரம்) மேல்பட்டியில் நகாரமும், மேல்தாமரைஇதழ்வட்டத்தில் மகாரமும், மையக்கண்டவட்டத்தில் சிகாரமும் கீழ்த்தாமரை இதழ்வட்டத்தில் வாகாரமும், கீழ்பட்டியில் யகாரமும் இவ்வாறாக "ஓம் நமசிவாய" என்பதே லிங்கவடிவில் விளங்கி ஐந்தொழிலாற்றி அடியவர்களுக்கு அருள்கிறது.



